# காஞ்சாகிபு சண்டை

பதிப்பாசிரியர்

**நா. வானமாமலை,** எம்.ஏ., எல்.டி.,



மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை - 625 021.

நாட்டுப்பாடல் வெளியீடு

# கான்சாகிபு சண்டை

பதிப்பாசிரியர்

நா. வானமாமலை, எம்.ஏ.,எல்.டி.




மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

மதுரை - 625 021.

பதிப்புரிமை :
பதிப்புத்துறை
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்
மதுரை - 625 021.

Rights Reserved
Publications Division,
Madurai Kamaraj University,
Madurai - 625 021.

பதிப்பு எண் : 151

விலை : ரூபாய் 35/-

பதிப்பு விவரங்கள் :

1. பதிப்பாசிரியர் : நா.வானமாமலை

2. தலைப்பு : கான்சாகிபு சண்டை

3. பதிப்பு :

அ) இடம் : மதுரை காமராசர் பல்கலைக்கழகம்

ஆ) பதிப்பித்தோர் : பதிப்புத்துறை,
மதுரை காமராசர் பல்கலைக்கழகம்,
மதுரை - 625 021.

இ) ஆண்டு : 1998

ஈ) பக்கங்கள் : 119 + 12

உ) பொருள் : நாட்டுப்புறக் கதைப்பாடல்

ஊ) படிகள் : 600

எ) அச்சிட்டோர் : காஞ்சனா ஆப்செட் பிரிண்டர்ஸ்,
3, சுடலைமுத்துப் பிள்ளை சந்து,
மதுரை - 625 009.

# கான்சாகிபு சண்டை

## முதற்பதிப்பின் முன்னுரை

நாட்டுக் கதைப் பாடல்கள் பல தமிழ் நாட்டில் வழங்குகின்றன, இவை தமிழ் நாட்டின் தென்பகுதியில் வில்லுப்பாட்டு, கணியான் பாட்டு, கூத்து முதலிய கலையுருவங்களில் வழங்கி வருகின்றன. மதுரையில் லாவணி, ஒயிலாட்டம், அம்மானை முதலிய உருவங்களில் வழங்கிவருகிருன்றன. கோவை, சேலம் பகுதிகளில் குறவன் குறத்திப் பாட்டாக இவை வழங்குகின்றன. இக்கதைப் பாடல்களை நான்கு வகைகளாகப் பிரிக்கலாம். (1) தெய்வப் புனைகதைகள் (2) புராணக் கதைகள், (3) சமூகக் கதைகள், (4) வரலாற்றுக் கதைகள்.

முதல் வகையான தெய்வப் புனைகதைகள் கிராம தேவதைகளின் பிறப்பையும், வரலாற்றையும் பற்றிக் கூறுவன. முத்தாரம்மன், நீலியம்மன், முப்பிடாதி, சுடலைமாடன், கருப்பணசாமி முதலிய தெய்வங்களின் கதைகளை இவை கூறும். இக்கதைகளை இத்தெய்வங்களின் வழிபாட்டு நாட்களான கொடையின்போது பாடுவார்கள்.

இரண்டாவது வகைக் கதைகள் இந்துப் புராணங்களோடு தொடர்புடையவை. நாட்டுமக்கள் கற்பனை, புராணக் கதைகளை உருத்தெரியாமல் மாற்றி விடுகின்றன. மூலக்கதைகளிலுள்ள கதைத் தலைவர்களின் பெயர்களை மட்டும் மாற்றாமல் கதை நிகழ்ச்சிகள் முழுவதையும் கதைப் பாடகர்கள் மாற்றி அமைத்துவிடுகிறார்கள். இத்தகைய கதைப் பாடல்களுக்கு உதாரணங்கள்: ஏணிஏற்றம், பொன்னுருவி மசக்கை, அல்லிஅரசாணி மாலை முதலியன. இவை யாவும் பாரதக் கதையின் கதைத் தலைவர், தலைவியரை நாட்டுக் கதைப்பாடல் பாத்திரங்களாகக் கொண்டவை. ஆனால் மூலக்கதை நிகழ்ச்சிகள் எதுவும் கதைப் பாடல்களில் இல்லை. இவை யாவும் அக் கதாபாத்திரங்களைப் பற்றி நாட்டு மக்கள் கற்பனையில் எழுந்த கதைகளே.

சமூகக் கதைப் பாடல்கள், சாதிக் கலப்பு மணம், பெண்களுக்குச் சொத்துரிமை, சாதி அடக்குமுறை, பொருந்தாமணம், சாதி வரலாறுகள் முதலியவற்றைக் கதைப் பொருளாகக் கொண்டவை. முத்துப்பட்டன் கதை, சின்னத்தம்பி கதை, நல்லதங்காள் கதை, பிச்சைக்காரன் கதை முதலியவை இப்பிரிவிற்கு உதாரணங்கள்.

வரலாற்றுக் கதைப் பாடல்கள் வரலாற்று நிகழ்ச்சிகளைக் கருப் பொருளாகக் கொண்டவை. ஏதாவது ஒரு போரின் காரணங்கள், நிகழ்ச்சிகள் விளைவுகளைப் பற்றி இக்கதைப் பாடல்களில் பல கூறும். ஒரு கதைத் தலைவனின் கதை பல வரலாற்று நிகழ்ச்சிகளோடு தொடர்பு படுத்தப்பட்டுக் கூறப்படும். பொதுவாக இவை வீரத்தைப் புகழ்ந்து கூறுவனவாக இருக்கும். வீரம் தவிர வேறு குணங்களைப் பற்றியும் இவை புகழ்ந்து கூறலாம், ஒரு தலைவனின் உயர்வைப் புகழ்ந்து பேசுவதே இவ்வகையான கதை பாடல்களின் நோக்கமாக இருக்கும். தமிழ்க் கதைப் பாடல்களிலேயே இவைதான் அபூர்வமாக இருக்கின்றன. தற்காலத்தில் வழங்கிவரும் வரலாற்றுக் கதைப் பாடல்கள் சிலவற்றை நான் படித்திருக்கிறேன்., அவற்றுள் சில அச்சாகியுள்ளன. சில இன்னும் கையெழுத்துப் பிரதிகளாகவே உள்ளன. வரலாற்றுக் கதைப் பாடல்கள் சிலவற்றின் பெயர்களை இங்குக் குறிப்பிடுவோம்: ஐவர் ராஜாக்கள் கதை, வெட்டும் பெருமாள் கதை, ராமப்பய்யன் அம்மானை, இரவிக் குட்டிப்பிள்ளை போர், சிவகங்கை அம்மானை, சிவகங்கைக் கும்மி, பூலுத்தேவன் சிந்து, கட்டபொம்மன் கதைப்பாடல் முதலியன.

சில வரலாற்றுக் கதைப் பாடல்கள் அச்சிடப்பட்டுள்ளன, அவை எவை என்பதைக் கூறுவோம். ராமப்பய்யன் அம்மானை. இரு வெளியீடுகளாக அச்சிடப்பட்டுள்ளது. சென்னைப் பல்கலைக் கழகம் ஒரு வெளியீட்டையும், சரஸ்வதி மகாலிலிருந்து கிடைத்த பிரதியை சென்னை அரசினர் கையெழுத்துப் பிரதிகள் வெளியீட்டுக் கழகம் ஒரு வெளியீட்டையும், கொணர்ந்துள்ளன. முதல் வெளியீட்டிற்கு வையாபுரிப்பிள்ளை பதிப்பாசிரியர். இப்பதிப்பின் பிற்சேர்க்கையாக இரவிக்குட்டிப் பிள்ளை போர் என்ற கதைப் பாடல் வெளியாகியிருக்கிறது. சென்னை அரசினர் கையெழுத்துப் பிரதிகள் வெளியீட்டுக் கழகம், சிவகங்கை அம்மானை, சிவகங்கைக் கும்மி என்ற மருது சகோதரர்களைப் பற்றிய கதைப் பாடல்களை வெளியிட்டிருக்கிறது. கட்டபொம்மன் கதைப்பாடல், 1962-ல் என்னால் பதிப்பிக்கப்பட்டது. இவை தவிர, முன்னர்க் குறிக்கப்பட்ட தேசிங்குராசன் கதை, கான்சாகிபு சண்டை போன்றவை, பல பிழைகளோடு முன்னுரை, குறிப்புரை எதுவுமில்லாமல் பெரிய எழுத்தில் அச்சிடப் பட்டிருக்கின்றன. வரலாற்றுக் கதைப்பாடல்களில் நான்கை மதுரைப் பல்கலைக்கழகம் வெளியிடுகிறது. அவையாவன: கட்டபொம்மு கதைப்பாடல், கட்டபொம்மு கூத்துப்பாடல், ஐவர் ராஜாக்கள் கதை, கான்சாகிபு சண்டை ஆகியவை, இவை சிதைந்துபோன பழைய கையெழுத்துப் பிரதிகளையும், பழைய அச்சுப் பிரதிகளையும் ஒப்பிட்டு

மூலத்தை நிர்ணயித்து, எழுதப்பட்டன. சில வரலாற்றுக் கதைப் பாடல்களின் பெயர்கள் மட்டும் தெரிகிறது. ஆனால் அவை கிடைப்பதில்லை. உதாரணமாக, பூலுத்தேவன் சிந்து என்ற பெயருள்ள நாட்டுப் பாடல் இருப்பதாகப் பல நண்பர்கள் சொன்னார்கள். தேடிப் பார்த்தால் அகப்படவில்லை.

இக்கதைப் பாடல்களைப் பற்றிய ஆராய்ச்சி, தமிழக வரலாற்று ஆராய்ச்சிக்கும், இலக்கிய ஆய்வுகளுக்கும், சமுதாய மொழி இயல் ஆராய்ச்சிகளுக்கும் அவசியமாகும். இக்கதைப் பாடல்களைப் பற்றிய ஆராய்ச்சி தொடங்குவதற்கு இவை அச்சிட்டு வெளியிடப் படவேண்டும்.

தெய்வங்களைப் பற்றிய பாடல்கள் இன்னும் மக்கள் நிலைவிலிருந்து அழியாமலிருப்பதற்குக் காரணம், அத்தெய்வங்களின் வழிப்பாட்டு நாட்களில் அவை பாடப்படுவதே. இன்றும் கொடை நாட்களில் நெல்லை மாவட்டத்தில் அம்மன் கதைகளும், மாடன் கதைகளும் வில்லுப்பாட்டுக்களாகப் பாடப்படுகின்றன. ஆனால் வரலாற்று வீரர்கள் தெய்வங்களாக வணங்கப்படுவதில்லை. கட்ட பொம்மனுக்கோ, தேசிங்கு ராஜனுக்கோ கோவில்கள் இல்லை: கொடை நடத்துவதும் இல்லை. மிகப் பழங்காலத்து வீரர்களுக்குக் கோவில்கள் உள்ளன. ஆனால் அது அவர்களுடைய பெயரால் வழங்காமல் வேறு அம்மன் பெயரால் வழங்கும்., வெள்ளையரை எதிர்த்துப் போராடிய வீரர்களின் கதைகள், பிற்கால விடுதலைப் போராட்ட உணர்வை வளர்க்கும் தூண்டுகோலாக நாட்டு நினைவில் **(Folk Memory)** இன்னும் வாழ்கின்றன. அந்தப் போராட்ட நினைவுகள் இந்தப் பரம்பரையில் மறந்து வருகிறது. இக்கதைகளும் சிறிது காலத்தில் மறந்து போகலாம். ஆகவே இப்பொழுதே அவற்றை அச்சிட்டு நிலைநிறுத்துவது அவசியமான பணியாகும்.

கதைப் பாடல்கள் மக்கள் முன் பாடப்படுபவை. நாட்டுப் பாடகர்கள், தங்கள் முன்பிருக்கும் சபையை மகிழ்விப்பதற்காகப் பல அடிகளையும், கதைப்பகுதிகளையும் மாற்றிக் கூறுவார்கள். எனவே சில பகுதிகள் மாறுதலுக்குள்ளாகும். எனவே தமிழகத்தில் பல பகுதிகளில் கதையின் நிகழ்ச்சிகளில் வேறுபாடு காணப்படலாம்

நமக்குக் கிடைத்திருக்கும் வரலாற்றுக் கதைப் பாடல்கள் கூறும் நிகழ்ச்சிகளின் காலம் 15-ம் நூற்றாண்டின் நடுவிலிருந்து பதினெட்டாம் நூற்றாண்டின் முடிவு வரை ஆகும். இடையே சில பத்தாண்டுகளுக்கு இடைவெளி விழுகிறது. இக்கதைகளின் நிகழ்ச்சிக் காலத்தை மூன்று பிரிவாகக் கொள்ளலாம்.

முதற் காலம் : கன்னடிய மன்னர்களுக்கும், பாண்டிய அரசு மதுரையிலிருந்து அகன்றபின் தென் தமிழ் நாட்டில் பரவிய பாண்டியச் சிற்றரசர்களுக்கும் நடைபெற்ற போர்களின் நடை காலம்.

இரண்டாவது காலம் : மதுரை நாயக்கர்களுக்கும், இராம நாதபுரம் பாளையக்காரருக்கும் நடைபெற்ற போர்.

மூன்றாவது காலம் : பிரிட்டிஷ் ஆட்சி தமிழகத்தின் தென் பகுதியில் பரவியதை எதிர்த்து பாளையக்காரர்களது போர்கள்.

மேற்குறிப்பிட்ட மூன்று காலங்களில் 'கான்சாகிபு சண்டை மூன்றாவது காலத்தைச் சேர்ந்தது. இக் கதைப்பாடல் கான்சாகிபுவின் வரலாற்றில் கடைசி ஏழு ஆண்டுகளின் நிகழ்ச்சிகளைப் பொருளாகக் கொண்டது. கான்சாகிபுவின் பிறப்பு, வளர்ப்பு, இளமைக் காலம், தென்னாட்டுப் பாளையக்காரர்களோடு அவன் நடத்திய போர்கள், ஆகியவை பற்றிய விவரங்களை இக் கதைப் பாடல் மிகவும் சுருக்கமாக ஆரம்ப அடிகளில் கூறுகிறது. பண்ணையூரில் பிறந்த கான்சாகிபை மூஸாலாலி என்ற பிரெஞ்சியன் வளர்த்தான். பிரட்டன் என்னும் ஆங்கிலத் தளபதியிடம் இவன் வேலைக்குச் சேர்ந்தான். ஆங்கிலம் கற்று ஆற்காட்டு நவாபின் படையில் சேர்ந்தான். படிப்படியாக உத்தியோக உயர்வு பெற்று கான்சாகிபு, ஆற்காட்டு நவாபின் படையின் கமாண்டராக ஆனான். இந்தப் பதவியைத் தமிழில் கம்மந்தான், கும்தான் என்று கதைப்பாடல் அழைக்கும். இவனைப் பிரிட்டிஷ்காரர்கள் தங்கள் சேவகத்தில் அமர்த்திக் கொண்டனர். டச்சுக்காரர்கள், பிரஞ்சுக் காரர்களுக்கு எதிராகப் பிரிட்டிஷார் நடத்திய சில போர்களில் இவன் பங்கு பெற்று, வெற்றி பெற்றான். பரங்கிப் பெண்ணை மாஷா என்பவளை மணந்து கொண்டான்.

அக்காலத்தில் தமிழகத்தின் தென்பகுதி முழுவதிலும் வரி வசூலிக்கும் உரிமையைக் கிழக்கிந்தியக் கம்பெனி, நவாபிடமிருந்து குத்தகைக்குப் பெற்றிருந்தது. அதற்கு முன், பாளையக்காரர்கள்தான் நவாபிற்காக வரிவசூலித்து வந்தார்கள். அவர்கள் வசூலித்த வரியை நவாபிற்குக் கொடுப்பதில்லை. அதனோடு, ஒருவர் பாளையத்தில் மற்றொருவர் தலையிட்டு சண்டையிட்டுக் கொண்டார்கள். இவர்களனைவரையும் நவாப் ஆட்சிக்கு உட்பட்டு அடங்கி நடந்து வரிசெலுத்தச் செய்ய ஒருபடையோடு யூசப்கான் சென்னையிலிருந்து ஆங்கிலக் கம்பெனியரால் அனுப்பிவைக்கப்பட்டான். தென் பாளையங்களின் தலைவர்களான பூலுத் தேவனோடு பல போர்கள் நடத்தினான். முடிவில் அவருடைய கோட்டையான நெல்கட்டாஞ்செவலை அழித்தான். அதன்பின் பூலுத்தேவன்

முடிவு என்னவாயிற்று என்று தெரியவில்லை. கட்டபொம்மு நாயக்கரையும் அடக்கினான். இவர் ஜகவீர கட்டபொம்முவின் பாட்டன் ஆவார். பாளையக்காரர்களை ஒழுங்காக வரி செலுத்துமாறு செய்தான்.

இச் சேவைக்காகப் பிரிட்டிஷ் கம்பெனியார் இவனை மதுரை சுபேதாராக நியமித்தார்கள். மதுரையிலிருந்து தென்பகுதி முழுவதையும் நவாபின் பிரநிதியாக ஆண்டு, பிரிட்டிஷ் கம்பெனிக்காக வரி வசூல் செய்வது அவனது வேலை.

அவன் மதுரை சுபேதாராகி ஓர் ஆண்டிற்குப் பின் சிவகங்கைப் பாளையக்காரர் வரி செலுத்தாமல் இருப்பதைக் கண்டான். வரிப் பாக்கிக்காகத் திருப்புவனம் என்னும் ஊரை நவாபிற்குக் கொடுத்துவிட வேண்டுமென்று ஓலையனுப்பினான். இப்பொழுது சிவகங்கை பாளையக்காரருக்குத் தளவாயாக (மந்திரி) இருந்தவன் தாண்டவராயன். அவன் கான்சாகிபுவின் மனைவி மாஷாவிற்குப் பல பரிசுகளை அனுப்பி அவள் மூலம் கான்சாகிபுவை, சிவகங்கைப் பாளையக் காரர்மீது பகைமை கொள்ளாதிருக்கச் செய்ய முயன்றான். இம்முயற்சி பயனளிக்க வில்லை. "எப்படியும் திருப்புவனத்தை மதுரைச் சுபாவோடு சேர்த்துக்கொண்டே தீருவேன்" என்று கான்சாகிபு பிடிவாதமாயிருந்தான்.

தாண்டவராயன் சிவகங்கைப் பாளையக்காரனான முத்துவடுகனிடம் இந்த அபாயத்தைப் பற்றிக் கூறினான். தான் ஆற்காட்டுக்குச் சென்று நவாபிடம் கூறி, அவனை கான்சாகிபுவின் மீது நடவடிக்கை எடுக்கச் சொல்வதாகவும், தான் நாட்டிலில்லாதபோது முத்துவடுகன் காளையார் கோவிலுக்குப் போய் இருக்கவேண்டு மெனவும் சொன்னான். சிவகங்கைப் பாளையத்தோடு நேசமாயிருந்த பாளையக்காரர்களைப் படைதிரட்டி வைத்திருக்குமாறு செய்தியனுப்பி விட்டுத் தாண்டவராயன் ஆற்காட்டுக்குப் புறப்பட்டான். பெரிய படையோடு ஆற்காட்டுக்குச் சென்று நவாபைப் பேட்டிகாண வேண்டும் என்று செய்தியனுப்பினான். நவாபு அவனைச் சந்தித்தான். கான்சாகிப்புவைப் பற்றிய பல குற்றச்சாட்டுகளைத் தாண்டவராயன் நவாபிடம் கூறினான். பாளையக்காரர்களிடம் வசூலித்த பணத்தைக் கான்சாகிபு நவாபிற்கு அனுப்பவில்லையென்பதும், நவாப்பின் ஆட்சிக்கு ஆதரவாயுள்ள பாளையங்களோடு பகைமை கொண்டு அவற்றைத் தானே கைப்பற்றிக்கொள்ள முயன்று வருகிறான் என்பதும் முக்கியமான குற்றச்சாட்டுகள். பல காரணங்களால் நவாபு கான்சாகிபு மீது அதிருப்தி கொண்டிருந்தான். பாளையங்களிலிருந்து வசூலித்த வரியை ஆறு ஆண்டுகளாகக் கான்சாகிபு நவாபிற்கு அனுப்பவில்லை. தனது எதிரிகளோடு கான்சாகிபு ரகசியத் தொடர்பு கொண்டிருந்தான் என்று அவனுக்குச் செய்திகள் வந்தன. 'மார்ச்சண்டு' என்ற டச்சுக்காரனது உதவியோடு கான்சாகிபு

பீரங்கிகளை உற்பத்தி செய்வதாக நவாபின் ஒற்றர்கள் தெரிவித்திருந்தார்கள். இம்முயற்சிகளெல்லாம் தானே மதுரையின் மன்னனாக ஆட்சியைக் கைப்பற்றுவதற்கான நடவடிக்கைகளே என்று நவாபு நினைத்தான். கம்பெனியின் நிருவாகத்திலிருந்து தம்முடைய நிருவாகத்திற்குக் கான்சாகிபை மாற்றிவிட வேண்டுமென்று கம்பெனியை நவாபு வேண்டிக்கொண்டான். இவ்வேண்டுகோளைக் கம்பெனி ஒப்புக்கொண்டது. ஆனால் கான்சாகிபு நவாபின் மேலதிகாரத்திற்குள் வர மறுத்தான். நவாபு, கான்சாகிபுவை சுபேதான் பதவியிலிருந்து நீக்கவும், மதுரை ஆட்சியைத் தானே கைப்பற்றவும், ஒரு படைக்குத் தானே தலைமை தாங்கித் தெற்கு நோக்கி வந்தான். அதற்குத் துணையாகக் கம்பெனியும் ஒரு படையை அனுப்பிவைத்தது.

இவ்விரண்டு படைகளுக்கும் 'பிரிட்டன்' என்ற ஆங்கிலத் தளபதி தலைமை தாங்கினான். அவர்கள் திருப்புவனத்திற்கு வந்து கான்சாகிபுவின் தாக்குதலை முறியடிக்க முயன்றார்கள். கான்சாகிபு இரவில் இப்பெரிய படையைத் தாக்கிவிட்டு பகலில் ஓடிச்சென்று மறைந்து கொள்வான். இது தற்காலத்தில் கொரில்லாப் போர் என்றழைக்கப்படுவது போன்றது. திருப்புவனத்தில் தங்கியிராமல் நேராக மதுரை செல்வது என்று நவாபும் பிரிட்டனும் முடிவு செய்தனர். பல மாதங்கள் நவாபின் படையும், கம்பெனிப் படையும் மதுரைக் கோட்டையை முற்றுகையிட்டன. கோட்டைச் சுவரின் ஒரு பகுதியில் உடைப்பு ஏற்பட்டது. ஆனால் உடனே அது சீராக்கப் பட்டது. ஆறு மாதங்கள் முற்றுகை நீடித்தது. போரால் சாதிக்க முடியாததைப் பொன்னால் சாதிக்கத் தாண்டவராயன் முடிவு செய்து மதுரைத் தளவாய் சீனிவாச ராவுக்கும், மார்ச்சண்டுக்கும் லஞ்சம் கொடுத்துத் தந்திரமாகக் கான்சாகிபுவைப் பிடித்துக்கொண்டு வரச் செய்தான். கோட்டைக்கு வெளியில் கொண்டுவந்து அவனைத் தூக்கில் இட்டார்கள்.

கான்சாகிபு மதுரைச் சுபேதாரான பிறகு ஏழு வருஷங்கள் மதுரையில் ஆட்சி செலுத்தினான். அதன் பிறகு நவாபோடும் கம்பெனியோடும் பகைமை கொண்டு போர் நடத்தி வஞ்சகமாகச் சிறைப்படுத்தப்பட்டுத் தூக்கிலிடப்பட்டான். இந்தக்கால நிகழ்ச்சிகளைத்தான் கதைப்பாடல் கூறுகிறது.

ஆனால் மதுரைச் சுபேதாராவதற்குமுன் தென்பகுதிச் சீமைகளில் அவன் நடத்திய போர்களின் முடிவால் தென்பகுதிச் சீமையில் வரலாற்றில் பெரிய மாறுதல் ஏற்பட்டது. அவனுடைய வரலாற்றுப் பாத்திரத்தை அறிந்துகொள்ள அந் நிகழ்ச்சிகளைப் பற்றி அறிந்துகொள்ள வேண்டியது அவசியம்.

அவன் பிரிட்டிஷ் படைப் பிரிவின் தலைமையை ஏற்ற காலத்தில் பிரெஞ்சுப் படைகளை முறியடித்து பரங்கிப் பேட்டையிலிருந்து அவர்களை விரட்டினான். இந்த வெற்றியின் காரணமாக அவனைக் கம்பெனியார், வரி வசூலிப்பது மிகக் கடினமாக இருந்த தென்பகுதிக்கு அனுப்பி வைத்தார்கள். அச்சமயம் தென்பகுதியில் ஆற்காட்டு நவாபு பதவிக்காக இரு போட்டியாளர்களிடையே போர் நடந்து வந்தது. அவர்களுள் ஒருவன் சந்தாசாகிபு, மற்றொருவன் முகம்மதலி. திருச்சிக் கோட்டையைக் கைப்பற்றிக் கொண்டு முகம்மதலி தன்னை ஆற்காடு நவாபென்று பிரகடனம் செய்து கொண்டான். பிரெஞ்சுக்காரர்களும் ஆங்கிலேயர்களும் இப்போட்டியில் கலந்துகொண்டு தங்களது ஆதிக்கத்தைப் பலப்படுத்திக் கொண்டனர். பிரெஞ்சுக்காரர்கள் சந்தாசாகிபுவை ஆதரித்தார்கள். ஆங்கிலேயர்கள் முகமதலியை ஆதரித்தனர்.

திருநெல்வேலிச் சீமையில் தனது அதிகாரத்தை நிலைநாட்டுவதற்காக முகம்மதலி, அப்துல் ரகீம் என்ற படைத் தலைவனது தலைமையில் இரண்டாயிரம் வீரர்களை அனுப்பினான். அவர்களுக்கு உதவியாக இன்னிஸ் என்ற ஆங்கிலக் காப்டனுடைய தலைமையில் இரண்டாயிரம் வீரர்களைக் கம்பெனியார் அனுப்பி வைத்தனர். சந்தாசாகிபுவின் பிரதிநிதியென்று தன்னை அழைத்துக்கொண்ட ஆலம்கான் என்பவன் திருச்சிக் கோட்டையைக் கைப்பற்றி வைத்துக் கொண்டிருந்தான். காப்டன் கோப் என்ற ஆங்கிலத் தளபதி முகமதலிக்காக மதுரையைக் கைப்பற்ற முயன்று தோல்வியடைந்தான். பல முறைகள் தோல்வியடைந்த பின்னர், கம்பெனியார் 1755-ல் கர்னல் ஹீரான் என்ற தளபதியும் நவாபின் அண்ணனான மாபூஸ்கானும் பெரும் படையோடு மதுரைக்கு வந்தனர். மதுரை எதிர்ப்பில்லாமல் அவர்கள் கைவசமாயிற்று. ராமநாதபுரம் ராஜா இரண்டு துறைமுகங்களைக் கம்பெனியாருக்கு அளித்துச் சரணடைந்தார். ஹீரானும், மாபூஸ்கானும் ராமநாதபுரம் சீமையை விட்டுத் திருநெல்வேலிச் சீமைக்குச் சென்றனர். போகிற வழியில் பாளையக் காரர்கள் யாரும் எதிர்க்கவில்லை. திருநெல்வேலிச் சீமையிலிருந்த குத்தகைதாரர்கள் பணிந்து வரிப்பாக்கிகளைக் கொடுத்துவிட ஒப்புக் கொண்டனர். ஆனால் பல பாளையக்காரர்கள் நவாபின் சார்பில் கேட்கப்பட்ட கப்பத் தொகையைச் செலுத்த மறுத்தார்கள். இவர்களுள் முக்கியமானவன் பாஞ்சாலங்குறிஞ்சியின் பாளையக்காரன் கட்டபொம்மு நாயக்கன் (இவன் புகழ் பெற்ற கட்டபொம்முவின் பாட்டன்) பாஞ்சாலங்குறிச்சிக் கோட்டையை இடித்தெறியும் நோக்கத்தோடு ஒரு படை புறப்பட்டது. ஆனால் திருச்சிக்குத் திரும்பும்படி அதற்கு உத்திரவுகிடைத்தது. போகும் வழியில் கர்னல் ஹீரான் நெல்கட்டாஞ் செவலுக்குச் சென்று அக்கோட்டையை முற்றுகையிட்டான்

நெல்லைச் சீமையின் மேற்குப்பகுதிப் பாளையங்களுக்கு நெல்கட்டாஞ்செவல் பாளையக்காரன் பூலுத்தேவன் தலைவனாயிருந்தான்.

கர்னல் ஹீரான் நெல்கட்டாஞ் செவல் கோட்டையைப் பிடிக்க முடியாமல் படைகளைப் பின்வாங்கிச் சென்னைக்கு அனுப்பினான். அவன் நெல்லைச் சீமையில் வசூலித்த வரிப்பணம் இப்போர்களுக்காகச் செலவழிந்து போயிற்று. கர்னல் ஹீரான், குத்தகைதாரர்களிடம் லஞ்சம் வாங்கிக் கொண்டு குறைந்த குத்தகைக்கு திருநெல்வேலிச் சீமை வரிவசூல் முழுவதையும் விடுத்தான். சென்னைக்குத் திரும்பியதும் அவன் மீதிருந்த குற்றச்சாட்டுக்கள் இராணுவ நீதி மன்றத்தில் விசாரிக்கப்பட்டன. லஞ்சம் வாங்கிய குற்றச் சாட்டிற்காக ஹீரான் பதவியிலிருந்து விலக்கப் பட்டான். ஹீரான் பதவியிழந்ததிலிருந்து, திருநெல்வேலிச் சீமையிலுள்ள மறவர் பாளையக் காரர்கள் துணிவு பெற்று மீண்டும் கலகம் செய்தனர். சந்தாசாகிபுவினால் தென்பகுதியில் நிறுத்தப்பட்டிருந்த பட்டாணியப் படை வீரர்கள், மறவர் பாளையக் காரர்களோடு சேர்ந்து கொண்டார்கள். திருவாங்கூர் மன்னரும் 2000 பேர் கொண்ட நாயர் படையை அனுப்பிவைத்தார். மூன்று படைகளும் களக்காட்டில் சந்தித்தன.

பூலுத்தேவன் மேற்குப் பாளையங்களையும் கீழ்ப்பாளையங் களையும் இணைக்கும் நோக்கத்தோடு கட்டபொம்மு நாயக்கனைச் சந்தித்து நவாபை எதிர்க்கும் அணியில் சேர வேண்டிக் கொண்டான். கட்டபொம்முவின் உறவினர்கள் திருச்சி சிறையில் பிணையாகக் கம்பெனியார் ஆதிக்கத்தில் இருந்ததால், கம்பெனியை எதிர்த்தால் அவர்கள் உயிருக்கு ஆபத்து ஏற்படும் என்றெண்ணி, நவாபை எதிர்க்கும் அணியில் சேர அவன் மறுத்துவிட்டான். பூலுத்தேவன் அவனது ஆட்சியின் கீழிருந்த பிரதேசங்களைக் கொள்ளையடித்து விட்டு நெல்கட்டாஞ் செவலுக்குத் திரும்பினான். மதுரைப் பாளையங்களும், நெல்லைச் சீமையின் மேற்குப் பாளையங்களும், 24000 வீரர்களைப் படைதிரட்டி விட்டனர். நவாபின் அண்ணன் வசமிருந்த ஸ்ரீவில்லிபுத்தூரைக் கைப்பற்றிக் கோட்டைச் சுவரை இடித்துத் தள்ளினர். இதற்கிடையில் மாபூஸ்கான், கீழ் பாளையங்களான எட்டயபுரத்தோடும் பாஞ்சாலங் குறிச்சியோடும் ஒப்பந்தம் செய்து கொண்டு பெரும் படைதிரட்டிப் பூலுத்தேவனை எதிர்த்தான். திருநெல்வேலிக்கு 7 மைல்களுக்கு வடக்கே இரு படைகளும் மோதின. பூலுத்தேவன் தோல்வியடைந்தான்.

இந்நிலையில்தான் நவாபின் படையோடும் கம்பெனிப் படையோடும் 1758 மே மாதம் கான்சாகிபு திருநெல்வேலிச் சீமையில் வந்திறங்கினான். அவனிடம் பீரங்கிகள் இருந்தன. மதுரைப் பாளையக்காரர்களைத் தோற்கடித்து ஸ்ரீவில்லிபுத்தூருக்கு

வந்து அங்கு கோட்டையை மறுபடியும் கட்டி அங்கிருந்து முன்பு ஒன்றுகூடியிருந்த பாளையக்காரர்களையெல்லாம் பணியச் செய்தான். தனது நண்பர்கள் பணிந்துவிட்டதைக் கண்ட பூலுத்தேவனும் கான்சாகிபுவிடம் பணிந்துவிட்டான்.

ஸ்ரீவில்லிபுத்தூரில் ஒரு நிலைப்படையை வைத்துவிட்டு கான்சாகிபு திருநெல்வேலிக்கு ஒரு படையோடு சென்றான். அங்கு வரிவசூல் குத்தகையை 11லட்சம் ரூபாய்க்குத் தளவாய் முதலியார் என்பவருக்கு நவாபு கொடுத்துவிட்டதை அறிந்தான். இதனை ஒப்புக் கொள்ளாமல் மாபூஸ்கான் தானே குத்தகைதாரன் என்று கூறிக்கொண்டு வரிவசூல் செய்து வந்தான். இரு குத்தகைதாரர் களிடையே சச்சரவுகள் மூண்டன. முதலியார் கான்சாகிபுவின் உதவியை வேண்டினார். கான்சாகிபு முதலியாரையும் மாபூஸ் கானையும் சமாதானம் செய்து வைத்தான். இதன் பிறகு நாவபு படைகளின் செலவுக்காக முதலியாரிடம் பணம் கேட்டான். முதலி யார் கொடுக்க மறுத்தார். கான்சாகிபு அவரைப் பாளையங் கோட்டைச் சிறையில் அடைத்தான். மேற்குப் பகுதிப் பாளையக் காரர்கள் முதலியோருக்காக வேண்டி படையெடுத்து வந்து அவரை விடுவித்தார்கள். யூசுப்கான் பாளையங்கோட்டைக்கு வந்து அவர்களுடைய படையைத் தோற்கடித்தான்.

இத்தோல்வியால் பூலுத்தேவனும், அவனது நண்பர்களும் தமது எதிர்ப்பைக் கைவிட்டுவிடவில்லை. திண்டுக்கல்லில் தங்கியிருந்த பிரிட்டிஷாரின் பகைவனான ஹைதர்அலியோடு தொடர்புகொண்டு கான்சாகிபை எதிர்க்க உதவி கோரினார்கள். மாபூஸ்கானின் நண்பனான ஆலம்கான் வசம் மதுரை இருந்தது. ஆங்கிலேயரின் நிலைமை இரண்டுங் கெட்டானாயிருந்தது. மதுரையைக் கைப்பற்றும் அவசியத்தை உணர்ந்து, கம்பெனியார் கான்சாகிபை மதுரைக்குப் படையோடு அனுப்பி வைத்தனர். இதற்கிடையில் மாபூஸ்கான் தானே ஆற்காட்டு நவாபாக வேண்டும் என்ற ஆசையால் கான்சாகிபுக்கு எதிராகப் பூலுத்தேவனுடைய அணியில் சேர்ந்துவிட்டான். போரில் கான்சாகிபுக்கு எதிராக மாபூஸ்கான் படைகளும் சேர்ந்துகொண்டன. நவாபின் வரிவசூல் குத்தகைதார் தான் தான் என்று மாபூஸ்கான் முடிவு செய்து கொண்டான். பூலுத்தேவன், களக்காட்டைத் திருவாங்கூர் மன்னனுக்குக் கொடுத்துவிட்டு அவருடைய உதவியைப் பூலுத்தேவன் கூட்டணியினர் பெற்றுக்கொண்டனர்.

யூசுப்கான் திருநெல்வேலிக்கு வந்தபொழுது பல சக்திகள் தனக்கெதிராகச் செயல்படுவதை உணர்ந்தான். இச்சக்திகளைக் குலைத்துச் சிலவற்றைத் தனக்கு ஆதரவாகத் திருப்பிக் கொள்ளத் திட்டமிட்டான். திருவாங்கூர் மன்னனுடைய கோரிக்கையை ஒப்புக்கொண்டு களக்காட்டை அவனுக்கே

அளித்துவிடச் சம்மதித்து அவனது உதவி கூட்டணிக்கு கிடைக்கும் படிச்செய்தான். அவன் திட்டங்கள் நிறைவேறு முன்பே, பிரெஞ்சுக் காரர்களோடு. ஆங்கிலேயர் நடத்திய போராட்டத்தில் கலந்து கொள்வதற்காகக் கம்பெனியார் கான்சாகிபுவை அழைத்தார்கள். அவன் சென்னைக்குச் சென்றுவிட்டான்.

பூலுத்தேவன் கான்சாகிபு இல்லாத வாய்ப்பைப் பயன்படுத்திக் கொண்டு, தனது தலைமையிலிருந்த அணியின் பலவீனங்களைப் போக்கி, பிரிட்டிஷ்-நவாப் எதிர்ப்பணியை வலுப்படுத்த முயன்றான். கட்டபொம்மு நாயக்கன் இறந்து போனான். அவன் பூலுத்தேவனுக்கு எதிரியாகயிருந்தான். அவனுடைய மகன் பட்டம் பெரும்பொழுது தனது பிரிட்டிஷ் எதிர்ப்பை வெளியிட்டான். அவனுடைய மகனோடு பூலுத்தேவன் தொடர்பு கொண்டு அவனைத் தன் அணியில் சேர்த்துக் கொண்டான். மேற்குப் பகுதிப் பாளையங்களும், கிழக்குப்பகுதிப் பாளையங்களும், நவாப் பிரிட்டிஷ் ஆதிக்கத்தை எதிர்க்க ஒன்று சேர்ந்தன. எட்டயபுரமும் கூட்டணியில் சேர்ந்தது. நெல்லைச் சீமையில் முதன் முதலாக மறவர் பாளையங்களும், நாயக்கப் பாளையங்களும் பிரிட்டிஷ் ஆதிக்கத்தை ஒழிக்க ஒன்றுபட்டன.

மறுபடி யூசுப்கான் 1759ல் திருநெல்வேலிக்கு வந்தபொழுது பிரிட்டிஷ் எதிர்ப்பு அணி பலமாக இருந்ததைக் கண்டான். திருவாங்கூர் அரசர் பூலுத்தேவனுடன் சேர்ந்திருந்தார். முன் ஏற்படுத்திக் கொண்ட ஒப்பந்தத்தை உறுதிப்படுத்தி கான்சாகிபு அவரை அணியிலிருந்து விலகச் செய்தான். அணியைச் சேர்ந்த பாளையங்களின் மீது திடீர் தாக்குதல்களை எதிர்பாராத நேரங்களில் தொடுத்தான். பூலுத்தேவனின் கோட்டைகளில் ஒன்றான கொல்லங் கொண்டானை முற்றுகையிட்டுக் கைப்பற்றினான். கிழக்கே திரும்பி, கோல்வார்பட்டியைப் பிடித்தான். மறுபடி மேற்கே, திரும்பி சுரண்டையைக் கைப்பற்றினான். திருவாங்கூர் நாயர்படைகள் களக்காட்டுப் பகுதியைக் கொள்ளையடித்துக் கொண்டிருந்தன. அவர்களோடு ஒப்பந்தம் செய்துகொண்டு, பூலுத்தேவனது பாளையத்திற்கு அவற்றைத் திருப்பிவிட்டான். பின்னர் வடகரைக்குப் படை கொண்டு சென்று கோட்டையைப் பிடித்தான். வடகரைப் பாளையக்காரர் வாசுதேவநல்லூருக்கு ஓடிப்போனார். பூலுத்தேவன் பாளையங்களில் அது ஒரு பலமான கோட்டை, எதிர்ப்பு அணியின் தலைமை அலுவலகம் அதுதான். இக்கோட்டையைப் பிடிக்க பிரிட்டிஷ் தளபதிகள் பலதடவை முயன்றனர். முடியவில்லை. இப்பொழுது யூசுப்கான் அக்கோட்டையை முற்றுகையிட்டான். நெல்கட்டாஞ்செவலில் இருந்து திடீரென்று பூலுத்தேவன் தோன்றி யூசுப்கான் படையை பின்பக்கமிருந்து தாக்கினான். அதனைச் சமாளித்துச் சில நாட்கள்

யூசுப்கான் முற்றுகையைத் தொடர்ந்தான். ஆயினும் அவனது நிலைமை பலவீனமாகி வந்தது, எனவே தற்போதைக்குப் பின்வாங்குவது நல்லதென்று முடிவுசெய்தான். இக்காலத்தில் டச்சுக்காரர்கள் இலங்கையிலிருந்து வந்து தூத்துக்குடியில் இறங்கினார்கள். ஆழ்வார் திருநகரிக்கு வந்து அதனைக் கைப்பற்றிக் கொண்டார்கள். திருநெல்வேலியை நோக்கிப் புறப்பட்டார்கள். பாளையக்காரர்களுடைய அழைப்பை ஏற்றுக்கொண்டுதான் அவர்கள் வந்திருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. அவர்களை விரட்ட யூசுப்கான் பாளையங்கோட்டையிலிருந்து கிழக்கு நோக்கிப் புறப்பட்டான். அவன் ஆழ்வார் திருநகரிக்குப் போய்ச் சேர்ந்தபொழுது டச்சுக்காரர்கள் தூத்துக்குடிக்குப் போய் அங்கிருந்து கப்பலேறிப் போய்விட்டார்கள். யூசுப்கானுடைய வெற்றிகளைக் கண்ட பாளையக்காரர்கள் சிறிது காலம் ஓய்ந்திருந்தார்கள்

திருநெல்வேலிச் சீமையை வென்ற பெருமையைப் பறைசாற்றி இச் சீமையின் வரிக் குத்தகையை 7 லட்சத்துக்குக் கான்சாகிபு கம்பெனியாரிடம் இருந்து பெற்றுக்கொண்டான். மாபூஸ்கான் தனது தம்பியான ஆற்காட்டு நவாப், முகம்மதலியோடு சமாதானம் செய்து கொண்டு திருநெல்வேலிச் சீமையை விட்டுப் போய்விட்டான். யூசுப்கானது நிலைமை வலுவாக இருந்தது. கம்பெனியிடம் விசுவாசம் இல்லாமல் அவன் நடந்து கொண்டதாகப் பிரிட்டிஷார் ஐயுற்றனர். தஞ்சாவூரிலிருந்து அவன் படைதிரட்டினான். தனது முற்கால எதிரிகளான பாளையக்காரர்களோடு சமாதானம் செய்து கொண்டு நவாபை எதிர்க்க அவர்களது உதவியைக் கோரினான். அவனது தலைமையிலுள்ள வீரர்களின் தொகை 27,000 இருந்ததென்று பிரிட்டிஷ் அதிகாரிகள் நம்பினர். பிரஞ்சுக்காரர்களிட மிருந்தும், ஹைதர்அலியிடமிருந்தும் அவன் ராணுவ உதவி பெற்றதாகப் பிரிட்டிஷார் குற்றம் சாட்டினர். சுயாதிக்கமுள்ள அரசனைப் போலவே அவன் கோவில்களுக்கும் மசூதிகளுக்கும் நிலங்கள் வழங்கிக் கல்வெட்டுகளில் பொறித்துக் கொண்டான். திருநெல்வேலி, மதுரைச் சீமைகளில் குளங்கள் தோண்டி, வாய்க்கால்கள் வெட்டி நிலங்களுக்குப் பாசன வசதிகளைச் செய்து கொடுத்தான். பூலுத்தேவனையும், அவனது நண்பர்களையும் தன்னோடு சேர்த்துக்கொள்ள முயன்றான். இம்முயற்சி வெற்றி பெற்றதா என்ற கேள்விக்கு உறுதியான விடையெதுவும் சொல்லச் சான்றுகள் கிடைக்கவில்லை. அவர்களைப் பல முறை அவன் எதிர்த்துப் போராடியிருக்கிறான். பல முறை அவர்களை அழித்து விடுவதாகச் சபதம் செய்திருக்கிறான். பல தீமைகளை அவர்களுக்குச் செய்திருக்கிறான். அவனை அவர்கள் பிறவிப் பகைவனாக

எண்ணியிருந்தார்கள். சில வருஷங்களுக்குள்ளாக கான்சாகிபு அவர்களுடைய நண்பனாக ஆக முயற்சி செய்தான். அவர்கள் இக்காலத்துக்குள் அவன் செய்த தீமைகளை மறந்து விட்டிருப்பார்களா என்று சொல்ல முடியவில்லை.

கான்சாகிபு சுதந்திர மன்னனைப் போல நடந்து வருவதையறிந்த பிரிட்டிஷ் கம்பெனியாரும், நவாபும் அவனைப் பதவியிலிருந்து அகற்ற முடிவு செய்தனர். இதற்கென ஒரு படையைத் திரட்டி அனுப்பினர். இதன் தளபதியாக கர்னல் மன்ஸார் நியமிக்கப்பட்டான் நீண்டகால முற்றுகைக்குப் பின்னர் 14-10-1764-ல் மதுரைக் கோட்டை பிடிபட்டது. கான்சாகிபு சிறைப்படுத்தப்பட்டான். அன்றே அவன் தூக்கில் இடப்பட்டான்.

## கதைப் பாடலின் பாத்திரங்கள்

பிரெஞ்சுக்காரர்களை எதிர்த்து கான்சாகிபு நடத்திய போர்களைப் பற்றி இக்கதைப் பாடல் சுருக்கமாகக் குறிப்பிடுகிறது. அவனுடைய வரலாற்றில் முக்கியமான பகுதி திருநெல்வேலிப் பாளைக் காரர்களோடு நடத்திய போர்களாகும். இதைப் பற்றி கதைப் பாடல் எதுவும் கூறவில்லை. மதுரையில் கான்சாகிபு சுபேதாராகப் பதவியேற்ற காலம் முதல்தான் கதை தொடங்குகிறது. கான்சாகிபுவின் வாழ்க்கையில் கடைசி ஏழு ஆண்டுகளில் நடந்த நிகழ்ச்சிகளே கதைப் பொருளாகும்.

இக்கதையின் தலைவன் கான்சாகிபு அல்ல. சிவகங்கைத் தளவாய் தாண்டவராயனே கதையின் தலைவனாவான். இவன் நவாபிடம் சென்று, கான்சாகிபுவின் சுயாட்சி நோக்கத்தைக் கூறி படைகொண்டு வரச் செய்து, மதுரையைப் பிடிக்கத் தூண்டியவன் என்று கதைப் பாடல் கூறுகிறது. இவனை அரசியல் சூழ்ச்சியுடை யவனாகக் கதை வருணிக்கிறது. அவனுடைய அரசியல் சூழ்ச்சியின் முன்னால் ராணுவ வலிமை பயனற்றுப் போகிறது. தன்னைவிட உயர்ந்த பதவியிலுள்ளவர்களைக்கூடத் தனது தந்திரத்தால் அவன் தன் வழிக்குக் கொண்டு வருகிறான். கான்சாகிபைப் படை பலத்தாலும், வீரத்தாலும் வெல்ல முடியாததைக் கண்டு, பணத்தைப் பயன்படுத்தி மித்திர பேதம் செய்து, சீனிவாசராவ், மார்ச்சண்டு ஆகிய வஞ்சகர்களின் உதவியால் கான்சாகிபுவைச் சிறைப் படுத்தினான், சிங்கத்தின் வீரம் நரியின் தந்திரத்தின் முன் நிற்க முடியவில்லை.

கதைப்பாடல், கான்சாகிபு, சிவகங்கையோடு சச்சரவு தொடங்கிய காலத்திலிருந்து அவனது வரலாற்றைத் தொடங்குகிறது. ராமநாதபுரம், சிவகங்கை ஆகிய பாளையங்களின் சில பகுதிகளை மதுரைச் சுபாவோடு சேர்த்துக்கொள்ள அவன் ஆசைப் படுகிறான்.

ஆனால் இவ்விரண்டு பாளையங்களும் அவனோடு சேர மறுக்கின்றன. திருநெல்வேலிப் பாளையக்காரர்களோடு அவன் பல போர்களைச் செய்திருந்ததால் அவர்கள் அவனுக்குப் பகைவர்களாகவே யிருந்தனர். எனவே அவனைப் பிரிட்டிஷாரும், நாவபும் தாக்கிய பொழுது, அவனுக்கு உதவி செய்ய யாரும் முன்வரவில்லை, தாண்டவராயனைத் தலைவன் எனப் பாடல் கூறிய போதிலும், கான்சாகிபுவின் வீரச் செயல்களையும், அவனது வீரத்தையும் புகழத் தவறவில்லை. இங்கிலீஷ் படைத் தலைவர்களை இப்பாடல் கேலி செய்கிறது. தாண்டவராயனது தந்திரத்தைப் புகழ்ந்து பேசும் இப்பாடல் கான்சாகிபு வீரத்தையும் புகழ்கிறது. இப்பாடல் ஒரு சண்டையை வருணிப்பதால் இச்சண்டையில் பங்கு பெறும் கான்சாகிபுவின் வீரத்தைப் பற்றிப் பேசாமல் இருக்க முடியாது. இந்நாட்டுப் பாடகர் அறியாமலேயே கான்சாகிபு இப்பாடலின் வீரத்தலைவனாகி விடுகிறான்.

தெற்குச் சீமையின் அரசியலில் பூலுத்தேவன் முக்கிய பங்கு பெற்றான். வீரத்திலும் அரசியல் சூழ்ச்சியிலும், சிறந்தவனாக இருந்தான். பிரிட்டிஷாரையும், நவாபையும் எதிர்க்கப் பாளையக்காரர்களது அணியைத் திரட்ட முயன்றான். இவற்றை இம் முன்னுரையில் கூறியுள்ளோம். அவனது முடிவு பற்றி அறிந்துகொள்ள உறுதியான சான்றுகள் எதுவும் கிடைக்கவில்லையென்று முன்பே கூறினோம்.

ஆனால் இப்பாடல், கான்சாகிபு மதுரையில் ஆண்ட காலத்தில் பூலுத்தேவன் ஆற்காட்டில் நவாபின் பணியாளாக வேலை செய்து வந்ததாகக் கூறுகிறது. அவன் வரலாறு முழுவதும் நவாபை எதிர்த்து அவனது ஆட்சியை ஒழிக்க அணி திரட்டுவதாகவே உள்ளது. பலமுறை தோல்வியடைந்த பின்னரும், மீண்டும், மீண்டும் நவாபு எதிர்ப்பு பிரிட்டிஷ் எதிர்ப்புக் கிளர்ச்சியில் ஈடுபட்டு வீரத்தோடு போராடிய பூலுத்தேவன் தன் கடைசி நாட்களில் அடிமையாகக் காலங் கழித்ததை நம்பமுடியவில்லை. தாண்டவராயனது சூழ்ச்சியையும், நரித்தந்திரத்தையும் புகழ்ந்து பேசும் பாடகனது மனப்பான்மையில் பூலுத்தேவனும் வீரத்தால் சாதிக்க முடியாததை நவாபைச் சார்ந்து கான்சாகிபைப் பற்றிக் கோள் மூட்டி, அவனை அழிக்கும் தந்திரத்தால் சாதிக்க முயன்றான் என்று கூறுவது பூலுத்தேவனும் தாண்டவராயனைப் போல் அரசியல் தந்திரம் வாய்ந்தவன் எனக் காட்டும் பாடகனது முயற்சியென்று கொள்ள வேண்டும். தவிரவும் கான்சாகிபு இறந்து 3 ஆண்டுகளுக்குப் பின் பிரிட்டிஷ் தளபதி காம்ப்பெல் வாசுதேவ நல்லூரை முற்றுகையிட்ட பொழுது பூலுத்தேவன் கோட்டையிலிருந்து போராடினான் என்று

காம்ப்பெல்லே கூறியிருக்கிறான். கோட்டையைக் காம்ப்பெல் கைப்பற்றினான் என்பதற்குச் சான்று உள்ளது. ஆனால் பூலுத்தேவன் என்னவானான் என்பதைப் பற்றி எந்தச் செய்தியும் கிடைக்கவில்லை. ஆயினும் கதைப்பாடல் கூறும் இச்செய்தி உண்மையல்ல என்பது தெளிவு.

சிவகங்கை, ராமநாதபுரம் பாளையங்கள் கான்சாகிபு-பிரிட்டிஷ் போராட்டத்தில் ஒரு பங்கு வகித்தன என்ற வரலாற்றுச் செய்தியை இப்பாடல் அளிக்கிறது. கான்சாகிபின் கடைசிக் கால வரலாற்றைப் பற்றிப் பல செய்திகளையும் அளிக்கிறது.

*பாளையங்கோட்டை,*
*5 - 12 - 70*

**நா. வானமாமலை.**
பதிப்பாசிரியர்.

# நன்றியுரை

இக்கதைப் பாடல் எழுத மூன்று பிரதிகளைப் பயன்படுத்தியுள்ளேன். 60 ஆண்டுகளுக்கு முன் வெளியான பழைய அச்சுப் பிரதியொன்று - இது சென்னையில் வெளியானது. இப்பிரதியை மயிலை சீனி வேங்கடசாமி அவர்கள் எனக்கு அனுப்பினார்கள். நெல்லையில் ஒரு கையெழுத்துப் பிரதி கிடைத்தது. இதுவும் சுமார் 70 ஆண்டுகளுக்கு முன் எழுதப்பட்டிருக்கலாம். அதில் எழுதிய ஆண்டு குறிக்கப்பட்டுள்ளது. இவையிரண்டையும் ஒப்பிட்டு இந்தக் கதைப் பாடலில் மூலம் எழுதப்பட்டிருக்கிறது.

முன்னுரை எழுத திருநெல்வேலி கெஜட்டியர், திருநெல்வேலி, ஜில்லா சரித்திரம் (கால்டுவெல்), திருநெல்வேலிச் சீமை சரித்திரம், யூசுப்கான் பற்றிய வரலாற்று நூல்கள் பயன்பட்டிருக்கின்றன. இந்நூலை எழுத உதவிய பிரதிகளை அனுப்பிய நண்பர்களுக்கும், இதனை வெளியிட்ட மதுரைப் பல்கலைக்கழகத்திற்கும், அதன் துணை வேந்தர் தெ.பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்களுக்கும் எனது நன்றியையும், நாட்டுப் பாடலில் ஆர்வமுள்ளவர்களின் நன்றியையும் தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

நா. வானமாமலை

# நாட்டுக் கதைப்பாடல்

## விருத்தம்

### காப்பு

சீர்வளரும் மதுரை தன்னிற் சிறக்கவே செங்கோ லோச்சிப்
பார்வள ரமுதம் போன்ற பாக்ஷா நபாபு மெச்சும்
கார்வளர் பிரபு டீகக் கான்சாயபு கதையைப் பாடத்
தார்வளர் கூடல் மேவுந் தந்தி பொற்பதங் காப்பாமே.

தாம் தனதந்த நானா தன
தாம் னனம் தனாதந்த நாதந்த நானா

மகுடமுடி டால் விருதிலங்க ஜன்னல்
மதயானை வளர்த் தெடுத்த வரிவேங்கைக் குட்டி
விகட மிடுவோர்கள் குல காலன் வெற்றி
விசையாலீம் குலம் விளங்க வருதீரன்
ரதகஜ துரகப் படையாளன் நல்ல
நடனமிடு பரிநகுல துடிநிபுண கொடியான்
மதனதுரை கானுகதை பாட எனக்கு
வரந்தர வேணுமடி மதுரை மீனாட்சி
கள்ளரைக் கருவறுத்த தீரன் நல்ல
கனமான மதுரை நகராண்டிடுஞ் சூரன்
உழக்கரிசி கானுகதை படிக்க நாளும்
உலகந் தழைக்க வேணும் சிக்கந்தர் சாயுபு
படைவீரன் கானுகதை பாட சௌ
பாக்கியம் நீகொடடி பாண்டியன் மகளே
கடல் சூழும் புவியெல்லாம் விளங்க நல்ல
கானுகதை தமிழினாற் கழறவே நினைத்தேன்

### இளமை

பிறந்தது பனையூர் மண்ணு கானனை
பிள்ளை போல எடுத்து வளர்த்தான் முசலாலி
சிறந்த வெள்ளைக் காரனிடத்தில் கானு
சீராய் மூன்றரை வருஷம் பிள்ளையாய் வளர்ந்தான்

அவனை மோசஞ் செய்ய நினைந்தான் என்று
அப்போதே துரத்தி விட்டான் முசலாலி[1] வெள்ளைக்காரன்
அவ...ன விட்டு தட்டுகெட்டுத் தெரிந்து கானன்
அன்பான பிரட்டினிடம்[2] பிள்ளைபோல் சேர்ந்தான்.
பிரட்டினிடம் பிள்ளைபோல் வளர்ந்து நல்ல
புலிக்குட்டி கான்சாயபு பெரியவனு மானான்
மிரட்டுமொரு பாஷைகளும்[3] படித்து நல்ல
வீரன் மம்முதலி[4] நவாப்பு துரையிடத்தில்
தண்டலிலே சேவக மாயிருந்து கானு
தைரியமாய் சேவகஞ் செய்துவரு நாளில்
மண்டலீகன் மாயாமிக மகிழ்ந்து அப்போ
வழிச்சாரி ஆயத்தொழில் கொடுத்தார் நபாபு
வழிச்சாரி ஆயத் தொழிலெடுத்து நல்ல
மம்முதலி சாயபுக்குப் பணங்கட்டி வந்து
வழிச்சாரி சேவகத்தை[5] விட்டு கானன்
வாங்கினான் சிப்பாயி ஆடுதலி[6] தன்னை
ஆடுதலி சிப்பாயி ஆகி அதில்
ஆறேழு மாதமாய்த் திரிந்துவரு நாளில்
நீடு நாய்க்கர் உத்தியோகங்[7] கொடுத்தார் கானன்
நிலையாகப் பதினேழு மாத மதிலிருந்து
நாய்க்கருத்தி யோகத்தை விட்டு கானன்
நலமாக அவுல்தா ருத்தியோக மெடுத்து
டீக்காகச் சிலகாலந் திரிந்து அப்போ
திறமையாயதைவிட்டு சமேதாரு[8] மானான்
சமர்பொருது சமேதரா யிருந்து கானு
தளக்குதிரையிரு தூற்றுக்குச் சுபேதாரு[9] மானான்
சுபேதா ருத்தியோக மெடுத்து அப்போ
சுந்தரமாய் சேவகஞ் செய்துவரு நாளில்
தக்கோலம் பேராம்பூர் தனிலே யிருந்து
சந்தா சாயபுவுடே சாயபு[10] வந்திறங்கி விட்டான்
திக்கெலாம் வெகு கூச்சலாக அங்கே
சேனைக ளெல்லாம் நெருங்கியே யிருக்கும் வேளையிலே

1. முசலாலி - பிரஞ்சுக்கார அதிகாரி.
2. வெள்ளைத் தளபதி.
3. உருது, இங்கிலீஷ், பிரெஞ்சு - தமிழல்லாத மிரட்டுகிற மொழி
4. மம்முதலி - முகம்மதலி - ஆற்க்காடு நவாபு.
5. Body guard.
6. ஆர்டர்லி சிப்பாய் வேலை பெற்றான்.
7. நாயக் என்ற ராணுவ வேலை
8,9. ராணுவ வேலைகள், உயர்ந்த பதவிகள்
10. வரலாற்றில் காணப்படும் சந்தாசாகிபு-முகம்மதலியின் விரோதி

பசப்பாக பறங்கிமலை மேலே அப்போ
படைகூட்டிப் புதுச்சேரி வெள்ளைக்கார துரைகள்
முசுப்பாருடன் பறங்கிமலை இறங்க அதை
மூதண்ட நபாபுபாத[11] ருங்கேட்டு
முசியாப்[12] பறங்கி வெள்ளைக் காரன் பெரிய
முசாலிதுரை கன்னல் கேமலை யழைத்து
முசியாப் பரும பெரிய பிரட்டன் நல்ல
முடிமன்னன் நீர்மேல் நெருப்பையு மழைத்து
சீரானதுரை சின்ன பிரட்டன் இவர்களை
சீக்கிர நவாபுதுரை கூட்டிவரச் சொல்லி
ஆரை யனுப்புவோ மென்று அப்போ
அதிவீரன்மம் முதலிநபாபு துரை கேட்டார்
கன்னல்[13] துரைகம்சல் கூடிப்[14] பேசி அப்போ
தடமதனன் கான்சாயபை வரவழைக்கச் சொல்லி
தைரியமாய்க கானுதனக் கேது சொல்வானாம்

## பறங்கிமலைப் போர்

வாடாநீ கான்சாயபு துரையே பறங்கி
மலைக்கோட்டை நாலெட்டில் பிடிப்பையே யானல்
நீடாக திசைமதுரை தனக்கு நல்ல
நிசமாக கும்தானாய்[15] வைக்கறே னென்று
அன்னேர முறுதியாய்ச் சொல்ல கானன்
அப்போதே கோட்டைவிட்டு வெளியிலே வந்து
கர்னல் பட்டாளம் பனிரண்டு நல்ல
கல்கட்டர்[16] பட்டாளம் பிர்கெட்டு[17] ரெண்டு
ஐந்நூறு குதிரை முதல்நடத்தி அப்போ
யாளிமுக பீரங்கி யிருபது நடத்தி
முன்னேறு முடிமன்னர் நடக்க நல்ல
முனைவீரன் பிரட்டனிட பட்டாளஞ் சூழ
துடிகொண்டு ரிஜிமெண்டு நடக்க கோடி
சோல்தார்[18] கருஞ்சட்டைக் காரர் புடைசூழ

---

11. நபாபுபாதர் - பெரிய நபாபு - முகம்மதலி
12. முசியா - சோர்வில்லாத (குமரி மாவட்டம் பாமர வழக்கு)
13. கன்னல் Colonnel
14. கம்சல் - Council
15. கும்தான் - கம்மந்தான் - கமாண்டர். இது ஒரு கோட்டையின் ராணுவ அதிகாரப் பதவி
16. கல்கத்தா
17. அதிகாரப் பதவி
18. சோல்ஜர் - Soldier

கோடி கொண்ட பாளையமும் நடக்க அப்போ
கோஷ்ட மிட்டு முல்கார் பாளையஞ் சூழ
கெடி கொண்ட தம்பூரடிக்க நல்ல
கெர்ச்சனையா யாறு புல்லாங் குழலூத
முடிவேந்தன் கான்சாயபு துரையும் தம்பூர்
முழங்கியே பாளையத்தை நடத்தினா னப்போ
ஆற்காடு வீதியுந் தாண்டி கானன்
அடர்ந்தேறி வேலூர் விசலூருந் தாண்டி
தீர்க்கமிட நெல்லூர் தாண்டி அப்போ
சேனாதிபதி பறங்கிமலை கோட்டை வெளியில்
பறங்கிமலை கீழ் பாரிசத்தில் கானு
பட்டாள மத்தனையு மணியாய் நிறுத்தி
இறங்கி யைந்து நாழிகைக் குள்ளே அப்போ
யேற்றினான் மோர்ஜா[19]விலேழு பீரங்கி
கருமருந்து போட்டுச் சேத்திடித்து அதிலே
கனமான சஞ்சலி கணக்காகப் போட்டு
தருமிரும்புக் குண்டு வெடிகுண்டு கருப்புச்
சட்டை போட்டே யிடித்துத் தீர்த்திட்டார் பளித்தா[20]
குமுறுதே காரிடிகள் போலே கானன்
கொளுத்தினான் பீரங்கி சொல்லக் கூடாது
சமர் முகத்தி லக்கினியைப் போலே குண்டு
தான் பார்த்த விடமெல்லா மோடுதே நெருங்கி
மழை மாரி பொழியுதே குண்டு அதிர்ந்து
மானங் குமுறுதே பீறங்கி வேட்டு
களை சூழ்ந்த பறங்கிமலைக் கோட்டை அங்கே
கல்லெல்லாந் தூளாய்ப் பறக்குதே குண்டால்
கோட்டை தனில் முகப்பாரு மேறிப் பார்த்துக்
கொந்தளந் தன்னிலே சத்தமுகில் போலே
வேட்டாயிரம் பளித்தா தீர்த்தான் குண்டு
மேலாடிக் கானுதுரை பாளையத்தைச் சாட
ஏறிட்டு துரை தானும் பார்த்து இன்றைக்
கெப்படியுங் கோட்டை பிடியாமல் விடேனென்று
வீறிட்டு குதிரைகள் கனைக்க அப்போ
வேந்தனுங் கான்சாயபு தீர்த்திட்டான் பளித்தா
மண்டி வரக் கண்டந்த சாயபு குண்டை
வாரியே யிரைத்தான் மழைமாரி போலே
அண்டியே துரைகானு சாயபு குண்டு
அஞ்சாமல் வரக்கண்டு நெஞ்சம் பதைத்து

19 வரிசை

20 பளித்தா - சுடுதல்.

ஏழு பீரங்கி தலை கீழாய் நிறுத்தி
ஏராளமாய்ச் சல்லி வாரியதிற் போட்டு
முழக்கி யக்கினி மாரி போலே வைத்து
முழுக்கினான் குமுகுமெனப் பீறங்கி வேட்டு
மேலாடி பாளையம் நெளிக்க கானு
விழிதி வந்து சாராயப் பீப்பாயைத் திறந்து
காலால்கள் சோல்தார் படைக்கு அப்போ
கண்டபடி கொடுத்திட்டா னொவ்வொரு கிளாசு
சாராய வெறி கொண்டு ஜனங்கள் நிற்க
தாங்காமல் நடவென்று சாத்தினான் பிரம்பால்
பூராயமாய்ப் பட்டாளத்தை நடத்தி கானன்
புகழ் பறங்கிமலைக் கோட்டை மதிலோரம் வந்து
ஏணிமர மெழுநூறு சாத்தி ஜனத்தை
யேற்றிய பிரம்பாலே சாற்றினான் கானன்
அணியணியாய் சிப்பாய்க ளேற முசாபர்
அக்கனி போல் கண்சிவந்து கொப்பாறை தன்னில்
மூவாயிரந் துலாமீயங் காய்ச்சி அப்போ
முழுயிருப்பு கரண்டியால் சிப்பாய்கள் மேலே
காவலர்கள் வாரி யிறைத்திட்டார் அதைக்
கண்டவுடன் சிப்பாய்கள் தலைகீழாய் விழுந்து
நெளித்தோடக் சோல்தார் சினந்து அதட்டி
நெறுநெறன் றடர்ந்தேறிக் கோட்டை மேற்கொண்டு
முழித்துப் பாராமற் கோட்டையின் மேல் நின்று
மூன்று பளித்தா தீர்த்துள ஆணுதலையாக
சீறிய கோட்டைக்குள் குதித்தார் அப்போ
சிப்பாய்கள் பட்டாளம் பின்தொடர்ந் தேறி
ஏறிய கோட்டைக்குட் குதித்து வந்து
எதிரிட்ட முசுப்பரைக்[21] கைப்பிடியாய் பிடித்து
முசுபர்தனைப் பறங்கிமலைக் கோட்டை தன்னில்
முதல் வெட்டு பட்டாவால் வீசினபின் கானன்
வசும்பாகத் தைனாத்து வைத்து பாளையத்தை
வளைத்துப்போய் தக்கோலம் பேராம்பூர் பிடித்து
நெல்லூர் சிராப்பளியும் பிடித்து கானு
நேராக ஆற்காடு வீதிதன்னில் வந்து

### மாஷாவைக் காணுதல்

மல்லூரு ஆற்காடு தன்னில் பறைச்சி
மாசாவைக் கண்ணாலே கண்டானே கானன்

---

21. முசாபர் - கோட்டை அதிகாரி.

மாசாவைக் கண்டு மயலாகி நல்ல
மதனதுரை கான்சாயபு ஆள்விட்டுப் பேசி
மாசாவை கல்யாணஞ் செய்தான் அப்போ
மதுராபுரிக் கோட்டைக்கு வந்ததடா யோகம்
திரும்பினான் ஆற்காடு வெளியில் கானன்
செயங்கொண்டு வரக்கண்டு சீரான துரைமார்
விரும்பியே சந்தோஷ மாகி துரைமார்
வீரான மதுரைக்கும் தானென்று[22] சொன்னான்

## மதுரைக்கு அனுப்புதல்

அதுசேதி யர்க்காருஞ் சொல்ல அப்போ
அதிவீரமம் முதலிநபாபு துரை சொல்வான்
சதுர்முகனே துரைபெரிய பிரட்டா நான்
தானாக வொருசேதி சொல்லுகிறேன் கேளு
கும்தான் கலகமொரு பக்கம் பிரட்டர்
கூகுசாயபு கலகமோ சொல்லக் கூடாது
வர்மமாய் மயலாடிக் கள்ளர் பயமும்
மகமதியர் கலகமும் சொல்லப் போகாது
மறவர் குடி பெருத்த தந்தத் தேசம் அந்த
மதுரைக் கனுப்பினால் மோசம்வரு மென்றான்

## பிரிட்டன் - நவாபு உரையாடல்

திறமிகும் துரைபெரிய பிரட்டன் நவாபு
தேவடியிலே யிருந்தேது சொல்ல லுற்றான்
பன்னிரண்டு வருஷங்க ளாச்சு அந்த
பாண்டியன் பதிசீமை தன்னரசு விட்டு
இனி நமது கானுதனை யனுப்பி சீமை
யெல்லா மடக்கியொரு குடைக்கீழ் நிறுத்தி
வடக்கே வந்து பயணஞ் சேரும்படியாய் இவனை
மதுரைக் கனுப்பினால் வசமாகு மென்றான்.
திடமாக மம்முதலி சாய்பு அப்போ
சிந்தை தனிலெண்ணி யாலோசனை பண்ணி
புவன மெல்லாம் புகழ்பெரிய பிரட்டன் நல்ல
புலிக்குட்டி பாபுநான் சொல்கிறேன் கேளு
இவனை மதுரைக் கனுப்பி வைத்தால் நாளை
யெதிராளி யாவானே திருச்சினாப் பள்ளிக்கு

---

22, மதுரைப் பகுதி, மதுரை என்றழைக்கப்பட்டது. அங்கு பாளையக் காரர்கள் நவாபுக்கு அடங்கியிருக்கவில்லை. அந்த நிலைமையைக் கூறி, அவர்கள் நவாபு ஆட்சியை ஒப்புக்கொண்டு, வரி கட்டுமாறு செய்ய படையோடு கான்சாகிபை, மதுரையிலேயே கமாண்டராக இருக்கச் செய்ய வேண்டும் என்று பிரிட்டன் சொல்லுகிறான்.

கானனை யனுப்ப வேண்டாமென்றார் அப்போ
கர்னல் துரைபிரட்டன் நவாபைப் பார்த்து
நான் வளர்த்த பிள்ளையந்தக் கானன் சாயபு
நம்மோ டெதிர்த்தவன் சண்டைக்கு வந்தால்
எண்ணி எட்டு நாளைக் குள்ளாக நெருப்பா
யெரித்துநான் மதுராபுரி பிடித்திடுவே னென்றான்
புண்ணிய நவாபுதுரை பார்த்து பிரட்டாவுன்
புத்திக்குச் சரியானபடி யென்று சொல்ல
கானுதனை பக்கத்தி லழைத்து நவாபு
கனமாகத் தாம்பூலங் கையில் கொடுத்து
நானும்உனை யனுப்புகிறேன் தெற்கே எனக்கு
ரண்டகஞ்[23] செய்யாதே யென்றார் நவாபு
கானனு மனது மகிழ்வெய்த பிரட்டன்
கன பிரியமாக யேது சொல்வானாம்
காயிதங் கைதனிலே கொடுத்து சாமி
காரியங் கண்ணாகப் பார்த்துவரச் சொல்லி
நேயமுடன்நட மதுரைக் கென்று பிரட்டன்
நிசவுறுதியாய்ச் சொல்லி அரண்மனை போய்ச்சேர்ந்தான்

## மதுரைக்குப் பயணம்

சேர்ந்தவுடன் கானுதுரை தானும் பிரட்டன்
திடவுறுதி சொன்னபின் வெளியிலே வந்து
மாசாவைக் காடியின் மேலேற்றி சேனை
மருங்கில் நெருங்கிவரக் குதிரை மேலேறி
ஆசார வாசல்வரு தாண்டி நல்ல
அழகான சென்னைபுரி கோட்டை வெளிதாண்டி
திருச்சினா பள்ளி கோட்டை தாண்டி கானு
செயனா மங்கலம் விராலிமலை தாண்டி
வரிசையாய் மணப்பாரை கடந்து தோகை
மலைதாண்டி நம்மன் குரிச்சியி லிறங்கி
நம்மன் குரிச்சிப் பூச்சியனை யழைத்து கானு
ராஜாதி பதியவனு மேது சொல்வானாம்.
கமையாக உனது பெரும் சேனை தன்னில்
கள்ளர் பயமேதடா காடுவழி தன்னில்
இராப் பகலாய் பாளையம் வருது இனி மல்
இவ்விடந் தன்னில் களவு நடந்துதே யானால்
தப்பாக நீயிருக்குந் தேசம் எல்லாந்
தவிடு பொடியாக்கி ரணதூளி யாயடித்து

23. ரண்டகம் - துரோகம்

எவனெவ னிருந்தாலும் பாரேன் உன்னை
ஏழுமலைக் கப்பாலே விரட்டு வேனென்று
அவனைப் பயப்படுத்தி வழிபதனம் என்று
அதட்டி வலுவாகி நடந்திட்டா னப்போது
துவரங் குருச்சியது தாண்டி உயிர்
தோகக்குருச்சி யெனுநத்தம் வந்து சேர்ந்து
நத்தத் துலிங்கனை யழைத்து கானு
நலமான வொருசேதி திடமாகச் சொல்வான்
கள்ளர் பயமிக் காட்டில் மெத்த வென்று
கனமான நபாபுதுரை சொன்னாரடா பாவி
எவ்வளவு பாதை வழிதனிலே லவுண்டி
இனிமேலும் பாதையிலே கள்ளர்பய மானால்
எட்டு நாளையில் கச்சைக் கட்டி உன்னை
ஏலேலோ தூக்கிலே போட்டிடுவேன் கள்ளா
மட்டுள்ளவழி பதை பதனம்[24] என்று
மன்னன் வருகிறான் திசைமதுரை நோக்கி
அழகர்மலைக் கொம்மையுந் தாண்டி நல்ல
அழகான தேனூர் மைதான வெளிதாண்டி
தளம் பெரிய நால்சேனை சூழ நல்ல
சௌரிய முடனேநல் குளமதி லிறங்கி
கொடி முரசுதம் பீரடிக்க நல்ல
கோட்டைமிடு தனது வைப்பட்டாளஞ் சூழ
துடியாக வானமுக டதிர நல்ல
தோகையர்கள் நடனமிட வெண்கவரி வீச
கும்பினிமுரசு வெள்ளைக் காரர் தளமும்
கூட்டி மதுராபுரியில் ஒயிலாகச் சேர்ந்தான்
இப்புவி யெலாஞ் செவிடுபடவே பீரங்கி
இருபத்தொரு வேட்டு தீர்த்தார் நகர்தன்னில்
கோடைகாலத் திடிகள் போலவே வைத்துக்
கொளுத்தினான் பீரங்கி சொல்லக் கூடாது
வாடாமலர் மதுரை நகர்தன்னில் வாழும்
மதிகூடு சாயபு அவன் ஏறிட்டுப்பார்த்து
பேசியிந் நகர் போச்சு தென்று தனப்
பெருக்குடனே திருச்சினாப்பள்ளிக் கோட்டை சேர்ந்தான்
மதயானை கானுதுரை சாயபு கோட்டை
மதுராபுரி யலங்க மீதுநின்று பார்த்தால்
கதையான மதுராபுரிக் கோட்டை தன்னில்
சூன்யமும் வீரியமுஞ் சொல்ல முடியாது

24. வருகிற வழியிலுள்ள பாளையக்காரர்களிடம் கள்ளர்களது கொள்ளை நடவடிக்கைகளை அடக்கச் சொல்லுகிறான்.

தேங்காய் தண்ணீரிலை மோதும் துய்ய
சிறுமல்லிகைப் பூசொரியுந் திசைமதுரைக் கோட்டை
மாங்காய் காய்த்துக் குலையுதிரும் நல்ல
மங்கையர்கள் பந்தடிக்கும் மணிமதுரை வீதி
வெள்ளானை விளையாடும் மதுரை நல்ல
வெண்கதலிக் குலை நெருங்குமிக மதுரைக் கோட்டை
வெள்ளமிர்தம் சொரியும் திசைமதுரை நீண்ட
வீதிக ளெல்லாம் கதம்ப வாசமது வீசும்.
மந்தாரை முல்லை யிருவாட்சி செண்பக
மலர்சொரிந்து தேனொழுகு மணிமதுரைக் கோட்டை
நந்தாதி மதிமணி மேடை வீதி நல்ல
நவமணிகள் குவிந்திருக்கும் நல்லமதுரைக் கோட்டை
வாழைக்குலை சாய்ந்திடு மதுரை நகரில்
தான்கீதம் பாடி மலர் வாசத்தைத் தேடும்
என்பத் திரண்டு கொத்தளமாம் கிணற்றில்
எழிலான கடல் குதித்துத் திரிந்து விளையாடும்
வழுதிசே ரசியங்க ளனைத்தும் வாயால்
வழுத்த டியாது மனமகிழ்ந்து பார்த்திருந்தான்
இருந்த தொரு கான்சாயபு நீலன் நல்ல
இயல்பாகப் பின்னு மவனேது செய்வானாம்
நானூறு பொன்கையில் கொடுத்து அந்த
நாழிகையில் ீனாக்ஷிக்குச் சிறப்பு செய்யச் சொல்லி[25]
பானுமதி சூழ மீனம்பாள் பாதம்
பணிந்து சொக்கேசரையும் வலமாக வந்து
கர்த்தாக்கள்[26] வந்திருக்கு மேடை அந்தக்
கருங்கல்லுச் சவுக்கையிலே ஒயிலாகச் சாய்ந்து
மீனாட்சி கிருபை களினாலே நல்ல
வெங்கலக் கதவுதனைப் போர்த்தவ னெடுத்து
தீரனெனும் கான்சாகிபு துரைதான் அதிலே
வொருகோடி திரவிய மிருக்க மனமகிழ்ந்து
விஸ்தார அரண்மனையும் கட்டி அதிலே
மேல்வீடு மாளிகையுந் தானுண்டு பண்ணி
அரண்மனையில் மகிழ்வாக விருந்து இன்னும்
ஆறேழு நாள்பொறுத்து யோசனைகள் செய்து

---

25. கான்சாகிபு முன்பு இந்துவாயிருந்தவன், பதவிக்காகவே முஸ்லீம் மதத்திற்கு மாறியவன்.

26. கர்த்தாக்கள் - நாயக்க மன்னர்கள், இவர்கள் தங்களை விஜயநகர ராயர் ராணுவ காரியகர்த்தாக்களென்று தமது சாசனங்களில் தங்களைப் பற்றிச் குறிப்பிட்டுக் கொள்ளுகிறார்கள்.

பிரமலையின் வேல் களியென்று காணு
பேசி யைந்துமணி வேளைப் பயணமென்று
சொல்லியே பாளையத்தை நடத்திச் சென்று
சூழவே பிறமலை நாட்டாரை வளைத்து
வில்லுக் கருச்சுனன் போல பார்த்த
விடமெல்லாம் பிணக்காடாக வெட்டி யிழுத்தெறிந்து
அடங்காத பிறமலை நாட்டாரை வளைத்து
ஆறு பொதிமலை வெட்டி யடக்கினான் காணும்

**கான்சாயபு காவல்**

ஒடுங்காத மயிலாடிக் கள்ளர் தன்னை
ஊருக்கு இருபேரை கீர்த்தியாய் வைத்து
வண்டி கொண்டு குடமுட அடித்து காணு
வழிமீதில் பதின்மூன்று வராகனை யெறிந்தான்
எட்டியதைப் பார்க்க முடியாது அதிலே
ஈயெறும்பு மொய்க்காம லிருந்து தடாபணமும்
கரையானு மருகில் நெருங்காதே நல்ல
கருக்குருவி யதின் மேலிருக்க முடியாது
கட்டாமலே யடித்து விட்டான் காட்டிக்
கருங்குருவி மாடுமேச்சு வரலாச்சு மதுரை
ஒருநா ளறுத்த பிணமெல்லாம் காணும்
ஒன்பது நாள்வரைக்கு முலாத்தியே போட்டான்
கட்டேது காவ லறியார்கள் தேசம்
கறந்துபால் வெளிவைத்தார் காகமணுகாது
மாசா மேலாணை யிட்டபேர்க்கு அந்த
மறியலிலே நின்றவர்க்கு வெகுமதிகள் கொடுப்பார்
கூசாம லாணை மிஞ்சினோரை பிடித்து
கொண்டுவந் தேழுபேரை விலங்கினில் போட்டான்
வருகையிலே கும்தானென்று வந்தான் அந்த
மதுரைக்கு வந்தபின்பு ராசாவு மானான்[26(அ)]
இருகையிலும் பணமேந்திக் கொண்டு எட்டி
விசைந்துவழி நடக்கவே யிருந்தரசு செய்தான்
இரட்டப்ப நாயக்கன் வணங்க[27] நல்ல
இரிசப்ப நாயக்கனுங் கண்டு சந்திக்க
கட்டபொம்ம நாயக்கனும் வணங்க அந்தக்
களக்காட்டூர் வன்னியன் சந்திக்க

---

26(அ)கோட்டைக் காவலதிகாரி (கும்தான்)யாக வந்தவன் ராசாவாக அதிகாரம் செலுத்த ஆரம்பித்தான்.

27 பாளையங்காரர்களை நவாபிற்கு அடங்கி நடக்கச் செய்தான்

சாத்தூரு நாய்க்கன் வணங்க நல்ல
சன் ப்ப நாய்க்கனுஞ் சொல்லியே கேழ்க்க
சேத்தூரு முடிமன்னன் வணங்க நல்ல
சிவகிரி வன்னியன் கண்டு சந்திக்க
தலைவெட்டி யம்மையன் வணங்க அந்த
வடக்கத்தான் புலித்தேவன்[28] சொற்படி கேழ்க்க
தும்பிச்சி நாய்க்கன் வணங்க நல்ல
துடிவளருங் கலங்காத கண்டனும் வணங்க
ஒன்பதூர்க் களையான் வணங்க மதி
யூகியெனும் அப்பாஜி மறண்டவனும் நடுங்க
காணாத மலையர் களத்து ராஜன் ஏழு
காரானை கொடுத்தனுப்பிக் கப்பமுங் கட்ட
நானாவித விருது பாக்ஷி வணங்க தல்ல
நலங்கொண் டவனு வந்து சொற்படி கேழ்க்க
நத்தத்து துலிங்கயன் வணங்க நல்ல
நம்மன் குரிச்சிப் பூச்சையன் சந்திப்புக் கண்டு
முத்தையன் மூப்பன் வணங்க நாளு
முனை கொடுத்த தென்மலை வன்னியன் வணங்க
இணங்காத வுத்தமன் வணங்க இப்படி
ஏழைரை வருஷமிதி லிருந்தரசு ஆண்டேன்[29]
வணங்காத பேரெல்லாம் வணங்க அந்த

## சிவகங்கைத் தளவாய்க்குக் கடிதம்

மறவருட தளகர்த்தன் வணங்க வரவில்லை
அடிக்கிறேன் மறவன் மேல் சாரி[30] நாளை
பிடிக்கிறேன் திருப்புவனக் கோட்டை யென்று சொல்லி
எழுத்தாணி கையிலே பிடித்து கானும்
இயல்பாக வக்கணையா யெழுதுகிறா னப்போ
முடிமன்னன் சேதுபதி தளவா[30(அ)] நல்ல
முனைவீர தாமோதர பிள்ளையே கேளும்
அசையாத பள்ளிமடை கொடியைவிடுபாவி உன்னுடைய

---

28. வடக்கத்தான் - நெல்கட்டாஞ்செவல் பூலுத்தேவன்

29. இங்கே ஏழு ஆண்டுகாலம் என்பது சரியல்ல, இரண்டு ஆண்டுகள் திருநெல்வேலியில் பாளையக்காரர்களோடு போர்புரிவதில் கழிந்தது. அவர்கள் அனைவரையும் அடக்கி மதுரையில் இருந்து கான்சாகிபு நவாபின் பிரதிநிதியாக ஆண்டான்.

30. தாக்குதல்

30 (அ) கடிதத்தில் எழுதுகிற கருத்து

திருப்புவனம் விட்டுவிட வேண்டும் உன்னுடைய
சிவகங்கை மேல்கத்தி யெடுக்கிறதே யில்லை
திருப்புவனம் கொடுக்காமற் போனால் நல்ல
சிவகங்கை மேல்சாரி வருவேண்டா வென்று

### கடிதம் சென்ற விதம் [31]

வகை விபரமாக வேயெழுதி அப்பா
பங்காரு நாய்க்கன் வசம் அனுப்பிவிட்டான்
வருகிறான் மணலூரு தாண்டி அந்த
வகையான திருப்புவன கோவலூர் தாண்டி
சிங்கார மாகவே நடந்து நல்ல
சிவகிரி பொன்னுங் குளமதைத் தாண்டி
சிவகங்கை பேட்டைக்குள் நுழைந்தான் நல்ல
தீரனெனுந் தாண்டவன் கையில் கொடுத்தான்
விருப்பமுட னெழுதிய காயிதத்தை பாதர்
விறல்பெருகு சிவகங்கை மறவர் தளகர்த்தன்
காயிதவக் கணையைப் பார்த்துக் கோபந்
தான்மீறித் திருப்புவனக் கோட்டையில் வந்து
திண்டு திமாசுமேற் சாய்ந்து நல்ல
திடமாக வேலையைச் சீராய் பிடித்து
தாண்டவ ராய தளமந்திரி கோபந்
தான்மீறி மறுநிருபந் தானெழுதி னானே

### தளவாயின் பதில்

வேண்டா மதுரை தானு முல்லை நானும்
வேளாள னொருவுறுதி சொல்லுகிறேன் கேளு
நெல்லூர்ச் சிராப்பளியி லிருந்து நீயும்
நேர்தெற்கே மதுரைக்கு வருகிறபோது
சொல்வார்கள் கும்தா னென்று இப்போ
துடிவளரு மதுரைக்குத் துரையானாய் நீயும்
மச்சின னென்று வுறவாடி உன்னுடைய
மாசாவைத் தங்கையென் றுறவாடி யிருந்தேன்
முச்சீறு வுடுப்புநான் கொடுத்து உனக்கு
முதல்வரிசை மதுரைக்குக் கொடுத்தனுப்பி விட்டேன்

---

31. கான்சாகிபுவிற்கும், தாண்டவராயனுக்கும் நடந்த விவாதம் கடிதப் போக்குவரத்து நடைபெற்றதாகச் சொல்லப்படுகிறது. இது நாட்டுப்பாடல் காவிய உத்திகளுள் ஒன்றாகும். உண்மையில் இத்தனை கடிதம் போக்குவரத்து நடக்கவியலாது.

மதுரையிலே யுனக்கு மகன்பிறக்க என்னுடைய
மாணிக்கச் சிவகங்கை சர்க்கரை வழங்க
எதிராதே நெஞ்சு துணிந்து கானு
என்னுடைய திருப்புவனங் கேழ்ப்பையோ வென்று
எழுதியே காயிதந் தன்னில் அப்போ
இயல்பான சேவகர் கையில் கொடுத்தனுப்ப

**பதில் கடிதம் மதுரைக்கு வந்தது**

மதுரை கான்சாயபு கையில் கொடுத்தார் அந்த
மதயானை கான்சாயபு வாசித்துப் பார்த்து

**கான்சாகிபு மறுபடியும் எழுதிய கடிதம்**

மதிமந்திரி தாண்டவ ராயா கானு
மதயானை யொருவயணஞ் சொல்லுகிறேன் கேளு
வேலூரு விசலூரியி லிருந்து நானும்
வீறாக மதுரைக்கு வந்ததின் பிறகு
எனைக்கண்டு வணங்காத பேரை தீயா
யெரித்து நிர்தூளிப் படலமாய் நொறுக்கி
மனையூரு மாங்காய் பிடுங்கி நானும்
பத்துநிலை வழிப்பாதை மடிமாங்காய் போட்டு
ஒரு மாங்கா யதிலே குறைந்தாக்கால் பாதர்
ஒன்பதுகாய் வட்டி வாங்கினேன் சிங்கம்
தருவோங்குஞ் சிக்கந்தர் மலையில் பாதை
தன்னில்வெகு திரவியத்தை முடிந்து நானெறிந்தேன்
ஏழுநா ளப்படித் தானே அதிலே
நலியாது கருங்குருவி நாடாது பணத்தில்
அப்படி யடித்தேன் துரைதானு எனக்கு
ஆரடா பணங்காட்டும் மறவனோ யெதிரி
என்று சொல்லி கான்சாயபு நீலன் நன்றாய்
எழுதியே காயிதத்தைத் திருப்புவனம் அனுப்ப
வந்த தொரு காயிதந் தன்னை நல்ல
வரிசைபெறு வேளாளன் பாத்தேது சொல்வான்

**தளவாயின் இரண்டாவது பதில் கடிதம்**

அடாயிப்படி சொன்னியே கானு நல்ல
தாசட்டுமொரு வயணஞ் சொல்லுகிறேன் கேளு
குடிக்கிறது பனங்காட்டுக் கள்ளு மறவர்
எடுக்கிற துடல்கட்டு மொக்குவளை தடிதான்

அடிக்கிறது கரண்டக்கால் பார்த்து நாங்கள்
பிடிக்கிறது கொண்டைமயிர் தப்பாது சொன்னேன்
நாங்க ளடித்துப் பறியாவிட்டால் எங்கள்
நலங் கொண்ட காடுமட்டு மடித்துப் பறித்திடுமே
தங்கியிங்கு வருக நினையாதே உன்னை
க்ஷணத்திலே வீசிடுவே னென்றான்
இன்னம் பலபல சேதியெழுதி அவனும்
இயல்பாக வனுப்பினான் மதுரை நகருக்கு

### தளவாய் கடிதம் மதுரைக்கு வந்தது

வந்ததே மறவருட நிருபம் கானும்
வாசித்துப் பார்த்து மவனேது சொன்னானாம்

### கான்சாகிபு மறுமொழி

இத்தனை வீரியஞ் சொன்னால் பயலே
இனிமேலுங் கானுதுரை சொல்லுகிறேன் கேளு
வெத்திலை கொழுந்து கிள்ளுஞ்சாதி நீயும்
வேளாவள வம்மிசம் இல்லை[31(அ)] மணிமார்பா
மேழி பிடித்ததுவுஞ் சாதி பாரில்
விளங்கவே யெழுத்தாணி பிடித்தெழுதுஞ் சாதி
நாளுங் கொடிக்கால் பார்க்குஞ்சாதி நீங்கள்
நதிகுல[32] மென்றே யிருந்தராஜ்ஜியங்க ளறியும்
பட்டோலை யெழுது முங்கள்சாதி உனக்கு
படை வெட்டத் தெரியுமோ தாண்டவராயா
இப்படிக் கான்சாயப் யெழுதியனுப்ப அதற்கு
எதிர்நிருப மெழுதுகிறான் தாண்டவ ராயன்

### தாண்டவராயன் பதில் கடிதம்

பட்டோலை யெழுதுகிற தென்று நல்ல
பரிநகுல துரைகானு சொன்னையே வுன்வாக்கால்
மறநாட் டோலையினா னுன்னை இந்த
மாமரத்துக் கிளையில் தூக்காமல் விட்டால்
சந்தரகுல முத்து வடுகையர்[32(அ)] எங்கள்
சாமியுட வாசல் பிரதானி நானல்ல

---

31(அ) சிவகங்கை தளவாய் வேளாளன். கான்சாகிபுவும் மத ம. றுமுன் வேளாளன் தா வேளாளச் சாதியை அவன் கேலி செய்கிறான்.

32. நதிகுலம் -கங்கைகுலம் என்று வேளாளர் குலத்திற்குப் பெயர் அதையே ஆற்றின் பெயர் என்று கூறுகிறான். உழவவும் ஏட்டில் எழுதவும் பழகிய வேளாளன் வாள் பிடித்துபோர்புரிய முடியுமா என்றுதான் கேட்கிறான்.

32(அ) முத்துவடுகன்-சிவகங்கைப் பாளையக்காரன் வேலுநாச்சியார் கணவன். பிற்காலத்தில் மருது சகோதரர்களை வளர்த்தவன் பிரிட்டிஷாரை எதிர்த்து பீரங்கியால் அடிப்பட்டு இறந்தான்.

மீறு புகழ் வேளாள னல்ல சிங்கம்
விரித்ததுவும் தீவாசுக்கும் பளியுல்ல
பிடித்ததுவு மெழுத்தாணி யல்ல சிங்கம்
போட்டதுவும் தளகர்த்த மோதிரமல்ல
விசைய னெனுந் தாண்டவ ராயன் நிருபம்
எழுதியே யனுப்பிவிடக் கானுதுரை தானும்
வந்த தொரு காயிதந் தன்னை நல்ல
வரிசைபெரு கான்சாயபு பார்த்தேது சொல்வான்.

**கான் பதில் கடிதம்**

இந்த மொழி சொன்னையே பயலே நானும்
இன்னமொரு சம்ரதாயஞ் சொல்லுகிறேன் கேளு
கர்த்தக ளமர்ந்திருக்கு மேடை நல்ல
கருங்கல்லுச் சவுக்கைதனைப் பேர்த்துநான் பார்த்தேன்
பத்தாயந் தனிற் பணமிருந்து அதனில்
பதிவான பட்டயமு மெழுதி யிருந்துதடா
இரட்டை வெங்கலக் கதவு நிலைதான் அதிலே
நேராய் கிடக்கு தென்றெழுதி யிருந்துதடா
இதம் பெறவே சேனைகளைக் கூட்டி அந்த
எழிலான வெங்கலக் கதவுநிலை யெடுத்தேன்
கதவு நிலையாக வைத்தாண்ட ஆதி
கர்த்தாக்கள் முன்னதிலே போட்டு யிருந்துதடா
இதற்கு வகை யேதென்று எண்ணி நானும்
இயல்பாக நானதிலே யோசனைகள் செய்து
ஐம்பதுபேர் தச்சர்களை யழைத்து நானும்
அரை க்ஷணத்தி லாறுவரிக் கீழிறங்கி
திரவியத்தைப் பேர்த்தெடுக்கையிலே அதிலே
திசை மதுரை கர்த்தர்க ளெழுதி யிருந்ததைக் கேள்
பரமேஸ்வரி மீனாளுக் கெதிரே வாயிற்
படியில் வெகு தங்கப் பாளமிருக்கு தென்றிருக்க
இப்போது திசை மதுரை மீனாள் தாயே
எனக்கிந்த திரவியத்தைக் கொடுக்கவேணு மென்றென்
அப்போது திசை மதுரை மீனாள் எனக்கு
அறியவே யொருவயணஞ் சொன்னதைக் கேளு
மலைக்காதே துரை கானு நீலா நானும்
வைத்திருந்த திரவியத்தி லாசையாய் யிருந்தால்

தச்சன் பிள்ளை பெண்பிறந்த மங்கை அவளும்
தலைசசன் பிள்ளை யுண்டாயிருக்க வேணும்
பிராமணப் பெண் கொண்டுவந்து[33]
பொலிவெட்டிப் பொங்கலிட்டு கொடுப்பையே யானால்
திரவிய மிருக்கிறதை நீயும் கானு
திடமா யெடுகக வென்று வுத்தரவாச்சு
ஆகட்டு மென்று சொல்லி நானும் அப்போ
அனபாக ஆள்விட்டு விசாரித்துப் பார்த்தேன்
நாலுபுறம் ஆள்விட்டுப் பார்த்தேன் அப்போ
நலஙகொண்ட சோழநகர் தன்னி லிருந்தாள்
எழுநூறு பொன்கையில் கொடுத்து நானும்
ஏழுபேர் சிப்பாய்விட்டுத் தள்ளிவரச் சொல்லி
நற்பொலி வாங்கிக் கோதேவி என்று
ராசாத்தி கையினால் வெட்டினேன் கானு
திரவியத்தைப் பேர்த் தெடுக்கையிலே அதிலே
செப்புநல்ல பட்டயமு மெழுத யிருந்ததடா
புட்பவனம் திருப்பு வனமும் உன்னுடைய
புகழான பள்ளியறை மதுரையுடன் சேர்க்கை
தேவர்கள் பூசைபண்ணுங் கோட்டை உன்னுடைய
திருமதுரைச் சேர்க்கையுன் திருப்புவனக் கோடடை
சிவகங்கை பட்டணமும் நல்ல என்னுடைய
மாணிக்கப் பாத்திபனூர் மதுரையுடன் சேர்க்கை
திருச்சினாப் பள்ளி மடை யெல்லாம் முன்னே
திருமலைக் கர்த்தாக்க ளாண்டிருந்த தேசம்[34]
இப்படி விபரமா யிருக்க நீயும்
வீணிலே திரிந்தலைந்து போகவே வேண்டாம்
விட்டுவிடு தாண்டவ ராயா சும்மா
வீணிலே பழிபோர்க்க போகாது சொன்னேன்
எட்டு வருஷ கால மானாலும் நானும்
எதிராடித் திருப்புவனம் வாங்குவேன் பாவி
என்றெழுதி அர்க்காடு[35] கையில் கானு
இயல்பா யனுப்பினான் திருப்புவனம் நோக்கி

---

33. புதையல் எடுப்பதற்கு முன் நரபலி கொடுக்க வேண்டுமென்ற நம்பிக்கை இன்னும் கிராம மக்களிடம் உள்ளது பல கதைப்பாடல்களில் இந்தகைய சம்பவங்கள் கூறப்பட்டுள்ளன. பொலி -பலி.

34. இவன் சிவகங்கையிலிருந்து பிரித்து மதுரையோடு சேர்க்கவேண்டும் மென்று கேட்கும் ஊர்கள் முன்பு திருமலைநாயக்கர் காலத்தில் மதுரையோடிருந்தனவாம். அக்காரணத்தால் மதுரையைத் தற்காலம் ஆளும் தனக்கு அவை சொந்தமென்று உரிமை கொண்டாடுகிறான் நூான்சாகிபு. 35. அர்க்காடு தூதன்.

### தளவாயின் பதில் கடிதம்

வந்ததொரு காயிதந் தன்னை முல்லை
வேளாளன் வாசித்து யோசனைகள் செய்து
"என்னுடைய ராச்சிய மென்றறிந்து நீயும்
இப்படிக் கெல்லா மெழுதினையே துரையே
கனமான மகுடமுடி மன்னா முல்லை
காராள னொருவார்த்தை சொல்லுகிறேன் கேளும்
மதுராபுரி பிறக்கையிலே கானு எங்கள்
மகா புனலிங்க மதுகூடப் பிறந்ததடா
சதுர்மதுரைக் கோட்டை பிறக்கையிலே மறவர்
சமஸ்தானங் கூடப் பிறந்ததடா கானு[36]
மதுராபுரிக் கோட்டை யிலே இதுவும்
மறவருட மண்ணி தென்பார் கேட்டுக்கொள் கானு
முடிக்கிறாய் சம்பரதாயம் வீணில் செம்பொன்
முடிமன்னன் திருப்புவனக் கோடிவருமோ
குடிக்குமோ பூனை யந்தப் பாலை அதனைக்
குடிக்க வென்று நினைத்தாலும் வலது காலாலே
தட்டிக் கவிழ்த்திடு வேன் கானு உன்னுடைய
சம்ப்ர தாயங்களை நிறுத்திவிடு சொன்னேன்"
மன்ன னெனுந் தாண்டவ ராயன் எழுதி
மதுராபுரி தனக்கனுப்பி விட்டா னப்போ

### கான்சாகிபு பதில் கடிதம்

வந்ததொரு காயிதந் தன்னை அந்த
வள்ளலெனுங் கானுதுரைப் பார்த்தபோது சொல்வான்
"அரே பிள்ளை தாண்டவ ராயா அந்த
ஆண்பிள்ளை கான்சாயபு சொல்லுகிறேன் கேளு
கெட்டியா யிவ்வயணஞ் சொன்னாய் சிங்கம்
கிரீடிநான் துரைகானு சொல்லுகிறேன் கேளு
சிந்தையுடன் முல்லைமணி மார்பா அந்தத்
திருப்புவனங் கொடுப்பதில்லை யென்றாயே பாவி
வந்து நிர்த்தூளியா யடித்து திருப்பு
வனம் வாங்கி சிவகங்கை கம்பளி விரித்து

---

36. மதுரை ராஜ்யம் உண்டாகும் பொழுதே மறவர் பாளையங்களும் தோன்றிவிட்டதாகத் தளவாய் சொல்லுகிறான். இது வரலாற்று உண்மையல்ல

கெடித்தல மெல்லாங் கொள்ளையடித்து உன்னுடைய
அங்காளம்மன் கொத்தளத்தில் வைக்கா விட்டால்
வீராதி வீர்ரண சூரன் ஜன்னல்[37]
வெள்ளைக்காரன் வார்த்தெடுத்த பிள்ளையே நானும்"
மாலான கான்சாயபு நீலன் தனது
மைத்துனன் தாண்டவ ராயனுக் கனுப்ப
வந்ததொரு காயிதந் தன்னை அந்த
மன்னனெனும் வேளாளன் பார்த்தேது சொல்வான்

## தளவாய் பதில் கடிதம்

"போராடத் துணிந்தியே நீகானு நல்ல
புலிகுட்டி யொருவயணஞ் சொல்லுகிறேன் கேளு
திருப்புவனங் கோட்டையே யானால் வடக்கே
திருச்சினாப் பள்ளிக் கோட்டை சீராய் நடந்து
பருப்பதப் பொன் வெள்ளி யிறங்கி நம்மிட
பாட்சா நபாபு தன்பேட்டி நான் செய்து
லாட்டு மேலாட்டையு[38] மழைத்து நல்ல
நலமான நீர்[38(அ)] மேல் நெருப்பையு[38(ஆ)] மழைத்து
வாட்டமுடன் அலம்பியைக்[39] கூட்டி கர்னல்
மாட்டியன்[40] மேஜர்துரை ஜன்னலை யழைத்து
சின்னப் பிரட்டனையுங் கூட்டி நல்ல
கேமல்துரை முகியாப் பறங்கியை யழைத்து
ஜென்னல் வெள்ளைக் காரனையுங் கூட்டி நல்ல
ஜெயம் பெற்ற பிரட்டனையுங் கையோட யழைத்து
முப்பது பட்டாளத்தைத் திரட்டி நல்ல
முடிவேந்தன் வண்டியூரில் கூடார மடித்து

## தளவாயின் சபதம்

ஐப்பசி மாதத்திற் குள்ளாக உன்னை
அணியான புளியமரச் சோலையில் தூக்கா விட்டால்
நரகுல சிங்கம் நானல்ல பெரிய
நாலுகோட்டை தளகர்த்த னானல்ல கானும்

---

37. ஜனரல்

38. லாட்டு, மேலாட்டு-பிரபுக்கள்

38(அ) நீர் - Water இதனை Water என்று கருதி மொழி பெயர்த்துள்ளார்

38(ஆ) Agnew-இதை அக்கினி என்று கருதி நெருப்பு என்று மொழி பெயர்த்துள்ளார். நகைச்சுவை தோன்ற இவ்வாறு கூறினார்

39. அலம்பி-ஆலன்பி, ஆங்கிலேயன் பெயர்.

40. மார்ட்டின் Martin,

தேவர் புகழ் முத்து வடுகைய ராச
சிங்கமகி ழுதிகாரி நானல்ல கானும்"
எழுதியே கான்சாயபுக் கனுப்ப நல்ல

**கடிதம் கண்டு கான்சாகிபு சொல்வது**

இயல்பான கான்சாயபு பார்த்தேது சொல்வான்
வடக்கே நான் போறே னென்று சொல்லி மெத்த

**பதில் கடிதம்**

வலுவாகச் சொன்னியேநீ தாண்டவ ராயா
வடக்கேயு மென்னுடைய மனிதன் அதிலே
வரிசையுட னிருக்கிறான் துரை பெரிய பிரட்டன்
பிரட்ட னொரு தலையிருக்கு மட்டும் சிங்கம்
பிடிப்பாண்டா யெப்படியுந் திசை மதுரைக் கோட்டை
பிரட்ட னொரு தலைபிளந்து போனால் நாளை
பருந்தெடுத்த குஞ்சல்லோ நபாபு சாயபு[41]
திருச்சினாப் பள்ளி கோட்டை முதலாய் அடித்துத்
திசை கம்பநாட்டியே தோரணங்கள் கட்டுவேன்
துரைசிங்கம் சமர்த்தை யறியென்று நல்ல
துடிவளரும் துரைகானு வாக்காலே சொல்லி
சொன்னதொரு சேதிகளை யெல்லாம் கானு
துடியாகக் காயிதத்தில் கண்டே யெழுதி
வரவிட்டான் சாயபு நீலன் நல்ல
மங்கையர் வேள் தாண்டவன் மனதிலுட் கொண்டு
இன்னமொரு யோசனைகள் செய்து நல்ல
இதமுடனே வேளாள னேது சொல்வானாம்
கங்கைகுல தாண்டவ ராயன் நல்ல
கன்னி மாசாவின் மனதறிய வெண்ணி

**மாஷாவிற்குத் தளவாய் கடிதம்**

"தங்கச்சி மாசாவே கேளு உனது
தன்கணவன் சேதிகளை கேழ்க்கிலையோ தங்காய்
திருப்புவனங் கேழ்க்கிறான் தங்காய் உன்னுடைய
செல்வமுள்ள பாத்திபனூர் கேழ்க்கிறான் தங்காய்

---

41. பிரிட்டன் என்ற தளபதியின் துணையில்லாமல் நவாபு முகம்மதலிக்கு வலுவில்லை என்று கான்சாகிபு சொல்லுகிறான்.

திருப்புவனம் விட்டு விடுவேன் நாளை
சிவகெங்கை குடியிருப்பு நிலைக்க வொட்டான் கானன்"
என்றெழுதி காயிதத்தை யனுப்ப நல்ல
இயலான மாசாவும் பார்த்தேது சொல்வாள்

### மாஷாவின் பதில்

"அண்ணேநீ தாண்டவ ராயா தங்கச்சி
அன்பாக வொரு வயணஞ் சொல்லுகிறேன் கேளு
சிங்கத்தின் குட்டி நீயண்ணே இதற்குச்
சிந்தை தனிலே நீங்கள் கவலைகொள்ள வேண்டாம்
தங்கையாய் நானிருக்கும் போது உந்தன்
தலை சீமைக்கொரு நாளும் அழிவுவராது
சொல்லியும் கானுதுரை வந்தான் எனக்குத்
தோரணச் சீட்டெழுதித் தருகிறே னென்று
பவளம் போல் சிவந்திடு வாயால் நல்ல
பைங்கொடி யெழுதினதைத் தாண்டவ ராயன்
பார்த்துமன மகிழ்ச்சியா யிருந்து நல்ல
பண்பாகச் செங்கோல் செலுத்திவரு நாளில்
மதுரைநகர் கான்சாயபு துரையும் அப்போ
மண்டலிகன்[42] யோசித்துயேது செய்வானாம்

### மாஷாவிடம் கான்சாகிபு கூறுவது

ஏழு மணி வேளையிலே கானு அப்போ
எழுந்திருந்து மாசாவி னரண்மனைக்குள் வந்து
முடி மன்னன் துரைகானு சாயபு நல்ல
மோசமிகு மாசாவை யேறிட்டுப் பார்த்து
"அடி பெண்ணே துரைமகளே மாசா கானன்
ஆண் பிள்ளையொரு வயணஞ் சொல்லுகிறேன் கேளு
மலையாளம் பார்த்து வரவேணும்" பெண்ணே
மன்னாரு கோவிலும் பார்த்து வரவேணும்
இப்படி கானுதுரை சொல்ல மாசா

### மாஷாவின் பதில்

ஏறிட்டுப் பார்த்தவனுக் கேது சொல்வாளாம்
"மலையாளம் போய் பார்த்த பேர்கள் அங்கே
மாண்டவர்க ளல்லாமல் மீண்டவர்க ளில்லை

42. மண்டலிகன்-மதுரை மண்டல அதிபதி, 'சுபேதார்' என்று நவாபு அரசாங்கத்தில் அப்பதவியின் பெயர்.

வேசி பெருத்ததும் மதுரை நல்ல
வெள்ளாட்டி பெருத்ததும் தட்சணபூமி
வாசமுட னென் முகம் பாராமல் சாமி
மறுமுகம் மதுரையிலே பார்த்த காலத்தில்
மதுராபுரி கோட்டையு மாண்டு நீயும்
வயணமாய் செங்கோல் செலுத்தவு மாட்டாய்
எதிராடி வடக்கே பகையாதே நமது
ஈஸ்பர நாபபுதுரை சேதி தெரியாதோ
மேற்கே பகையாதே துரைமகனே அந்த
விருது பெற்ற ஐதரென்றால் பொல்லாத வண்டன்[42(அ)]
ஏற்கவே தெற்கே பகையாதே அதிலே
ஏழுதண்டிக்கைக்காரர் பொல்லாத போக்கர் [42(ஆ)]
கிழக்கே பகையாதே துரைமகனே அந்தக்
கீழ்க்காட்டு மறவருட சேதிதெரியா தோ
பழக்கமாயிரு பேருமிருந்தால் நாளும்
படைமதுரைக் கொருநாளு மெதிரொருவரில்லை"
என்றுமாசாவும் புத்தி சொல்ல கானு
இயல்பாக மறுத்துமவனேது சொல்வானாம்

## கான்சாகிபு கூறுவது

"இப்படி சொன்னாயடி பெண்ணே கானு
இன்ன மொரு சம்பிரதாயஞ் சொல்லுகிறேன் கேளு
டப்பைப் பாளையக்காரர் வணங்க விருது
ராஜகேசரி யென்று ராஜா திரையளக்க
முனை கொடுத்த பறங்கிமலை கோட்டை தன்னை
மூன்று நாளைப் பொழுதில் வாங்கினே னானும்
பனங்காட்டு மறவனெனக் கெதிரோ நாளை
பார்க்கிறே னவன் சமர்த்தை பாரடி பெண்ணே
பன்னிரண்டு வருஷ மானாலும் நானும்
பார்த்திபனூர் திருப்புவனம் பிடித்திடுவே னென்று
துடி நகுலன் கான்சாயபு சொல்ல அப்போ

## மாஷா கூறல்

திலோர்த்தமை யெனும் மாசா யேது சொல்வாளாம்
இனி யொருவரு மெதிரில்லை யென்று நீரும்
இப்படிச் சொல்லலாமோ கான்சாயபு துரையே
இலங்காபுரிக் கோட்டை யாண்டு முன்னே
இருந்தானே ராவணன் பத்து சிரசோடே

42 (அ) முரடன் 42(ஆ) போக்கிலிகள்

துளங்கு மகாமேரு தனை யெடுத்தான் அவன்
துடியான வாழ்வெங்கே போய்விட்டான் துரையே
கற்புடைய சீதா தேவியினால் இலங்கைக்
காவ லழிந்ததைக் கேட்கலையோ துரையே
அப்படியே மறவரும் பகைத்தால் நம்மிட
ஆதீன[43]ந் தப்பாம லெடுபடுஞ்[44] சொன்னேன்
மறவ னென்றால் பெரிய வீட்டுக்காரன் அதிலே
மறவ னென்றாலுடன் பிறந்த பிறவிதா னெனக்கு
மறவர் மேற்படை யெடுப்பை யானால் நானும்
மங்கிலியங்க ளைந்துந்தன் மடியின்மேற் போட்டு
மைந்தனையுங் கையோடே கூட்டி நாளை
மலையாளம் போய்விடியச் சேருவே னென்று
மாசாவுங் கோபமாய்ச் சொல்ல நல்ல
மதுராபுரி கானுதுரை யரண்மனை போய்ச் சேர்ந்தான்
நடந்ததோர் சேதிக ளனைத்தும் மாசா
நலமாக வெழுதியே தாண்டவனுக் கனுப்ப
வஞ்சியர் வேள் தாண்டவ ராயன் அப்போ
மாசாவின் காயிதத்தை வாசித்துப் பார்த்து
அன்னேரம் வரிசை யுடுப்புகளை நல்ல

## தளவாய் மாஷாவுக்குப் பரிசுகள் தயாரித்தல்

அன்புடன் மாசாவுக்கனுப்ப வேணுமென்று
முன்னூறு வுலப்பை மணிசெய்து நல்ல
முடிமன்னன் கைகொலுசு பொன்னாலே செய்து
வெள்ளியா லுரிக்கயிறு செய்து நல்ல
விலைமதியா வுரிக்கலையம் பொன்னாலே செய்து
அள்ளியதில் சீனிசர்க்கரை போட்டு நலமாய்
அடுக்கி யிருபது வுரியம் அழகாகச் சேர்த்து
மங்கை யவளிருந்து விளையாட நல்ல
தங்கத்தால் பல்லாங் குழியொன்று செய்த
தங்கத்தால் பலகணை செய்து நல்ல
தங்கத்தால் ஈர்க்கொல்லி பொன்னாலே சீப்பும்
மாசாவுக்குச் சீனத்து ரவிக்கை நல்ல
வச்சிரமணி மூக்குத்தி பொன்னிறாற் செய்து
மாசாவின் மகனுக்கென்று சொல்லி நல்ல
வயிடூரியக் குல்லாவில் வச்ரரேகக் கல்லழுத்தி

43. ஆதீனம் - ஆட்சி

44. எடுபடும் - கலைந்துபோகும், ஒழிந்துபோகும்.

கானனுக்கு முத்தாலே அங்கி வச்சிரக்
கல்லிழைத்த மோதிரமுங் கனக்கவே செய்து
முளகு சம்பா நெல்லரிசி தனிலே நல்ல
மூவைந்து பதினைந்து பொறியது யிடித்து
அழகு சீரகச்சம்பா நெல்லில் அப்போ
ஆரேழு மரக்காலை யவலிடிக்கச் சொல்லி
சரியாகச் சர்க்கரை கலந்து நல்ல
தளமான யாழ்ப்பாண பட்டு மெடுத்து
இருநூறு பொன்பெற்ற பட்டு ஒரு
இழை யிழைக்குச் சரிகையினால் குச்சுகள் கட்டி
பாற்பகவு பாலாடு நடத்தி நல்ல
பண்பான செங்கரும்பு கண்டு பணிரெண்டு
சேல் போலும் விழிமாசா மகிழ மதுரை
திசை நோக்கி யனுப்பினான் தாண்டவ ராயன்

**பரிசுகள் வருவதைக் கான்சாகிபு அறிந்தது**

வருகுது மறவரிட வரிசை என்று
மதுரைதுரை கான்சாயபு காதினாற் கேட்டு
தெருவீதி மேடை நடந்து கானு
திருமலை கர்த்தாக்கள் சாவடியுந்தாண்டி
சித்திரக் கற்கூடமுந் தாண்டி கானு
தேவடிவிட் டரண்மனைச் சாவடியுந் தாண்டி
கர்த்தாக்க ளமர்ந்திருக்கு மேடை அந்தக்
கருங்கல்லுச் சவுக்கையி லொயிலாகச் சாய்த்து
நரசிம்ம நாய்க்கனை யழைத்து நல்ல
நரசப்பன் குருவப்பனை வரவழைக்கச் சொல்லி
திறமிகு கான்சாயபு நீலன் அந்த
சீனிச்சிராவ்[45] முரசு வெள்ளைக் காரனை யழைத்து
படேபடே சாய்பையு மழைத்து மல்லி
நாய்க்கன் சேகரியை வரவழைக்கச் சொல்லி
தடமதனன் முத்தழகு பிள்ளை நல்ல
சண்முக வேலாயுத முதலியையு மழைத்து
தானப்ப நாய்க்கனை யழைத்து நல்ல
தளவாய் முதலி தன்னை வரவழைக்கச் சொல்லி

---

45. சீனிச்சிராவ் - சீனிவாசராவ். உயர்தர அதிகாரி. முரசு வெள்ளைக் காரன்-மார்ச்சஞ்த் என்ற பிரெஞ்சுக்காரன்-பீரங்கி செய்தற்காக அழைத்து வரப்பட்டவன். வேறு பெயர்கள் கற்பனைப் பெயர்களாகத் தோன்றுகின்றன அவை வரலாற்றுச் சான்றுகளில் காணப்படவில்லை.

வாய்த்த தொரு மீனாட்சி யையன் தனையும்
வகையாகச் சீக்கிரங் கூட்டிவரச் சொல்லி
பனிரெண்டு துரைமாரைப் பார்த்து ·கானு

## படையெடுப்பை அறிவித்தல்

படை மதுரைச் சாவடியில் சாய்ந்திருந்து கொண்டு
"நாளை பனிரண்டு மணி வேளைக் கெல்லாம் அந்த
பாங்கான திருப்புவன மேற்படைகள் பயணம்
நாளைக்கு மறவன் மேல்சாரி என்று
நம்முடைய சேனைகளுக் குறுதி சொல்லு மென்றான்
அந்த வேளைதனில் மறவருட வரிசை அதுவும்
வீறாக வண்டியூர் செங்க யிலிறங்கி
தூதுவனை முன்னாலே யனுப்ப அவனும்
துரிதமா யோடிவந்து மாசாவுக்குச் சொன்னான்
இதுசேதி மாசாவுங் கேட்டு பர
மேஸ்பரி மீனாட்சியை மனதிலே நினைத்து
சந்தோஷ மாகியே மாசா அவளும்
தயாராகி பாப்பாசு காலுக் கணிந்து
மகனையுங் கக்கத்தி லிடுக்கி மாசா
வருகிறாள் ராணுவச் சாவடி கடந்து
சின்னக் கடையுங் கடந்து கானு
தேவடி விட்டாள் மனைச் சாவடியுந் தாண்டி
சேர்ந்த கோபுர வாசல் தாண்டி இந்த
செக மகிழ்ந்துவிடும் வடக்கு வாசலுந் தாண்டி
மடல் வாழைக் கனி சொரியும் துறை அந்த
வையை யாற்றுக் கரையில் வந்து நின்றுகொண்டு

## மறவர் பரிசுகளை மாஷா கண்டது

உடுப்பு வகை வரிசைகளை யெல்லாம் மாசா
உத்தர ஆற்றுவெவளி கொண்டுவரச் சொன்னாள்
வருகுதே மறவருட வரிசை அது
வந்திருக்கும் வேடிக்கை சொல்ல முடியாது
அதிசயத்தைக் கண்குளிரப் பார்த்து மாசா
அகமகிழ்ந்து மாணிக்கப் பெட்டியைத் தறந்து
மாசாவும் வரிசைகளை யெடுத்து அப்போ
வகையுடனே கண்ணாலே யேறிட்டுப் பார்த்து
மாணிக்கப் பெட்டியைத் திறந்து அந்த/
வச்சிர மணிகுல்லாவை மகன் தலையில் வைத்து

கானனுக் கனுப்பியே முத்தங்கி அதையுங்
கனமாக வொருதட்டில் தானெடுத்து வைத்து
தங்கத்தின் தொட்டிலை யெடுத்து அதிலே
தன்மகனைச் சற்றுநேரம் போட்டாட்டிப் பார்த்து
தனக்குத் தந்த முத்து ரவிக்கை எடுத்துத்
தான் பூட்டிக் கண்ணாலே தானழகு பார்த்தாள்
செப்பரிய மூங்கிற் குழாய் திறந்து மாசா
சீனத்துப் பட்டெடுத்து தானுடுத்திக் கொண்டு
இப்படி யுடுப்புகள் வந்ததற்கு இனி
என்னதான் சொல்லுவானோ பாதகன் கானன்
என்மனது போலயடி மீனாள் தாயே
இருக்க வேணுங் கானனுட மனதென்று சொல்லி
நன்மைதர வேணுமடி மீனாள் கானன்
நல்லவாக்கு சொல்லவேணு மீனாட்சி[46] யென்று
நடந்து வந்தா ளப்போது மாசா கானு
ராசாதிபதி முன்னே வரும் வேளை தனிலே

## கான்சாகிபு கோபம்

கானகத்துப் புலி போலச் சீறி கானன்
கண் சிவந்து பொறி பறக்கப் பார்த்தேது சொல்வான்
"ஏதடி புதுச்சேரிப் பெண்ணே உனக்கு
இத்தனை யுடுப்புகள் கொடுத்தவர் களாரு
கனகோப மாகவே கேட்டான் அப்போ
கன்னியவள் மாசாவு மேது சொல்வாளாம்
ஆண்டவனே துரைகானு சாய்பே எங்கள்
அண்ணன் தாண்டவ ராயன் கொடுத்தனுப்பி வைத்தான்
மாஷாவு மிதுசேதி சொல்ல அப்போ
மதனதுரை கான்சாயபு யேது செய்யலுற்றான்
மகன்தலையி லிருந்த குல்லாவை கானு
வாங்கிவரச் சொல்லிரண்டு கல்லையுங் கழட்டி
உகந்த சராப்பை[47] யழைத்து இது
ஒரு கல்லுவிலை யென்ன பெறுமென்று கேட்டான்
"அரண்மனை விலையாக விற்றால் ஒன்று
அறுநூறு பொன்னுக்கு வாங்கலாங் கல்லை

---

46. மாஷா, கத்தோலிக்க கிறித்தவச்சியாயிருந்து முஸ்லீம் ஆனவள். அவள் மீனாட்சியை வணங்கியிருக்கமாட்டாள். ஆனால் கதை கேட்பவர்கள் இந்துக்கள், எனவே பாடகர் மாஷா மீனாட்சியை நினைப்பதாகச் சொன்னார்.

47. ஷராப் - தங்கம், முத்து, வைரம் முதலிய பொருளகளின் விலையை மதிப்பவன்.

இருகல்லுங் கூடி விலையில் விற்றால் ஒவ்வொன்று
ஏழுநூறு பொன்னுக்கு விற்கலா மென்றான்
இப்படி கல் விளையுந் தேசம் அங்கே
இருக்குதோ மறவருட புவனத்தி லவுண்டி
இப்படி கல்லு பெருத்தா லவுண்டி
என்பேச்சை எள்ளளவுங் கேள்ப்பானோ அவன்தான்
அடிக்கிறேன் மறவன்மேல் சாரி நாளை
பிடிக்கிறேன் திருப்புவனக் கோட்டைதனை பாதர்
முடிக்கிறேன் சம்பிரதாயம் லவுண்டி என்று
முழுநீல கானுதுரை தழுவணையிற் சாய்ந்தான்

### மாஷா கூறல்

பொருப்புலவுந் துரை கானுசாய்பே உந்தன்
புகழ்பெற்ற மனையாட்டி சொல்லுகிறேன் கேளு
திருப்புவனம் வேணுமென்று கேட்டால் நானும்
ஸ்ரீதனம் போல வாங்கித் தருகிறே னென்றாள்
இப்படி மாசாவுஞ் சொல்ல அப்போ
இயல்பாக கான்சாயபு யேது சொல்வானாம்

### கான்சாகிபு கூறல்

பெண்சாதி மானியந் தனிலே லவுண்டி
பதம் பெற்றதுரை கானு ஆள்வேனோ தேசம்
நாளைக்கே யொரு பளித்தா தீர்த்து நானும்
வாங்குவேன் திருப்புவனக் கோட்டை நான்சிங்கம்
மண்டியே வொரு பளித்தா தீர்த்து நாளை
வாங்குவேன் மறவருட பாத்திப னூரென்றான்,
மாலான கானதுரை சொல்ல நல்ல
மங்கையர் சிகாமணி மாசாவுக் கப்போ
கோபங்கள் சொல்ல முடியாது மாசா
குவளை விழி சிவப்பேறிச் சகைதனிலே நின்று
"இராவணனாய் நீவந்து பிறந்தாய் அதற்கு
இராம சாமியாகப் பிறந்திட்டான் மறவன்
சூரனாய் நீவந்து பிறந்தாய் சிவ
சூரனாய் நீவந்து பிறந்தாய்
கோரமிகு கஞ்சனாய்ப் பிறந்தாய் அவனைக்
கொன்றதோர் கிருஷ்ணனாய் பிறந்திட்டான்
மறவன்[47(அ)]

---

47(அ) புராணங்களில் கதாநாயகர்களான தெய்வங்களின் எதிரிகளை வரிசைப்படுத்தி கான்சாகிபுவுக்கு உவமையாக மாஷா கூறுகிறாள். இது போலவே மதுராவிஜயம் என்னும் நூல் கங்காதேவி மதுரை சுல்தான்களைப் புராணங்களில் வரும் அசுரர்களுக்கு ஒப்பிடுகிறாள்.

துரியோதன னாகப் பிறந்தாய் குரு
தேசிகன் தருமரைப்போல் பிறந்திட்டான் மறவன்
அரிய கீசகன் போலப் பிறந்தாய் அதற்கு
அதிவீரன் வீமனைப்போல் பிறந்திட்டான் மறவன்
திறல் விஜயன்போல் மறவன் பிறந்தான் அதற்குத்
துரியோதனன் போல் பிறந்தாய் திசைமதுரை காக்க
ஆரோடே பகைத்தாலு முனக்கு துரையே
அவர்களா லொருநாளுந் தாழ்வு வராது
மறவருடன் பகைத்த காலத்தில் இந்த
மதுராபுரி மண்ணுனக்குத் தங்காது சென்னேன்
மறவ னென்றால் பெரிய வீட்டுக்காரன் மறவன்
மந்திரி வெள்ளாளன் வெகுதந்திரக் காரன்[48]
வெள்ளியாய் முளைத்தாலு முளைப்பான் அவனும்
வெள்ளாள னோடுமட்டு மெதிர்க்காதே வேண்டாம்
காராளனுக் கருமை தெரியாது நமது
கருவை யறுத்திடுவான் தாண்டவ ராயன்
மாசாவு மிப்படிச் சொல்ல கானு

**கான்சாகிபு கூறல்**

மன்னவனுங் கண்சிவந்து யேது சொல்வானாம்
"அடுப்பூதத் தெரியுமா லவுண்டி உனக்கு
ஆஸ்தான சங்கதிகள் தெரியுமோ பெண்ணே
சோறாக்கத் தெரியுமடி பெண்ணே" உனக்கு
துரைகளுட சம்பிரதாயம் தெரியுமோ லவுண்டி
கஞ்சி காச்சத் தெரியுமடி பெண்ணே உனக்குக்
காவலர்கள் கெடிஸ்தலங்கள் தெரியுமோ லவுண்டி
மிஞ்சிப் பேசுவதோ லவுண்டி இத்தனை
வீரியங்க ளேதடி புதுச்சேரிப் பெண்ணே

**மாஷாமீது கான்சாகிபு கோபித்தான்**

உருவியே தங்க மாஷாவை கோபித்து
உறைவிட்டு மாஷாமே லெரிந்திட்டா னப்போ
இருபது பொன் சகலாத்து மருந்து நல்ல
இளந் துடையில் மாசாவுக்குக் காயங்களாசசு

---

48. மறவர்கள் வீரர்கள் - மறவர் தாண்டவராயன் தந்திரி என்று மாஷா கூறுகிறாள்.

முகரேடே பேச முடியாது என்று
முகந்திருப்பி மாசாவும் வெளியிலே வந்து
அசுமான கிரிதனிலே நின்று மனதி
லன்பாக மாஷாவும் யோசனைகள் செய்து
துரோகியின் நன்மை யெல்லா மறிந்தோம் மதுரை
தேவி நன்மை யினியறிய வேணுமென்று

## மீனாட்சிக்குச் சிறப்புச் செய்தல்

வராகி செகசோதி கௌமாரி மதுரை
மகமாயி சன்னதிக்கு வந்தனைகள் செய்து
எண்ணூறு பொன்னெடுத்துக் கொடுத்து மதுரை
ஈஸ்வரி மீனாட்சிக்குச் சிறப்பு செய்யச் சொல்லி
முந்நூறு குடந்தண்ணீர் கொண்டு வந்து
முழுகியே மாசாவும் பட்டுடை யுடுத்தி
மந்தாரை முல்லை யிருவாட்சி நல்ல
மகிழம்பூ செவ்வலரி மாலைக ளணிந்து
நந்தா குடமல்லி தரித்து நல்ல
நளினி மிகுபுனுகு சவ்வாதுகள் தானணிந்து
சதுராகக் கோபுரங் கடந்து மீனாள்
சந்நிதியில் மங்கையர்கள் தான்சூழ வந்து

## மாஷாவின் பிரார்த்தனை

திருமலைக் கர்த்தாக்கள் நாட்டில் ஆயி
தேவியாய் வந்தவளே பாண்டியன் மகளே
சாதியிலே புலைச்சிநான் தாயே உந்தன்
சந்நிதிக் கெதிராக வருகிறே னடியாள்
மாடு தின்னும் புலைச்சி நான் வாரேன் என்று
மனதிலே யெள்ளளவுங் கவலை வைக்க வேண்டாம்
கொஞ்மாய் மனதிலே நிலைந்து ஆயி
கோபித்துக் கொள்ளாதே பாண்டியன் மகளே
வஞ்சக மனதில் நினையாதே பெற்ற
மாதாவு நீயுந்தான் மதலை நானடியாள்
துரைகானு பங்கிலே நீயிருந்தால் எனக்கு
துடியாக வலதுபுறஞ் சொல்ல வேணுந்தாயே
இரவிகுல[49] மறவர் பங்கி லிருந்தால் எனக்கு
இடதுபுறஞ் சொல்லென்று கேட்டாளே மாசா

49. மறவர்குலம் ஆரியகுலம் என்று மாஷா சொல்கிறாள்.

தென்புறத்தில் சொல்லாத படிக்கு மீனாள்
திருவிருப்பில் இடதுபக்கங் கெவுளியது சொல்ல
என்மனது போலேயடி மீனாள் தாயே
இருந்ததுவுன் மனது பாண்டியன் மகளே
என்று சொல்லித் திரும்பியே மாசா தனது
எழிலான மாளிகையினுள் வந்து சேர்ந்து
விரும்பி துருமர்க்கார முத்தை அழைத்து
மிக்கதள கர்த்தனுக்கு விரைந்தெழுதலுற்றான்.

## மாஷா தாண்டவராயனுக்கு எழுதிய கடிதம்

ஆடுமாடு பதனமடா அண்ணே உனது
ஆண்டவன் துரைமகன் பத்திரஞ் சொன்னேன்
மாடு தின்னும் புலைச்சி நானண்ணே என்னை
மார்க்கமா யுறவென்று நம்பினையே அண்ணே
சொல்லாத சேதியெல்லாஞ் சொன்னேன் அந்தத்
துரைமூடன் கானனுக்கு விசுவாச மில்லை
பொல்லாத முழுமூடன் கானன் நானும்
புத்தி சொன்னால் கேழ்ப்பானோ கேழ்க்கவே மாட்டான்
கானனை ஜெயித்திட்டா லண்ணே உனக்கு
கலக்கங்க ளொன்றுமில்லை மணிமார்பா
குறிப்பாக வெள்ளம் வருமுன்னே அணை
கோலிக்கொள் வடக்கு சென்று நபாபிடத்திற் சொல்லு
என்னை நம்பி நீயிருக்க வேண்டாம் உனக்
கியன்றபடியார் முல்லைத் தாண்டவராயா
மனது ரம்மியமாக வெழுதி மடித்து
மாரியர்க் கார்கையில் கொடுத்தனுப்பி வைத்தாள்
மாரியெனும் அக்காரும் வாங்கிக் கொண்டு
மணலூரு தாண்டியே திருப்புவனஞ் சேர்ந்து
மண்டலீகன் கொலுவுக்கு முன்னே வைத்து
வகையாகச் சேதி சொல்லி கும்பிட்டு நின்றான்
மாசாவின் காயிதத்தைப் பார்த்து அந்த
மந்திரி தாண்டவ ராயன் சந்தோஷப்பட்டு
மருமகளே கைலாசப் பிள்ளை தங்கை
மாசாவின் காயிதத்தை வாசியென்று சொன்னாள்
மருமகனுங் காயிதத்தை வாங்கி அய்யோ
வாசிக்கத் தளகர்த்தன் காதாரக் கேட்டு

## தாண்டவராயன் சிந்தனை

சிங்க மேயர்க் காரமாரி
சேதி நான் வேளாளன் சொல்லுகிறேன் கேளும்
தங்கச்சி யென்றல்லோ யிருந்தேன் எனக்குச்
சத்ராதி யானா[50]ளே திசை மதுரை மாசா
மைத்துனன் என்றல் லோயிருந்தேன் எனக்கு
மாத்தானாய் வந்தானே மதுரைத் திசைகாளன்
துரிசா[50(அ)] உன்னுறவு பகையாச்சே என்று
சொல்லு போமோ சாவுக்குள்ளே பலிமாறி
இனிமேலுந் திருபுவன மிருந்தால் நம்மை
இருக்கொட்டான் வடக்கே தானடக்க வேணுமென்று
தனிவீர தாண்டவ ராயன் அந்த
க்ஷணத்திலே பயண மென்றுதன் சேனைக் குரைத்து
மாப்பிள்ளை சுப்ரமண்ய தேவா ஒரு
வார்த்தை நான் வேளாளன் சொல்லுவேன் கேளு
தப்பாமல் திருபுவனந் தனிலே நீங்கள்
தயாரா யிருக்க வேணுங் கானுதுரை வரு வான்

## தளவாய் ஆற்காடு செல்லுதல்

ஆற்காடு போரேன் தம்பி ஆறு
மாசமோ ஆறு வருஷமோ தெரியாது
மார்க்கமாய் நான் வருமட்டும் நமது
மறவர் திருப்புவனம் பத்திர மென்று
உறுதிகளும் வெகுவாகச் சொல்லி அந்த
உத்தமனுங் குதிரைமேல் சீனிவைத் தேறி
நடந்திட்டான் தாண்டவ ராயன் அந்த
நாழியிற் சிவகங்கைப் பேட்டை வந்து சேர்ந்தது
தடம்பரவும் பொன்மலர் செய்து நல்ல
தங்க மலர் வெள்ளி மலர் தன்கையி லெடுத்து
விருதுரண பேரிகை முழங்க குதிரைக்
மேலிட்ட நகப்யத்துங்கா முழங்க
இருபுறமும் வெண்கவரி வீச நல்ல
எறியீட்டி வெடிக்காரர் முன்னே நடக்க
சுத்திக் குடைக்காரர் சூழ குதிரைக்
காரர்படை வீறுடனே கடல்போல் நடக்க
வெறி வெண் சாமரைகள் வீச முல்லை
வேளாளன் புறப்பட்டான் சொல்ல முடியாது

---

50. சத்ராதி - சத்துரு, விரோதி.

50 (அ) துரிசா - விரைவாக

மிக்காஞ்சிரங் காலுங் கழுதது நல்ல
　　வீறான நால்கோட்டை சோழபுரந் தாண்டி
ஓலக்கூர் மைதானந் தாண்டி நல்ல
　　உத்தாருந்தபட்டி ஒப்பமுந் தாண்டி
அரளிக்கோட்டை யாசாரந் தாண்டி அந்த
　　ஆஸ்தானந் திருக்கொடியர் மைதானந் தாண்டி
திறல் விஜயன் தாண்டவ ராயன் அப்போ
　　சீக்கிரம் வயிரவன் பட்டி போய்ச் சேர்ந்து
சலுகைப் பெரியுடை[51] யானின்ற நல்ல
　　சவர்னகர் மிகன்முத்து வடுகையன்

## சிவகங்கை மன்னனைக் காணல்

சந்திப்பு கொடுக்க வேணுமென்று துரைக்குத்
　　தயாராகப் பூப்பந்தல் போட்டிடச் சொல்லி
மஞ்சு தவழ் கனிவாழை நாட்டில் நல்ல
　　மகர தோரணங்கள் கட்டி மாங்கனிகள் தூக்கி
அஞ்சடுக்குப் பஞ்சு மெத்தை விரித்து அதிலே
　　பாங்கான திண்டொன்று கொண்டு வைத்து சாத்தி
இச்சை பெற சல்லாவை விரித்து நல்ல
　　இதமாக வொப்புறப் பன்னீர் தெளித்து
வண்மை யுடன் சோடித்து வைத்து சுக
　　மண்ட லேஸ்வரன் துருவன் முத்து வடுகையன்
கண்டவளர் விபூதி தனைப் பூசி நல்ல
　　கஸ்தூரி பொட்டுஞ் சவ்வாதுந் தரித்து
ஒருபிடி பூநூல் துலங்க[52] நல்ல
　　உத்திராட்சப் பொன் கிளையூஞ்ச லிட்டாட்ட
மறுமுத்துத் தாழ்வந் துலங்க காதில்
　　மோடியுடன் மரகதக்கல் கடுக்கனு மின்ன
இருக்கை யிலுந் தவங்களை யிலங்க சிரசில்
　　ஈரைந்து முத்து கொண்டை பாகையுந் துலங்க
பூவாலே பந்தலபோட்டு நல்ல
　　பூலோகத் தேவேந்திரன் வெளியில் வருகையிலே
வடக்கு நடக்க கிடுகிடென்றத்திர
　　வாங்கா[52(அ)] வலம்புரிச் சங்கு நின்றூத

---

51. பெரியுடையான் - பெரிய உடையாத் தேவர்.

52 மறவர் குல ஜமீன்தார்களுக்குப் பூணூல் கிடையாது

52(அ)வாங்க -சின்னம், வாங்கா என்பன வாத்தியங்கள்.

இடிபோலப் பேரிகை முழங்க நல்ல
இசையான சங்கீத மேளந் துலங்க
திடமுடைய நகுலா பராக்கு[53] உலகில்
தேவ தேவேந்திரா தீரா பராக்கு
வடக்கரைப்புலி பெரிய வுடையார் தேவர்
வங்கிஷம்[54] விளங்க வருமாலே பராக்கு
இப்படி கட்டியங் கூற பூலோக
வந்திர னாதிபதி கொலுவந்து சேர்ந்து
கெற்புலி முத்து வடுகையா பாதர்
கிரீஷகொலு சேர்ந்தவுடன், தாண்டவ ராயன்
திருப்பாகரை தனக்கு வந்து வெள்ளி
செம்புதனில் சுத்த ஜலமதை மொண்டு கொண்டு
திருப்பாகரை யிதை கடந்து துரை
தேவேந்திரன் கொலுவில் சென்று தளகர்த்தன்
ஒருபிடி வராக னொருதட்டில் கொட்டில்
உத்தமன் தளகர்த்த னிருகையி லேந்தி
துருவ னெதிரில் திஷ்டி[55] சுத்தி அதைச்
சுழற்றியெறிந்து முல்லை தாண்டவராயன்
வேதமொரு முரையோர்கள் துரையை
வேளாளான் மூன்றுதரஞ் சுற்றிவந்து நின்று
பாதமதில் பன்னீர் சொரிந்து பின்
பட்டிழை யீரமது தானே துடைத்து
தங்கமலர் வெள்ளி மலரெடுத்து வரை
சாமியுட பாதத்தில் தானுஞ் சொரிந்து
செங்கை குவித்தே முல்லை மார்பன் நல்ல
செகமண்ட லேஸ்வரன் திருவடி தனியே

## முத்துவடுகன் - தளவாய் உரையாடல்

திடீரென்று யிருகையால் தாங்கி துரை
சீர்பெற வாசீர்வதித் தெழுந்தி ரென்று சொல்லி
மோதிரக் கையினாலே தாங்கி அண்ணே
முடிமன்னா காராளா சொல்லுகிறேன் கேளு
வயதுக்கு மூத்தவன் நீயண்ணே என்னை
வணக்கமாய்க் கும்பிடுதல் ஞாயமல்ல சொன்னேன்

53. பராக்கு - இது எச்சரிக்கைக்காரர் கூறுவது.

54. வங்கிஷம், வங்கிசம் (பா.வ) அரசர் முன்னிலையில் கட்டியக்காரர் கட்டியம் கூறுவது.

55. திஷ்டி - கண்ணூறு, திருஷ்டி, வராமலிருக்க

முடி சாய்த்துத் தாண்டவ ராயன் துரை
முத்து வடுகையரது பாதத்தில் வீழ்ந்தான்[56]

## முத்துவடுகன் தளவாய் உரையாடல்

திடீரென்று யிருகையால் தாங்கி துரை
சீர்பெற வாசீர்வதித் தெழுந்திரென்று சொல்லி
மோதிரக்கையினாலே தாங்கி அண்ணே
முடிமன்னா காரளா சொல்லுகிறேன் கேளு
வயதுக்கு மூத்தவன் நீயண்ணே என்னை
வணக்கமாய்க் கும்பிடுதல் ஞாயமல்ல சொன்னேன்
ஆதிக்கநிலை நிறுத்தி வைத்தாய் அண்ணே
ஆஸ்தானம் நிலை நிறுத்தி வைத்தவனே நீதான்
என்ன சங்கதி கொண்டுவந்தாய் அண்ணே
எந்தனுக்குச் சொல்லென்று கேட்டாரே துரையும்
ஆண்டவனே முத்து வடுகையா உனது
அடிமை நான் காராளன் சொல்லுகிறேன் கேளு
உனைக் காண வந்தவகை சாமி
உள்ளபடி வேளாளன் சொல்லுகிறேன் கேளு
திருச்சினாப் பள்ளி கோட்டை தனிலே யிருந்து
திசை மதுரைக் கோட்டைக்கு வந்தானே கானன்
நெல்லூர் சிராப்பள்ளியிலிருந்து கானன்
நேர்தெற்கே வடமதுரைக் கோட்டை வருகையிலே
வரும்போது கும்தானென்று வந்தான் அந்த
மதுரைக்கு வந்தபின்பு கானுதுரை யானான்
அவனை மைத்துன னென்று றவாடி அவன்
மாசா தனைத் தங்கையென் றெண்ணி
உடுப்புகள் வெகுவாகக் கொடுத்தேன் அந்த
உலோபியாங் கானனுக்கு விசுவாச மில்லை
கட்டாத வுடுப்பைக் கட்டியனுப்ப துரையே
கானனுக் கெவ்வளவும் விசுவாச மில்லை
திருப்புவனம் விட்டு விடுவேன் நாளை
சிவகங்கை குடியிருப்பு நிலைக் கொட்டான்⊗ கானன்
இப்படி தாண்டவ ராயன் சொல்ல நல்ல
இயல்முத்து வடுகையருஞ் சொல்வார்
வேணு மென்று கானுதுரை கேட்டால் அண்ணே
வீணிலே சனியனை யிழுக்காதே வேண்டாம்

---

56. ராஜாவென்று பட்டம் பெற்ற ஜமீன்தார்களைப் பிறர் வணங்கும் முறை மேல் 10 வரிகளில் கூறப்பட்டது.

⊗ நிலைக்கவொட்டான் (பா.வ)

நாலு கோட்டை கொம்புமே போதும் அந்த
நலங்கொண்ட பாத்திபனூர் விட்டுவிடு மென்றார்
மேலு மவனுடனே பகையாதே சண்டை
மேற்கொண்டு மவனுடனே யெதிர்க்க முடியாது
எந்தெந்தச் சீமை கேட்டாலும் அவனுக்
கில்லை யென்று மாத்திரஞ் சொல்லாதே வேண்டாம்
மாபோசன் மதுரையுடன் சேர்க்கை திருப்பு
வனக்கோட்டை விட்டுவிடு மதிமந்திரி யென்றார்
இப்படித் துரைமகனுஞ் சொல்ல நல்ல
இய பாக வேளாள னேது சொல்வானாம்
போபோ பேய் கொண்ட துரையே உமது
புத்தியு மிம்மட்டோ முத்து வடுகையா
சுண்டு விரலிடங் கொடுப்பேனோ சாமி
துரைவாசல் மதிமந்திரி யதிகாரி யடியேன்
கண்டறியு முனதடிமை சேதி என்று
காராளன் சொன்ன மொழி காதாரக் கேட்டு
இப்படித் தயிரியங்கள்[⊗] சொன்னாய் அண்ணே
எப்படி யவனைச் செயங் கொள்வை யென்றார்
அப்போது முல்லை மணிமார்பன் சிங்கம்
ஆண்டவன் முகம் நோக்கினயேது சொல்வானாம்
ஆற்காடு நானுமிப்போ கடந்து நல்ல
அனைவர் புகழ் நபாபுதனைத் கண்டு சந்தித்து
தாக்கவே படை திரட்டி அந்த
சற்சனன் துரை பெரிய பிரட்டனையுங் கூட்டி
மேசர் கிரீட முசலாலி கானன்
மேசர் துரை முசலியர் பறங்கியையு மழைத்து
ஆவணி மாதத்திற் குள்ளாக அவனை
யனைவோருமறியவே தூக்காமல் விட்டால்
என்பேரு தாண்டவ னல்ல சிங்கம்
எடுத்ததுவுந் தளகர்த்த மோதிமுமல்ல
பிடித்ததுவு மெழுத்தாணி யல்ல பாதர்
போட்டதுவுந் தீவாசுக் கம்பளியு மல்ல
நன்னகர் சிறந்தபுவி போற்றும் நல்ல
நாலு கோட்டை தளகர்த்த னானல்ல வென்றான்
ஏற்கவே வீரியஞ் சொன்னாய் அண்ணே
இதற்கு நான் மறுவயணஞ் சொல்லுகிறேன் கேளு
ஆற்காடு போகிறது அண்ணே எனக்கு
அன்பாகத் தோற்ற வில்லை தாண்டவ ராயா

⊗ தைரியம்

துலுக்கனை நம்பலாமோ அண்ணே அந்த
துரோகி பறங்கிகளை நம்பவுங் கூடாது
மேலுக்கா யிதுவரைக்கு மிருந்தோம் அம்மா
விருதாவிலே வடக்கே போகிறா யண்ணா
கொள்ளுதான் பெருத்திருக்குந் தேசம் அதிலே
குடிமெத்த வுண்டு திருச்சிராப் பளியில்
ஏழரை வருஷத்துப் பகுதி நாமும்
எள்ளளவும் வடக்குமுகங் கொடுத்தனுப்ப வில்லை
போன நாழியிலே நபாபு உன்னைப்
பிடித்தல்லோ பாராவில் போடுவா னென்றான்
மகானு பாவா முத்து வடுகையா உனது
மதிமந்திரி பிரதாபஞ் சொல்லுகிறேன் கேளு
காலாலே முடிவேனொரு முடிச்சு அதனைக்
கையினால விழ்த்தால் தானவன் தான் நவாபு
மாலான மும்மதலி சாயபை பொன்
மலைவெளி யிருந்து வந்து பேட்டியுஞ் செய்து
அவனிடத்தில் வெகுமதியும் வாங்கி சாமி
அவன் செவியை நான் பிடித்தாட்டு வேனென்றான்
கவனமுடன் முல்லை மணிமார்பா வடக்கே
கனமுடனே போய்வர யோசிக்கிறாயண்ணே
ஆர்க்காடு போனவர்க ளண்ணே கொழுத்த
யானைவாயில் கொடுத்துத கரும்பல்லோ[57] மந்திரி
மண்ணைத் தானாண்டவர்க ளண்ணே இந்த
மண்ணிலுங் கோடியடா முல்லை மணிமார்பா
என்றைக்கு நிச்சயமோ அண்ணா இப்போ
என்மனதுக் கெவ்வளவுஞ் சம்மதிக ளில்லை
எந்தெந்தத் தேசங் கேட்டாலும் அவனுக்
கில்லை /யென்று மாத்திரஞ் சொல்லாதே வேண்டாம்
இந்த மொழி சொன்னீரே சாமி தேவர்
இப்படியோ செங்கோல் செலுத்தவே போறீர்
ஒருகாசு செலவழிக் காமல் சாமி
உனதடிமை திசைமதுரை பிடியாமற் போனால்
தரும குணமுத்து வடுகையா உமக்குத்
தலையான பிரதானி யாவனோ வென்றான்
என் வார்த்தை கேளாமற் போறா யுன்னை
என்றைக்கு காண்பேனோ முல்லை மணிமார்பா
சாமியுட திருநாமந் தன்னை அடியேன்
தலையின் மேல் வைத்துக் கொண்டு ஆற்காடு சென்று

57. பழமொழி, யானை வாய்க் கரும்புபோல.

திசைகட்டு ஒருகட்டாய் கட்டி நாளைத்
திருப்புவனத் திசையாகப் பாளையங்கை கூட்டி
மறவருட தளகர்த்த னென்று இந்த
வையக முழுதுமெனச் சொல்ல வேணுமென்றான்
ஆற்காடு போகிற போது நல்ல
⊗டீக்காகப் போவென்றார் முத்து வடுகையர்

## தளவாய் முத்துவடுகநாதனிடம் கூறுதல்

சிங்கமே கவுரி வல்லையா[58] ஒரு
சேதிநான் வேளாளன் சொல்லுகிறேன் கேளு
உரியரிசி பஞ்ச காலத்தில் கெவுரி
ஒருகோடி ஜனத்தையும் ரட்சித்த நாதா
ஒற்றைக் குதிரை யேறாதே சாமி
உள்சுற்றுக் காட்டுவழி மிஞ்சி நடவாதே.
நான் போயி வருமட்டுந் துரையே நம்முட
நாயகன் காளையார் கோயி லிருக்க
இவிடத்தி லின்ன மிருந்தால் நாளை
மோசங்கள் வந்துவிடு முத்து வடுகையா
சொல்லிய வாய் மூடுவதற் குள்ளே அப்போ
துரைமகனும் அண்ணன் முகமேறிட்டுப் பார்த்து

## முத்துவடுகன் தளவாயிடம் கூறுதல்

அண்ணாவே தாண்டவ ராயா இப்போ
அன்பாக வொரு வயணஞ் சொல்லுகிறேன் கேளு
இவ்விடம் விட்டு ஆற்காடு போனால் உன்னை
என்றைக்குக் காண்பேனோ தாண்டவ ராயா
பொன் மிகுந்த திருச்சினாப் பள்ளிக்கு நீயும்
போகிறையோ உன்னழகு பார்க்கவேணு மென்று

## முத்துவடுகன் பரிசுகள் வழங்குதல்

ஆண்டவன் முத்து வடுகையர் அந்த
நாழிகையில் காளாஞ்சி கருப்பனை யழைத்து
ராயப்பன் சேருவை யழைத்து அப்போ
நலங்கொண்ட யானைதனைக் கொண்டுவரச் சொல்லி
நேயமுடன் சித்திரங்க ளெழுதி அதிலே
நேராகப் பூச்சக்கிர அவதாவும்[59] வைத்து

58 முத்துவடுகநாதனுக்கு மறுபெயர்.

59 ஹவுடா (உருது) அம்பாரி. ⊗ டீக்காக - ஆடம்பரமாக (உருது)

முத்து நாய்க்கனையு மழைத்து நல்ல
முடிமன்னன் பொக்கிஷ வீட்டைத் திறந்து
உக்கிராண வீட்டைத் திறந்து ஒரு
பெட்டியைத் திடீரென் றெடுத்துவரச் சொல்லி
வச்சிர மணிப் பெட்டியைத் திறந்து அப்போ
வரிசைகள் வெளிதனிலே திடீரென் றெடுத்துப்
பத்துப் பொன் பொன் போருவை யெடுத்து நல்ல
பச்சைக் கடுக்கனொடு பாகை[60]யுங் கொடுத்து
தங்க வளை முன்கை மூதாரி பசுந்
தங்க மோகன மாலை சரப்பளி கொடுத்து
துங்கமிகத் தகட்டு நிலையங்கி நல்ல
துதிபெறு வெள்ளாளனுக்கு வெகுமதிகள் செய்து
அழகு நான் பார்க்க வேணுமண்ணே சற்றே
ஆனை மேல் நீயேறி வாவென்று சொன்னார்
தளகர்த்தன் வெகுமதிகள் வாங்கி வெகு
தளத்துடனே யானைதனை மூன்றுதரஞ் சுற்றி
நேராய்ச் சலாம் வாங்கி நின்று அப்போ
நேரில் நிற்கு முத்து வடுகையரைப் பார்த்து

## முத்துவடுகன் பேசியது

மெத்தவெகு துடித்தனஞ் செய்யாதே நம்மிட
மேனாட்டு கள்ளருட னெதிர்த்து பகையாதே
பேட்டி நான் செய்துவரு மட்டும் நல்ல
பேரான சின்னையா நல்லண்ணே தேவா
தெற்கு தென் பாரிசந் தனிலே நல்ல
திடமாக யானை கட்டுங் கல்லுக்கு மேற்கே
சாருநிகர் மேல்வீடு தன்னில் முத்துக்
சுவர்ணகாமி மகன் கொலுவினி லிருந்தார்
வலுவீர கெம்பீரா பராக்கு என்று
மதிமந்திரி யானை மேலிருந்து கும்பிட்டான்
ஆண்டவனே முத்து வடுகையா என்று
அரசர் புகழ் காராளன் கும்பிடும் போது
சலுகைப் பெரியுடையா னீன்ற ராஜ
சுவர்ணகாமி மகன் முத்து வடுகையன்

## முத்துவடுகருடன் பேச்சு

உத்தரவு முல்லை முத்துவடுகன் மணிமார்பா இப்போ
உன்னழகு கண்ணாலே பார்த்தேனடா அண்ணே

---

60. தலைப்பாகை.

செத்தாலு மோட்ச முண்டு அண்ணே என்று
திருஷ்டி சுற்றி போய்வாரு மென்று சொன்னா ரப்போ
தீரனும் போய்வா வென்றுரைக்க அப்போ

## தளவாய் பயணம்

திருப்பினான் பாளையந்தனை தாண்டவ ராயன்
கட்டியம் பராக்கென்று கூற நல்ல
கண்வளரும் வயிரவன் பட்டியுந் தாண்டி
திருபத்தூர் சீதேவி தாண்டி வளர்
சிரா வயலுடன் மருதங்குடி கடந்து
சிராவயல் ஒப்பமுந் தாண்டி தனது
திருவளருங் குன்னக்குடி வந்தங்கே சேர்ந்து

## குன்றக்குடி முருகனை வணங்கல்

ஐம்பது பொன்னெடுத்துக் கொடுத்து நல்ல
ஆண்டவன் குமரகுருக்குச் சிறப்புச் செய்யச் சொல்லி
மந்தாரை முல்லை யிருவாட்சி நல்ல
மகிழம்பூ குடமல்லி சாத்தென்று சொல்லி
வெள்ளிமலர் பொன்மலருஞ் சாற்றி நல்ல
விதமான வில்வமல ரர்ச்சனையுஞ் செய்து
தாண்டவ ராய தளமந்திரி நல்ல
தயிரியமாய் கும்பிட்டு ஏது சொல்வானாம்
வடக்கே நான் போய் வரலா மென்றால் சுவாமி
வலதுபுறங் கெவுளியது சொல்லவேணும் சுவாமி
வடக்கே நான் போகலாகா தென்றால் சுவாமி
இடதுபுறஞ் சொல்ல வேணுமென்றான் வேளாளன்
கேட்டுவாய் மூடுவதற் குள்ளே நல்ல
கெம்பீரமாய்த் தெட்சண முத்தரவு மாச்சு
சுவாமியி னுத்தரவு தன்னை நல்ல
தளமந்திரி தாண்டவன் முந்தாணியில் முடிந்து
சந்தோஷமாய் வெளியில் வந்து நல்ல
தாண்டவ ராய தளமந்திரி மகிழ்ந்து
வையாபிரிக் கரையினி லேறி மண்ட
லாதிபதி தீவாசச் கம்பளியி லிருந்து

## ராமநாதபுரம் தளவாய்க்குக் கடிதம்

தம்பி தாமோதரம் பிள்ளை இப்போ
தயிரிமா யொரு சேதி சொல்லுகிறேன் கேளு

வம்பனாம் சின்ன மறவனோலை உனக்கு
வருதென்று சந்தோஷங் கொள்ளாதே அண்ணே
வனஞ் சிறந்து வரப்பறிந்து போனால் அந்த
வாய்க்காலும் நிற்குமே அல்லிகுல மன்னா
உன்சீமை யழிந்து நவாபு கையிலே நிலைத்து
இருக்குமோ உன்சீமை ராமநாத புரந்தான்
சிவகங்கை பேட்டை போகையிலே நிலைத்து
நிற்குமோ உன்னுடைய ராமநாதபுரம் கோட்டை
மலைக் கோட்டை துருவ மதிலிருந்து நமது
மதுராபுரிக் கோட்டைக்கு வந்தானே கானன்
மதுரைவளர் கான்சாயபு துரையே நானும்
மைத்துன னென்று சொல்லி யொப்பாரி பிடித்து
மாசாவை தங்கை யென்று சொல்லி இப்படி
மரியாதையாய் நானும் யோசித் திருந்தேன்
என்ன வுபசாரஞ் செய்தாலும் அவனுக்
கெள்ளளவும் மனதிலே விசுவாச மில்லை
நிலையான திருப்பு வனமும் உன்னுடைய
நேரான பார்த்திபனூர் கேழ்க்கிறான் கானன்
உன்னுடைய திருச்சினாப் பள்ளி சீமை
யொருமிக்கக் கேழ்க்கிறான் கான்சாயபு நீலன்
ஆற்காடு நவாபை யழைத்து வந்து அவனை
அடிக்க வேணும் திசைமதுரை பிடிக்க வேணும் தம்பி
இவ்வோலை கண்ட நாழிக்கு தம்பி
எழும்பிநீ குன்னக்குடி வராமலே போனால்
நவாபை நானழைத்து வரும்போது எல்லோருமாக
நகைக்கவே யுன்சீமை முதற் கொள்ளை யடிப்பேன்
என்று சொல்லி காயிதத்தை யெழுதி அப்போ
இருபோர்க் கார்கையில் கொடுத்தனுப்பி வைத்தான்
மண்டலம் புகழ் நகரந் தாண்டி கல்வி
மருவு பகலுறவாடி செங்கமடை தாண்டி
ஆனந்த ராயனூர் தாண்டி கல்வி
அழகான வடக்கூர் யஜனூர் தாண்டி
சீரான ஆண்டங்குடி தாண்டி நம்மை
சிறந்தோங்குங் காலனூர் தன்னையுங் கடந்து
ராமநாதபுரக் கோட்டை தனிலே நல்ல

### தாமோதரம் பிள்ளை கடிதத்தை வாசித்தான்

நராதிபன் நல்ல தாமோதிரம் பிள்ளை யரண் மணையில்
சவுக்கையிலே தாமோதரம் பிள்ளை அப்போ

தயவாக திண்டுமேல் சாய்ந்திருக்கும் போது
காயிதத்தை கொண்டுவந்து அர்க்காரன் நல்ல
கனமிகு தாமோதரம் பிள்ளை முன்வைத்தான்
வாசித்துக் கண்ணாலே பார்த்து ஓலை
வக்கணை யெலா மறிந்து மனமுருகிக் கொண்டு
யோசித்து பின்னு மவனு மெழுந்து தளவாய்
ஒரு நொடியில் தாய் பாதத்தில் விழுந்து கும்பிட்டு
ஆத்தாளே தாயே மாதாவே இதற்கு
ஆலோசனை மறுவயணஞ் சொல்லென்று கேட்டான்
பூத்தமலர் திரிலோக மாதா நமது
புனிதகுண பிள்ளையை யேறிட்டுப் பார்த்து
நானென்ன சொல்வேண்டா தம்பி நமது
ராம நாதனிடஞ் சென்று கேளுபோ வென்றான்

## ராமநாதபுரம் பயணம்

போவென்று சொன்னவுடன் தளவாய் நல்ல
புகழ் பெற்ற ஆசார வாசலது தாண்டி
சீரான பிள்ளை மடந்தாண்டி நல்ல
சிறப்பாக மண்டபம் தோணிரைத்து வந்து
இரா முழுதும் நித்திரை செய்து நல்ல
நற்பாலன் விழுந்துபின் தோணிமே லேறி
சிங்க மெனும் தாமோதரம் பிள்ளை அந்த
க்ஷணத் திலேயே ராமேஸ்வரம் தனக்கு வந்து
ராம லிங்கத்தை பூசை செய்து ராம
நாயகர் பாதமதில் தெண்ட னிட்டு
வடக்கே நான் போக வேணுமென்று நானு
மனதாக விருக்கிறே னுன்னுடைய தொண்டன்
திடத்துடன் வடக்கே போக வென்றால் எனக்குத்
தெட்சணஞ் சொல்ல வேணும் சீரான கெவுளி
வடக்கே நான் போக வேணுமென்றால் எனக்கு
இடதுபுறந் தெட்சணஞ் சொல்ல வேணுமென்றான்
செயலாகும் வடக்கே போவென்று ராமர்
திருவுறுப்பில் தெட்சணங் கெவுளியது சொல்ல
இயல் ராம ருத்தரஞ் சொல்ல டில்லி
எம்சேதுபுரம் வரைக்கும் வெல்லுவே னென்று
மாப்பிள்ளை தேவனுக் கோலை முன்னே
வைத்தகால் பின்வாங்காம லவனுக்கு மோலை
கண்டையூர் மறவருக்கு மோலை சர்க்கரைக்
கோட்டை நாகல் நாட்டார்க்கு மோலை

கண்டெழுதி நான் வடக்கே போறேன் போய்
காரியம் நவாபிடத்திற் பேசிவரும் மட்டும்
என் சீமைதனிற் களவு போனால் நெலுப்பா
யெறித்திடுவ னுங்களை யென்றெழுதி யனுப்பி
பஞ்சவர்ண டால் விருது துலங்க நல்ல
பரிநகுல தாமோதரம் பிள்ளை வெளிவந்து

## தாமோதரம் பிள்ளை பயணம்

கொம்பு பேரிகை முழங்க சிங்கம்
கொடி மறக்கொடி கருடக்கொடி யூஞ்சலாட
தம்பூரு புல்லாங் குழல் முழங்க வீச
தவுண்டை முருமல்லாரி தாரிகை முழங்க
இருபது கோடு கதைப்பு நல்ல
ஏழுஒட்டை[61] மீதிலே பேரிகை முழங்க
அருகில் மயிரீட்டி யொரு கோடி நல்ல
அழகான தேரீட்டிக் காரரொரு கோடி
கத்தி கேடையக் காரர் சூழ குதிரைக்
காரர் படைபின் நூறுமுன்னே நடக்க
வெற்றிவளை தடிகாரர் புடைசூழ நல்ல
வெடிக்கார எறியம்புக் காரர் புடைசூழ
வெண்கவரி யாலவட்டம் வீச கட்டியர்
மேலெச்சரிக்கை பராக் கென்று கூறு
சிங்கமுகச் சிவிகையி லேறி பாதர்
செயசிங்கம் தாமோதரம் வடக்கு முகம் நோக்கி
உறவாடி செங்கல்மடை தாண்டி அப்போ
உயர்ந்த தோர் அனுமந்தக் குடியும் கடந்து
பெருநாட்டுக் கல்வியுந் தாண்டி அப்போ
பேரான தாமோதரன் கூடார மடித்தான்

## இரு தளவாய்கள் சந்தித்தல்

கூடார மடித்ததோர் சேதி நல்ல
கெம்பீரமாய் நல்ல தாண்டவனுங் கேட்டு
பெரிய வீட்டுக்காரன் வாறான் என்று
பேசிய தாண்டவ ராயனு மெழுந்து
இருவர் சமஸ்தானமு மொன்று நாமும்
எதிர்கொண்டு காண வேணுமென்று நினைத்து

61. ஒட்டை - ஒட்டகை. (இதன்மீது பேரிகை வைத்து அடிக்கிறார்கள்)

காரைக்குடி கோவிலுந் தாண்டி நல்ல
கழனிசேர் ராம்பதிக் கெடித்தலமுந் தாண்டி
கனமிகுங் கலிப்புலி மைதானம் தன்னில்
காரான ரிருவருஞ் சரிபேட்டி செய்து
தனதாகக் கூடாரந் தன்னில் திண்டு
தலைகாணி மேற் சார்ந்திரு பிள்ளை மாரும்
மன்னவன் தாமோதரம் பிள்ளை செம்பொன்
மருவு தாண்டவராய பிள்ளைதனைப் பார்த்து
அண்ணே வா தாண்டவ ராயா என்னை
யழைத்த தொரு காரியஞ் சொல்லென்று கேழ்க்க
தம்பி வா தாமோதரம் பிள்ளை இப்போ
தயிரியமாயொரு சேதி சொல்லுகிறேன் கேளுங
உனையழைத்த சேரிதனை நம்பி நானும்
உள்ளபடி சத்தியமாய் சொல்லுகிறேன் கேளு
நெல்லூர் சிராப்பள்ளி யிலிருந்து முன்னே
நேர்தெற்கு கான்சாயபு மதுரைக்கு வந்தானே
வருகையிலே கும்தானென்று வந்தான் அந்த
மதுரைக்கு வந்தபின் துரையா னானவனும்
வினையான திருமதுரை கானன் மெத்த
மிரட்டியே நம்மை யேய்த்து பகட்டுகிறான் தம்பி
அன்பாய் வடக்கே போய் பேசி அவனை
அடிக்கவேணுந் திசை மதுரை பிடிக்கவேணு மென்றான்
இப்படியா தாண்டவ ராய அண்ணே நாம்
இருபேரும் நவாபெதிரில் போகக்கூடாது
புலித்தேவ னிருக்கிறா னண்ணே[62] நாமும்
போனவுடன் கோளு சொல்லுவா னண்ணே
தோப்புறா பணத்துக்கு[63] நம்மை அண்ணே
தொந்தரை செய்தொற்றைக் காலில் நிற்க வைப்பா னண்ணே
ஆற்காடு போகுவது அண்ணே நமக்
கழகல்லவே தாண்டவ ராயா

---

62 இவன் பூலுத் தேவன், நெல்கட்டாஞ் செவலில் கான்சாகிபை எதிர்த்துப் போரிட்டவன். கோட்டை பிடிபட்ட பிறகு அவன் முடிவு என்னவாயிற்றென்று அறிய முடியவில்லை அக்காலத்து வெள்ளையதிகாரிகளின் குறிப்புகளில் அவனது போர்களைப் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. ஆனால் முடிவு பற்றித் தெரியவில்லை. ஆனால் இப்பாட்டில் அவன் நவாபிடம் இருந்தாகச் சொல்லப்படுகிறது.

63 தோப்புறா -ஜமீன்தார்கள் நவாபிற்குச் செலுத்த வேண்டிய நிலவரிப் பகுதி

ஏழரை வருஷப் பகுதி நா
மிருபேரு மொரு காசுங் கொடுக்கவே யில்லை
இப்படி தாமோதரன் சொல்ல அதற்
வேது சொல்வான் முல்லைமணித் தாண்டவ ராயன்
போபோ பேய் கொண்ட தம்பி உன்னுடைய
புத்தியு மிவ்வளவோ தாமோதரம் பிள்ளை
காலாலே முடிவனொரு முடிச்சு அதை
கையா லவிழ்த்தால் தான் நவாபு
துடியான நவாபுதுரை சாய்பை நமது
சொற்படியே கேழ்க்கவே செய்வேனா னென்றான்
ஏனிந்த வாலோசனை யண்ணே நவாபை
இழுத்து வந்தால் பொல்லாத மோசம் வருமண்ணே
வருபாதை தெரியாம லண்ணே அவனும்
வடக்கே யிருக்கிறான் மம்முதலி சாய்பு
மார்க்கமாய் வெகுபடைக ளிருக்க நமது
மடக்கு கத்தி முன்னூறு வகைக்குமே யிருக்க
பதினாயிரம் பட்டாள மிருக்க வகையில்
பதினைந்து பீரங்கி தயாரா யிருக்க
குதிரை யொரு நூறுமே யிருக்க ஈட்டி
கோடான கோடி யிருக்குதடா
இருபோ தனத்தையுங் காட்ட முப்பத்
தேழாயிரஞ் சேனங்கள் கூடுமடா அண்ணே
திருணவலி கீழ்க்காடு வரைக்கும் நாமும்
திசை கம்பம் நாட்டியே தோரணம் கட்டிடலாம்
கான்சாய்பு வந்தெதிர்த் தாக்கால் எனது
கைச்சிரத்தை பாரடா அண்ணே
இப்படி தாமோதரன் சொல்ல நமது
இயலான தாண்டவனு மேது சொல்வானாம்
ஏனீந்த வீம்புதான் தம்பி உனக்கு
எள்ளளவும் புத்தியில்லை தாமோதரம் பிள்ளை
அவன்-கருமருந்துக் காரனடா தம்பி அந்த
கானனுடன் சண்டை ஜெயிக்க முடியாது
இருபேர்க்கும் ஜனச்சேத மாகும் நாமும்
எதிர்நிற்கக் கூடாது துரைகான னோடே
நவாபை யழைத்து வந்துவிட்டு நாமும்
நலியாம லிருந்தழகு பார்க்கலா மென்றான்
பூபாலன் தாமோதரம் பிள்ளை அண்ணே
புத்திக்குச் சரிபோன படியென் றுரைத்தான்
க்ஷணத்திலே பொன் கொளியாண்டி யப்பன்
தன்னைத் தளகர்த்த னழைத்துவரச் சொல்லி

பாளையம் போய்வரு மட்டும் இதற்குப்
படிச்செல விருவர்க்கும் தளப்பெருக் கதிகம்
வேளைக் காயிரம் பொன் செலவாகும் அதற்கு
விவரமாய் நீயென்ன தருவை என்று கேட்டான்
சாடி தாருகிறேன் சொல்லும் பணமெல்லாம் கானு
சாபபை நீர்தூக்கு மேற்றிவிடு மென்றான்

## இரு தளவாய்கள் பயணம்

இருபேரும் சந்தோஷ மாகி வந்து
இறங்கினார் குன்னக்குடி வையாபுரிக் கரையில்
வையாபுரிக் கரை தனிலே யிறங்கி நாளை
வடக்கேதான் பயணமென் றுறுதியாய்ச் சொல்லி
இருபேரும் யானையின் மேலேறி முப்பத்
தேழாயிரஞ் சனமுமெண்ணிக் கொண்டு
மூன்றானை மேலே நகபத்து அப்போது
முழங்குதே ஓர் ஒட்டை மேலே நகரு
முப்பது சோடு கனதப்பு பாதர்
முடிமன்னன் நாற்பது பேரிகை முழங்க
திருக்கிழக் குடிதனிலே வந்து நல்ல
சிவலாயத்தை மூன்றுதரம் வலமாக வந்து
அறுபது பொன்னெடுத்துக் கொடுத்து சுவாமிக்கு
அர்ச்சனை செய்தபின் தெரிசனங்கள் செய்து
மறவருடன் சிவலூரு தாண்டி நல்ல
மன்னவர்க ளிருபேரும் மைதானந் தாண்டி
பாம்பூரு மைதான வெளியில் அப்போது
பாளையமு மிறங்கி யங்கிருந்த மாத்திரத்தில்
தொண்டயின் நமன பூபாலன் அந்த
துரைராசன் தளகர்த்தன் தனுவண்ணப் பிள்ளை
அண்ணே வா தனுவண்ணப் பிள்ளை வடக்கே
ஆற்காடு நவாபை தான் காணவே போறேன்
கோட்டையுட வளப்பந் தெரியாது உனக்கு
குபீரென்று சந்திப்பு வயணந் தெரியாது
மறுவயணத் திறமுஞ் சொல்லி எனக்கு
வரவிட வேணுமென் றெழுதியே யனுப்ப
தனுவண்ணப் பிள்ளை யதை வாங்கி அப்போ
தயிரியமாய் வக்கணையை வாசித்துப் பார்த்து
சிங்கமே தாண்டவ ராயா ஒரு
சேதி நான் சொல்லுகிறேன் கேளு தளகர்த்தா
சனத்தை விட்டு உங்க ளிருவரையும் அவன்
தப்பாகக் கோட்டைக்குள் வரச்சொல்வா னண்ணே

கோட்டைக்குள் போக வேண்டாம் வெளியே
கோணமலை மைதானமதில் துரையை வரச்சொல்லி
இருபேரும் பேட்டி செய்யுமென்று அப்போ
ஏழுபேர் தலையில் உலுப்பை கட்டி யனுப்ப
தனுவண்ண னுலுப்பைகளை யெல்லாம் அப்போ
தளகர்த்த ரிருபேருங் கண்ணாலே கண்டு
பூரணியை வாசித்துப் பார்த்து அப்போ
பொங்கமா யிருபேருஞ் சந்தோஷி யாகி
இதுமட்டுஞ் சொன்னதே போதும் என்று
இலுப்பையூர் மைதான வெளியுங் கடந்து
சாத்தனூர் வெளியுங் கழித்து நல்ல
தைரியமாய்ப் பொன்மலைக்கு மேற் பாரிசத்தில்

## திருச்சி வந்து சேர்தல்

கோட்டைக்குத் தென் பாரிசத்தில் அப்போ
குபீரென்று யிருபேரு மிறங்கின மாத்திரத்தில்
சிங்காரத் தோப்பில் நவாபு அப்போ
தீவாசுக் கம்பளியில் நித்திரை போம்போது
கோட்டை மேலிருந்த சிப்பாய் அப்போ
கோட்டை யிடிபோல் ராமன் ஏறிட்டுப் பார்த்து
அலங்கம் விட்டுக் கீழே குதித்து நல்ல
யானைகட்டி மண்டபத் தெருவுங் கடந்து
ராமசாமி வாசற்படி தாண்டி அப்போ
நவாபு தேவடியில் வந்து நின்று ராமன்
அவுல்தார் சுபோரு தாருமாரை நம்மிட
ஆண்டவன் நவாபுதுரை யெங்கே யென்று கேட்டான்

## கோட்டைக்குள் நுழைதல்

சிங்காரத் தோப்பில் நவாபு இப்போ
தீவாசுக் கம்பளியில் நித்திரைக ளென்றார்
சொல்லி வாய்மூடு முன்னே ராமன் நவாபு
சிங்காரத் தோப்பிற்குள் சீக்கிரமாய் வந்தான்
மம்முதலி நித்திரை வேளை அப்போ
மறத்தி மகன் புலித்தேவன் துடைகுத்தி யிருக்க✡
தட்டி யெழுப்பி புலிதேவா கோட்டை
தளங்கொண்டு இன்றைக்குக் களவு போகுதென்றான்

---

✡ குத்திட்டு உட்கார்ந்து

திடீரென்று மம்முதலி யெழுப்ப வெளியே
தென் பாரிசந் தன்னில் கனகதப்பு* முழங்க
கனகதப்பு முழங்கு தொரு பக்கம் அதனை
கண்வளர் நவாபுச்சாயபு யேதென்று கேட்க
ஆருடைய களமோவது சாமி அதனை
அறியவே கூடவில்லை நவாபு சாயபு
கார்மேகம் வந்து வளைந்தாற் போல் அங்கே
காக்கா தோப்பு வெளிகொள்ள விலை சாயபு
கேமலும் வந்திட்டான் முன்னே இதிலே
கெடிசிங்கம் முரசதிரப் பெரியதுரை வந்தான்
சின்னப் பிரட்டனும் வந்தான் அப்போ
சீராக மூவரும் சலாம் வாங்கிக் கொண்டார்
அப்போ மம்முதலி சாய்பு பாதர்
அஞ்சாத சின்னப் பிரட்டனைப் பார்த்து
வந்தவர் களின்னா ரென்றறிந்து நீயும்
வகையாக எந்தனுககு சொல்லென்று செ ல்லி
சீனி கண்ணாடி[64] வைத்து பிரட்டன்
திசைநோக்கி யேறிட்டுப் பார்த்தேது சொல்வான்

**பிரட்டன் துரை கூறல்**

ஆண்டவனே மம்முதலி சாயபே உமது
அடுமை நான் பிரட்டனினி சொல்லுகிறேன் கேளு
ஐவருட பாளைய மல்ல சாய்பு
அன்பான மூவரசர் பாளையமுமல்ல
தஞ்சாவூர் பாளையமு மல்ல நம்
சாதித் துரைமார்கள் பாளையமுமல்ல
கருங்காட்டு மறவர்களைப் போல எனக்குக்
காணு துகையீட்டி தோணுது சாய்பு
சண்டைக்கு வந்தவர்க ளல்ல இவர்கள்
சந்திப்புக்கு வந்ததாகக் காணுது என்றான்

**நவாவு தளவாய்களைக் காண வருதல்**

அப்போ-திடீரென்று நபாபுசாய் பெழுந்து வெளியே
தெற்கே போகவேணு மென்று நடக்கும் வேளையிலே

---

*கனகதப்பு- தங்கத் தப்பு - தப்பு - ஓர்புறம் தோல் கட்டிய கொட்டு

64. டெலிஸ் கோப்.

மகுது மல்லியான துரையும் வருக[65] அந்த
மன்னவன் கேமல் துரைபின்னால் வருக
துரை பெரிய பிரட்டனும் வருக பாதர்
துடியான கர்னல் துரைபின்னால் வருக
பாட்சாதி கோதண்டத் துடனே நெருங்கி
பத்து பாரா சிப்பாய்களும் வருக
தேவேந்திரன் கொலுப் போலே சாய்பு
தெற்குக் கோட்டை தலைவாசல் அலங்கத்தி லேறி
குபீரென்று ஏறிட்டுப் பார்த்து அப்போ
கோபமுடன் மம்முதலி கலக்கமே கொண்டு
பீரங்கி சாய்புகளை யழைத்து மூன்று
பீரங்கியைத் திருப்ப வுத்தரவு செய்து
மந்திசத் துருப்பிலேயும் நூறு இப்படி
வகையான கொண்ட துருப்பிலேயும் நூறு
பிரட்டன் துருப்பிலேயும் நூறு இப்படி
பிரியமாய் முந்நூறு குதிரைகளைக் கூட்டி
வந்தவர்க ளாரடா பூலி அவர்கள்
வளப்பந் தெரியுமோ பார்த்துச் சொல்லென்றான்
சேதுபதி சின்ன மறவன் சேது
சமஸ்தான மென்று சொல்ல கேட்டிருப்பே னென்றான்
ஆனாக்கால் அர்க்கார ராமு அவர்க

**யாரென்று அரிய ராமனை அனுப்புதல்**

யாரென்று போய் நீயும் கேட்டு வாவென்று
மம்முதலி தேவடி போய்ச் சேர்ந்தார் ராமன்

**ராமன் தளவாய்களை நோக்கி வருதல்**

வருகிறான் தெற்குக் கோட்டை தலைவாசல் தாண்டி
காமிய்யா பள்ளியுந் தாண்டி நல்ல
கனமான தஞ்சைநகர் காலங் கழித்து
ரெட்ட மலை வீதியும் தாண்டி அப்போ
நேரிட்ட காக்கா தோப்பையுங் கழித்து

**தளவாய்கள், ராமன் சந்திப்பு**

பொன் மலை மைதான வெளியில்
பிள்ளைமார் சமூகத்தில் வந்து நின்று கொண்டு

65. வருக- வர, இதற்குப் பின்னை சில அடிகளில் வருவதையும் இவ்வாறே படிக்க வேண்டும்.

வந்தவர்க ளாரென்று சொல்லி ஒரு
வசனம் நவாபுதுரை கேட்டுவரச் சொன்னார்
மறவருட பிரதானி நாங்கள் இங்கே
வந்தோம் நவாபிடம் சொல்லுபோ ராமு
சண்டைக்கு வந்தீரோ நீங்கள் இப்போ
சந்திப்புக்கு வந்தீரோ கேட்டுவரச் சொன்னார்
தகப்பனது வளவுக்கு ராமு நாங்கள்
சந்திப்புக்கு வந்தோமென்று சொல்லுபோ ராமு
திரும்பினார் அர்க்கார ராமு பாதர்

**ராமு-நவாபும் திரும்பிவந்த செய்தி சொல்லுதல்**

சிங்கம் நவாபு துரை தேவடியில் வந்து
ஆண்டவனே மம்முதலி துரையே நான்
அறிந்து வந்த சேதிகளைச் சொல்லுகிறேன் கேளு
மறவருட பிரதானி யவர்கள் சாய்பு
வந்திருக்கும் வேடிக்கை சொல்ல முடியாது
இவர்கள் இப்படி வந்தால் இவர்கள்
துரை வந்தா லெப்படி யிருக்குமோ வென்றான்
புறத்திலே யிருந்த புலித்தேவன் நல்ல
புலிக்குட்டி நவாபு துரையை யேறிட்டுப் பார்த்து

**புலித்தேவன் கோள் மூட்டுதல்**

வெகு மோடியாய் வந்தாருன்னு மெத்த
வீரியமாச் சொன்னானே யர்க்கார ராமன்
மூத்தவர்கள் சீமையிலே விளையும் சாய்பு
ரசக்கிணறு சேதுபதி சீமையிலே யுண்டு
முப்போகம் விளையு மவர் சீமை அப்போ
✡முசியாத வையைநதி சேர்ந்ததவன் தேசம்
பனங்காடு பெருத்ததவன் சீமை அதிலே
பத்து நிலையேறி கள்மெத்த வுண்டு
கல்லுப் படாததொரு சோறு அதிலே
முள்ளுப் படாத மீன் மறவருட சீமை
காசி முதலாகத் திரிந்தாலும் மறவர்
சீமையைப போலொரு தேசங் கிடையாது சாய்பு
இருபத்தினாலு லட்சம் பொன் சீமை
இவர்களே யாளுரா ரிருபிள்ளை மாரும்
இருபிள்ளை மார்களையும் பிடித்தால் தேச
மெல்லா மொருகுடைக்கீ ழாளலா மென்றான்
இருபிள்ளை மார்களையும் பிடிக்க தந்திரம்
புலித்தேவ மறுவயணஞ் சொல்லென்று கேட்டார்

---

✡முசி-சோம்பல் (இங்கு) - வற்றாது, (நாஞ்சில் நாட்டு பா.வ)

சனத்தோடே வந்தேனே யானால் முல்லைத்
தாண்டவ ராயனை வெல்லப் போகாது
முப்பது நோன்பென்று சொல்லி நவாபு
முடிமன்னர் வெளியில் வரக்கூடா திப்போ
கத்திக் கேடயம் முதலாய் வேண்டாம் உனது
கனமான அடப்பக்காரர் முதலாக வேண்டாம்
இரு பிள்ளை மாரையும் நவாபு இந்த
நாழிகையில் கோட்டைக்குள் வரச்சொல்லு மென்றான்

## ராமன் மீண்டும் தளவாய்களைக் காணப்போதல்

அப்படி புலித்தேவன் சொல்ல ராம
னிடத்திலே நவாபுசாய்பு சங்கதியைச் சொல்லி
தந்திர மாயிருபிள்ளை மாரை இந்த
நாழிகையில் கோட்டைக்குள் கூட்டிவா வென்றார்
வருகிறா னர்க்கார ராமன் அப்போ
மம்முதலி தேவடியைக் காணவுந் தாண்டி
தெற்கு கோட்டை வாசலுந்தாண்டி ராமன்
திடீரென்று பிள்ளைமார் சமுகத்தில் வந்து
அரேபிள்ளை முல்லை மணிமார்பா பாதர்
அனைவர் புகழ் நவாபு சொல்லுகிறாரண்ணே
முப்பது நோன் பெங்கள் துரைக்கு இப்போ
முடிமன்னன் கோட்டை விட்டு வெளியே வரக்கூடாது
மனிதர் களொருவருங் கூடாது நல்ல
வயணமுடனே கத்தி கேடயமும் வேண்டாம்
இரு பிள்ளை மாரையும் நவாபு இந்த
நாழிகையில் கோட்டைக்குள் கூட்டிவரச் சொன்னார்
நீங்கள் வந்தவேளை நல்லவேளை இப்போ
இருவரு மெழுந்திருந்து வாங்க ளென்று சொன்னான்
இப்படி யர்க்காரன் சொல்ல அதை
இந்திரன் தாமோதரன் பிள்ளையுங் கேட்டு
அண்ணே வா தாண்டவ ராயா இப்போ
அன்பாக ஒருவயணஞ் சொல்லுகிறேன் கேளு
குன்னக்குடி தனிலேயிருந்து திருக்
கோட்டையூர் வரைக்குஞ் சொன்னேனே புத்தி
கேளாமல் வந்ததையே நீயண்ணே இப்போ
கேடுவந்து நேர்ந்ததே யென்செய்வோ மென்றாள்
போ போ பேய் கொண்ட தம்பி உனது
புத்தியு மிம்மட்டோ தாமோதரம் பிள்ளை
வாடா நீ அர்க்கார ராமு ஒரு
வார்த்தை நான் வேளாளன் சொல்லுகிறேன் கேளு

பெண்டாட்டி பிள்ளையும் விட்டு நாங்கள்
பெரியயோர்கள் சமஸ்தான மாளிகையும் விட்டு
துரைமகன் குழந்தையும் விட்டு இந்தச்
சுபானு வருஷத்து பஞ்ச காலத்தில்
தகப்பனைக் காண வேணுமென்று இத்தனை
தளத்தோடே வந்தோமே அர்க்கார ராமு
இருவரையும் வரச்சொல்லிச் சொல்ல உங்கள்
ஈஸ்வரன் அல்லாவுக் கேற்குமா ராமா
இருவரையும் வரச்சொன்ன போதே எங்கள்
இருதயங் கலவரமா யிருக்குதடா ராமா
சந்திப்பு எங்களுக்கு வேண்டாம் உங்கள்
சாய்புகிட்ட மறுவயணஞ் சொல்லுபோ ராமு
போகாதே முல்லைமணி மார்பா எங்கள்
புலிக்குட்டி நவாபிடத்தில் சேதி சொல்லி வாரேன்
அதுவரைக்கும் பாளையத்தை நிறுத்து என்று

## ராமன் நவாபிடம் திரும்புதல்

அர்க்கார ராமனுடன் நடந்துவிட்டான் திரும்பி
திடீரென்று சமூகத்தில் வந்து பாதர்
சிங்க நவாபை சலாம் பண்ணிக் கொண்டு
ஆண்டவனே நவாபு சாய்பே உனது
அடிமை நானொரு வயணம் சொல்லுகிறேன் கேளு
அதிலொருவன் பட்டாணி வாறான் அவனும்
அல்லாவை வணங்குகிறான் சொல்லப் போகாது
அறிந்து இருப்பையடா பூலி அவ
னாரடா வயணஞ் சொல்லென்று கேட்டான்
அவன்தான் தாண்டவராயன் அவன்
வார்த்தைக்கு மறுவார்த்தை சொல்ல முடியாது
இப்படி பூலியுஞ் சொல்ல கேட்டு
ஏது சொல்வான் நவாபுக்கு அர்க்கார ராமன்
தகப்பனைக் காணவேணு மென்று இத்தனை
தளத்தோடே வந்தானாம் தாண்டவ ராயன்
இருவரையும் வரச்சொன்ன போதே அவனுக்கு
இஷ்டமே யில்லையாம் இவ்விடம் விட்டுப்போக
சந்திப்பு முறிந்த தென்று சொன்னான் அவன்
சனத்தோடே சிவகங்கை போரேன்று சொன்னான்
நவாபை கண்டுவரு மட்டும் உமது
நலமான பாளையத்தை நிறுத்தென்று வந்தேன்
இதற்குநீ மறுவயணம் சாயபு எனக்கு
இப்போது சொல்லென்று கேட்டானே ராமன்

## நவாபு ராமனுக்குக் கூறுவது

மறத்தி மகன் சொல் மொழியைக் கேட்டு பாதா
மம்முதலி சாயபு துரையேது சொல்வானாம்
கோட்டைக்கு தென் பாரிசத்தில் அங்கே
குளிர்ந்ததோர் காக்காத் தோப்பு வெளிதனிலே
மூன்று நல்ல கூடார மடித்து அங்கே
மூன்று நல்ல பீரங்கி தானுமே யேற்றி
பதினைந்து குறுக்கு வெளியிற் பரப்பி, அங்கே
பண்பான பூப்பந்த லலங்கரிக்கச் சொல்லி
நாற்பது பறங்கி நாற்காலி அதிலே
சச்சவுக்க மாகவே போட்டிடச் சொல்லி
ஏழுபாரா சுற்றிலும் வைத்து நல்ல
ஈஸ்வரன் நவாபு துரை புறப்பட்டார் வெளியில்
ஏறினார் வெள்ளை அவுதாவில் அப்போ
இருபுறமும் தம்பூரு முழங்குதொரு பக்கம்
நகபத்து[66] முழங்கு தொரு பக்கம் அங்கே
நகரா[67] முழங்குது சொல்லப் போகாது
முன்னூறு துரப்பு குதிரை நெருங்கி
முன்னனி யாகவே வருகுது பிறகாலே
கருஞ்சட்டைக் காரரொரு பக்கம் நல்ல
கறுப்பு வர்ண பறங்கிகளைச் சொல்ல முடியாது
செஞ்சட்டைக் காரனொரு பக்கம் சூழ
சிங்க நவாபுதுரை வெளியிலே வருகையிலே

## நவாபு வெளியே வருதல்

காலையில் செம்மான✡ மெழுந்தாற் போல் பாதர்
கனகமுடி நவாபுதுரை புறப்பட்டார் வெளியில்
துரை வந்து கொலுவிருந்தா ரென்று அப்போ
துடியாகத் தாண்டவனும் வெளியிலே வந்து
தம்பி வா தாமோதரம் பிள்ளை நல்ல
தனவானே அவுதாவி லேறடா வென்றான்
அவுதாவில் நானேற மாட்டேன் சும்மா
ஆனைமேல் நீயேறி வாவென்று சொன்னான்
பெரிய வீட்டுக் காரனல்லோ நீயும் தம்பி
உன்னை விட்டு யானைமே லேறமாட்டே னானும்
அதினாலே சந்தேக மொன்று மில்லை சும்மா
ஆனை மேலேறடா முல்லை மணிமார்பா

---

66. நகபத்து 67. நகரா -முரசுகள்

✡செம்மானம் - செவ்வானம்

ஆனை மேல் நானேறி யிருந்தால் இறங்க
அரை நாழி செல்லுமே முல்லை மணிமார்பா
ஏறுவது பஞ்ச கல்யாணி இன்றைக்
கெடுக்கிறது ரெண்டு கையில் ரெண்டு முகப்பட்டா
நவாபு கவுல்தனஞ்[68] செய்தாக்கால் நமது
நாய்க்கான் மறவனுக்குப் பேரிருக்க வேணும்
வெட்டுறே னொரு வெட்டு பாதர் என்று
மீசை மேலே கைபோட்டான் தாமோதரம் பிள்ளை
ஏது வந்து நேர்ந்தாலுந் தம்பி நமது
ஈசன் மகன் குமரன் கிருபையிருக்கு தென்று
இருபேரு மெண்ணிக்கை கொண்டு முப்பத்
தேழாயிரஞ் செனமும் கைகொண்டு
துப்பாக்கி யொருபுறம் வகுத்து அப்போ
தனங்கொண்ட வேல்கார றொரு பக்கம் வகுத்து
மின்னல் மழை மாரியது போலே அதிலே
வெள்ளி கட்டு துப்பாக்கி சொல்லப் போகாது
ஆயிரந் துப்பாக்கி மட்டுந் தனது
யானைதனைச் சுற்றிவரச் சொன்னான் காராளன் அப்போ
மூன்றானை மேலே நகபத்து
முட்டினானே மொட்டை மேலே நகரா,

## யானை மீதேறி தளவாய்கள் வருதல்

அனுமந் தடாலுந் துலங்க நல்ல
அழகா வலம்புரிச் சங்கு நின்றூத
சகசம் படாலுந் துலங்க அதிலே
சந்ததிர காந்தி பட்டாடை யிருபுறமும் வீச
மகரக்கொடி விருது நின்றிலங்க நல்ல
வளமான பூச்சக்கரக் குடை துலங்க
திருமலை நாய்க்கனுக்குத் தொண்டன் டப்பை
எழுபது பாளையக் காரருக்கு முண்டன்
ந்ராதி கொட்ட மடக்கி யென்று நல்ல
பயங்கரமா யிருபுறமுங் கட்டியங் கூற
தேவேந்திரன் வந்தாற் போலே பாதர்
திடீரென்று இருபேரும் புறப்பட்டார் வெளியில்

## பூலித்தேவன் நவாபிடம் கூறுவது

புறத்திலே யிருந்த புலித்தேவன் அப்போ
புலிக்குட்டி நவாபு சாய்பேது சொல்வானாம்

---

68. வஞ்சகம்

ஆண்டவனே மம்முதலி சாய்பே உனது
அடிமை நானொரு வசனஞ் சொல்லுகிறேன் கேளு
எத்தனை யோக மிருந்தாலும் இவர்கள்
பட்டோலை யெழுதுகிற வெள்ளாள ஜாதி
ஆண்டவர் நீர்கீ ழிருக்கையிலே அவர்கள்
ஆனைமேல் வருகிறது சம்மதியோ வுமக்கு
யானை விட்டுக் கீழே யிறங்கி அவரைக்
கால் நடையாய் கூட்டிவரச் சொல்லுங்க ளென்று

**ராமுவை தளவாய்களிடம் அனுப்புதல்**

அர்க்கார ராமனை யழைத்து துரை
ஆலோசித்து மம்முதலி யேது சொல்வானாம்
பிள்ளைமா ரிருவரையும் ராமா இப்போ
கால்நடையாய் வரச்சொல்லி கூட்டிவா வென்றான்
ஒரு பட்டாளந் தன்னைக் கூட்டி ராமன்
உயரானை தும்பிக்கையை மால்பிடித்து
அரே பிள்ளை முல்லை மணிமார்பா நமது
அரசன் நவாபுதுரை சொல்லுகிறா ரப்பா
ஆண்டவன் கீழிருக்கை யிலே நீயும்
ஆனைமேல் வருகிறது சம்மதியோ உனக்கு
ஆனை விட்டுக் கீழே யிறங்கென்று அப்போ
ஆயிரந் துப்பாக்கி குந்தாவி னாலே
ஒரு பளித்தா யானையின் மேல் மோத பாதர்
உத்தமன் தாமோதரன் ஏறிட்டுப் பார்த்து
ஏறினான் பஞ்ச கல்யாணி அப்போ
இடது கையில் வாங்கினான் ரண்டுமுகப் பட்டா
வலது கையி லைந்து மணிக்குறடா பாதர்
வாங்கியே கடிவாளந் துடைதனி லணைத்து
ஆனை தனை மூன்றுதரஞ் சுற்றி பாதர்
அதட்டி நவாபுதுரை பாளையத்தைப் பார்த்து
யானை விட்டு விலகு விலகென்று நல்ல
அழகான யானைதனை யடிக்கிறாப் போலே
குதிரைதனை யடிக்கிறாப் போலே வைத்து
கொளுத்தினான் நவாபு சனத்தின்மேற் பூசை[69]
ஒருத்த ரோடொருத்தர் தட்டுக்கெட்டு அவர்கள்
ஒருமிக்கப் பின்வாங்கி நெளிக்கும் வேளையிலே
அவுதா மேலிருந்த தளமந்திரி நல்ல
அதிவீரன் முல்லை மணித்தாண்டவ ராயன்

---

69. தளவாய் தாமோதரன் குதிரை மேலேறி யானையை அடிப்பது போல நவாபு படையை அடித்தான்.

மிஞ்சாதே பொறுபொறு தம்பி இது
வெள்ளைக்காரர் பெருத்தவிடம் தாமோதரம் பிள்ளை
ரண்டு ரேக்கலாவைத் திருப்பி விட்டால் இது
பனங்காட்டு பாத்தியல்லா முடனும் காடுமுனையும்
மிஞ்சாதே பொறுபொறு தம்பி அது
வேளாளன் அர்க்கார ராமனை யழைத்து
முப்பது பொன் துப்பட்டா எடுத்து அப்போ
முதலான ராமனுடல் மேலே போர்த்தி
அன்பு துவாரகனையு மள்ளி அந்த
நாழிகையில் பாக்கு வெற்றிலை செலவுக்குக் கொடுத்து

### ராமுவிடம் தளவாய் கூறல்

கஞ்சாவ பின்தின்பான் தம்பி அவனுக்கு
கனமான சாகிபு பொல்லாத துடுக்கன்
அவன் செய்த குற்றத்தை தம்பி நீயும்
அறிக்கை யிடாதே ராமா நவாபு துரைக்கு
நானுமொரு சேதி சொல்லுகிறேன் உங்கள்
நவாபு துரைக்கு நீசொல்லுபோ ராமு
அதிபதி செகபதியே சிங்கன் இங்கே
நரபதி சேதுபதி நாலுபதி யல்லோ
நாலுபதி தன்னிலே நாமும் இப்போ
நாங்ளொரு பதிவந்து சேதுபதி சேர்ந்தோம்
கர்த்தாக் களுக்கு முன்னே பட்டம் வந்ழ்
கனமான தென்னிலங்கா புரிதனிலே
சீதையை சிறைதனிலே வைக்க ராமா
சென்றுமே ராவணனைச் செயித்து
விபீஷணனுக்குப் பட்டங் கட்டி ராமர்
விரைவாக ராமேஸ்வரம் சேர்ந்து
ராமலிங்கத்தைப் பூசை செய்த அன்றைக்கு
நலங்கொண்ட கோவிலுந் திருமதில் கட்டி
சிவபத்தி மறவாத பேர்கள் வேணு
.மென்று சொல்ல ஸ்ரீராமர்தான் வைத்த பட்டம்[69(அ)]
துளவு மணிராமர் பட்டம் பெற்ற நாங்கள்
துரைநவா பவர்களிடம் பேட்டிக்கு சொன்னாரே யானால்
சந்திப்பு முறிந்ததடா போபோ உங்கள்
சாயபுகிட்ட மறுவயணஞ் சொல்லடா ராமா

---

69(அ)ராமநாதபுரம் பட்டம் பற்றிய புராணக்கதை. தங்களை ராமருடைய வரலாற்றோடு தொடர்புபடுத்திக் கொண்டுள்ளார்கள்.

திருப்பி விடடா யானைமுகந் தெற்கே என்று
சிங்கா சனாதிபதி கூட்டினான் பயணம்
போகாதே முல்லை மணிமார்பா ஒரு
உத்தரவு நவாபிடங் கேட்டோடி வாரேன்
அவ்வளவில் பாளையத்தை நிறுத்து என்று
அர்க்கார ராமனும் நடந்திட்டான் திரும்பி

## ராமன் நவாபிடம் கூறல்

மம்முதலி சமுகத்தில் வந்து ராமன்
வகையான சொல்லை சொல்ல லுற்றா னப்போ
ஆண்டவனே மம்முதலி துரையே உனது
அடிமை யொரு வசனம்நான் சொல்லுகிறேன் கேளு
அதிலொருத்தன் பட்டாணிபோல் வாறான் அவன்
அல்லாவை நினைக்கிறான் சொல்ல முடியாது
அவர் முகத்திலே கோபங்கள் துரையே அவன்
முன்னின்று மனிதரால் பார்க்க முடியாது
அவனுட கைத்திக்கு துரையே அவன்
ஆயிரங் கத்தியு மெதிரில்லை சாய்பு

## பூலுவிடம் நவாபு கேட்பது

அறிந்து மிருப்பையடா பூலு அவ
னாரடா மறுவயணஞ் சொல்லடா வென்றான்
அவன் தானையா பெரியவீட்டுக் காரன் அவன்
சேது தளகர்த்தன் தாமோதரம் பிள்ளை
வெட்டுங்கை தாமோதரம் பிள்ளை சேதி
கட்டுங்கை முல்லைமணி தாண்டவ ராயன்
இருபேரு மொன்றாகச் சேர்ந்தால் தேவ
இந்திரனும் வந்தால் வெல்லக் கூடாதென்றான்
அதுக்குள்ளே ராமனு மெழுந்து பாதர்
ஆண்டவன் நவாபுக்கு யேது சொல்வானாம்

## ராமு பேச்சு

ஆனை மேல் வந்த தளமந்திரி காப்பு
அவன் சொன்ன சங்கதியை சொல்லுகிறேன் கேளு
அதிபதி செகபதி சிங்கம் வர
நரபதி சேதுபதி நாலுபதி யுண்டு
நாலுபதி தனிலே துரையே அவர்கள்
தானு மொருத்தன் வந்து சேதுபதி சேர்ந்தார்

கர்த்தாக் களுக்கு[70] முன்னே பட்டம் பெற்று
கனமான தென்னிலங்கா புரிதனிலே
சீதையை ராவணன் எடுத்துக் கொண்டு போய்
தென்னிலங்கா புரியில் சிறைவைத்த போது
ராம ரெழுபது வெள்ளஞ் சேனை கூட்டி
ராவண சம்மார முடித்த மாத்திரத்தில்
சீதைதனை தேரின் மேலேற்றிக் கொண்டு
தென்னிலங்கை விபீஷணர்க்குப் பட்டமுங் கட்டி
ராமேசுவரம் வந்து சேர்ந்து பின்பு
ராம லிங்கத்தை யவர் பூசையே செய்து
சிவபத்தி மறவாதோ ரிவர்கள் என்று
ஸ்ரீராமர் கொடுத்தாரா மறவறென்று பட்டம்
நவாபு பேட்டிக்கு வந்தால் நாங்கள்
கால்நடையாக நடந்துவர மாட்டோம்
சந்திப்பு முறிந்துதடா போ போ உங்கள்
சாயபுகிட்ட மறுவயணஞ் சொல்லென்று சொல்லி
திரும்பினான் யானை முகம் தெற்கே நானுஞ்
சிங்கம் நவாபை யிப்போ கேட்டோடி வாரேன்
அவ்வளவில் பாளையத்தை நிறுத்து என்று
அடிமை நான் மறுவயணஞ் சொல்லிவிட்டு வாரேன்
இதற்கு மறுவயண மென்னய்யா சாய்பு அதை
இப்போதே சொல்லுமென்று கேட்டானே ராமன்

**நவாபு தளவாய்களை யானைமேல் வரச்சொல்லுதல்**

ஆனை மேல் வரச்சொல்லு ராமா என்று
அனைவர் புகழ் நவாபுதுரை சொல்லிவிட்டா னப்போ
திரும்பினான் அர்க்கா ராமன்
திடீரென்று பிள்ளைமார் சமுகத்தில் வந்து
இருவரையும் அவுதாவி லேற்றி எங்கள்
ஈஸ்வரன் நவாபு துரை வரச்சொன்னா ரையா
ஆனையின் மேல் வாங்க ளென்று அந்த
அர்க்கா ராமனும் உறுதியாய்ச் சொல்ல

**தளவாய்கள் நவாபு முன் செல்லுதல்**

இருபேரும் யானைமே லேறி முப்பத்
தேழாயிரஞ் சனத்தை முன்னே நடத்தி

---

70. மதுரை நாயக்கர்களுக்கு முன்னரே ராமநாதபுரம் அரசர்கள் பட்டம் பெற்றிருந்ததாகச் சொல்லுகிறார்கள்.

தேவேந்திரன் கொலுப் போலே அப்போ
திடீரென்று பிள்ளைமார் நடந்திட்டா ரப்போ
இரு பிள்ளை மார்களும் வந்து அங்கே
ஏழு பிள்ளைமா ரிருக்கு மிடத்தில் நின்று
ஆனையிட்டுக் கீழே யிறங்கி தளவர்
அன்பாக வொன்பது தட்டெடுத்து வரச்சொல்லி
ஒரு தட்டி லொரு சோடு முத்து அப்போ
ஒரு தட்டி லொரு சோடு பச்சையும் வைத்து
ஒரு தட்டில் வைடூரியக் கல்லு அப்போ
ஒரு தட்டில் மரகதக் கல்லொன்று சேகரம் செய்து
ஒரு தட்டி லாயிரம் பொன் முடிப்பு அப்போ
ஒரு மிக்கத் தட்டாலஞ் சேரம் செய்து
தம்பி வா தாமோதரம் பிள்ளை நாலு
தட்டை யெடுத்து வாவென்று சொன்ன மாத்திரத்தில்
கங்கை குலம் வம்மிசம் அண்ணே நாமும்
காரா ளல்லவோ முல்லை மணிமார்பா
துலுக்கனுட சந்திக்குப் போறோம் நமக்கு
சந்திப்பு எப்படி தெரியுமடா அண்ணே
எத்தனை உயர்ந்த குலமாய் நாம்
இருந்தாலும் குமார வர்க்கப் பிள்ளை யென்று பேரு
திருச்சிராப் பள்ளிக்கு எவன் துரைதான் இந்த
தேசத்துப் பாளையக் காரரெல்லாம் பிள்ளை
தகப்பனுட வளைவுக்குப் பிள்ளை வந்தால்
தனங் கொண்டு போய் வைந்து சலாம் பண்ணவேணும்
காரியங் கொள்ளுமட்டுந் தம்பி அவன்
காலையுங்கூட பிடிக்கவேணு மென்றான்
எனக்கொன்றுந் தெரியாது அண்ணே உனக்
கெப்படி யிருக்குதோ அப்படிச் செய் என்றான்
அப்படியே நல்லது தம்பி நீயும்
அசையாமல் தட்டுகளை எடுத்து வாவென்று
இருபேரு மொன்பது தட்டெடுத்து ஏழு
பாராவையுங் கடந்த கூடாரம் வந்து

## நவாபிடம் பேசுதல்

நவாபு சமுகத்தில் நின்று நல்ல
நலங்கொண்ட தங்கமலர் பொன்மலர் எடுத்து
தீபாசுகம் பலித்தில் வைத்து திருஷ்டிச்
சிலையைக் கையிலே சீக்கிர மெடுத்து
நவாபை மூன்றுதரஞ் சுற்றி சாயபு
நம்முடை சலாம் வருகுதென்று சலாம் செய்து

இருபேரும் விழுந்து சலாம் செய்து அப்போ
எழுந்திருந்து நவாபு சாயபு கையால் எடுத்து
தூக்கியே மார்போ டணைத்து அப்போ
துரிதமா யிருபேர்க்கு மிருக்கவிடங் கொடுத்தார்
இருந்தபின் தாண்டவ ராயன் பாதர்
இயல்பான பறங்கிகளை கண்ணாலே கண்டு
படபட வென்று மிரண்டு மயலாகி அப்போ
பதறியே திரேக மெல்லாம் வேர்வை யொழுக
லேஞ்சு கொண்டு வேர்வைதனைத் துடைத்து அப்போ
ரெண்டுபேரு விசிரி கொண்டு விசிறின மாத்திரத்தில்
ஆடுதே படபட வென்று மேலும் அதை
அருகில் நின்ற நவாபுதுரை ஏறிட்டுப் பார்த்து
பாளையங் கண்டவுட னண்ணே எனக்குப்
பயமாகி யுடம்பெல்லாம் நடுங்குதென்ன வென்றார்
களை யெறிந்து தாண்டவ ராயன் அப்போ
கண் திறந்து பார்த்தவனு மேது சொல்வானாம்
தாய் வயிற்றிலே யிருந்த நானுஞ் சாய்பு
தரையில் விழுந்த நாள்முதலாய் எனக்கு
வந்த தொரு சன்னி நோக்காடு என்னை
மனிதர்கள் கற்றிலும் நெருங்கியே நின்றால்
நடுக்க மெடுப்ப தெல்லாம் போச்சு இப்போ
நலமா யுன்னிடங் கண்டாபோலே யுனக்கு
இருந்த தொரு பயமெல்லாஞ் சாய்பு உனக்கு
எவ்வளவு மில்லாம லோடியே போச்சு
என்று தாண்டவ ராயன் சொல்ல நல்ல
இதமாக நவாபவரு மேது சொல்வாராம்
சந்தனங் கொண்டுவரச் சொல்லி அப்போ
தயிரியமாய் பிள்ளைமார்க்குப் பூசவேண்டு மென்று
ஒருபிடி வராகன் கலந்து வெள்ளி
கும்பாவில் சந்தனமுஞ் சவ்வாதுங் குழைத்து
பூசுங்க ளிருபிள்ளை மாரும் என்று
புண்ணிய நவாபுதுரை முன்னெடுத்து வைத்தார்.
சந்தனம் பூசினோமே யானால் அந்தத்
தட்சணங் கட்டை வரட்டி யெடுக்க வேணுஞ் சாய்பு
சன்னி நோக்காட்டுக்காக துரையே
சந்தனம் பூசிகிற தில்லை யென்று சொன்னான்
தாமோதரம் பிள்ளையு மப்போது முல்லை
தாண்டவ ராயன் முகம் ஏறிட்டுப் பார்த்து
நவாபுக்கு காது கேட்காவிடில் இவர்கள்
நலமாக யிருவரும் வாய் சைகையாக

சந்தனம் பூசினா லண்ணே நமது
சாதிக்கு ஏற்காதே முல்லை மணிமார்பா
போபோ பேய் கொண்ட தம்பி உமது
புத்தியு மிவ்வளவோ தாமோதரம் பிள்ளை
சந்தனம் பூசினமே யானால் வெய்யில்
சலுவையிலே தண்ணீர் தாகமது காணும்
தண்ணீரு வேண்டு மென்று கேட்டால் அப்போ
தண்ணீ ரரண்மனையி லிருந்து கொண்டுவந்து
பிள்ளை யென்று வந்தீரே நீங்கள் என்னுடைய
தண்ணீர் குடியு மென்று முன்னாலே வைப்பான்
குடிக்க வேணும் தள்ள முடியாத தம்பி
குபீரென்று சந்தனம் பட்டவிடமெல்லாம்
வெந்து விரிந்திடுந் தம்பி என்று
வேடிக்கையாய் கத்துவாரி கூண்டை திறந்து
வெளியிலே விட்டிட்டாப் போல் இந்த
வேடிக்கை நபாபு பார்த்தேது சொல்வாராம்
காட்டிலே திரியுமந்த குருவி இதை
என்னதுக்குக் கொண்டு வந்தாய் தாண்டவ ராயா
சொல்லுவாய் மூடுவதற் குள்ளே இரண்டு
கத்து வாரியை யெடுத்து சண்டைக்கு விட்டான்
ஒருசாம பரியந்தம் மட்டும் அது
ஒன்றுக்கொன் றெதிர்த்து நின்று சண்டை செய்கிறதை
மம்முதலி கண்ணாலே கண்டு பாதர்
மன்னவன் மனது மிகச் சந்தோஷ மாகி
காட்டிலே திரியுமந்தக் குருவி இதுவுன்
கையிலே இவ்வளவு பழக்கமா யிருந்தால்
மனிதருன் கையி லகப்பட்டால் அவரை
என்ன பாடு படுத்துவையோ தெரியாது நீயும்
என்று சொல்லி வாய் மூடுமுன்னே அப்போ
எண்ணிக்கையாய் மூன்று பணியார மெடுத்து
பணியாரம் தரைதனி லெறிந்தான் அது
பாங்காக நெளியுறதைத் துரைமக்கள் பார்த்து
ஐந்தாறு வெள்ளைக்காரத் துரைகள் அப்போ
ஐந்தாறு பணியாரங் கையி லெடுத்து
பிட்டதனைப் பார்த்தார்கள் துரைகள் சிட்டுக்
குருவியத னுள்ளிருந்து பறக்கிறதைக் கண்டு
சபாசு முல்லை மணிமார்பா இப்போ
தளமந்திரி மதிமந்திரி யுனக்கேதான் செல்லும்
இருபதிங்காத வழி தூரம் நீயும்
என்னைத் தேடி வந்தவகை சொல்லென்று கேட்டார்.

### தளவாய் கூறல்

ஆண்டவனே மம்முதலி சாய்பே உனது
அடிமை தானொரு வயணங் சொல்லுகிறேன் கேளும்
உம்முடைய அரண்மனையி லிருந்து முன்னே
உப்புத் தண்ணீர் தூக்கித் திரிந்தானே பயல்கானு
மதுரைக்குத் துரையாக வந்து நல்ல
வைகைவள நாட்டையு மொருமிக்கக் கூட்டி
உமக்கு நான் கொடுக்கிற பணத்தை கானு
தனக்கங்கே தரச்சொல்லி சண்டைக்கு வாரான்
தகப்பனுக்கு வஞ்சனையாய் கானு இப்படி
தகாத காரியஞ் செய்வதை யுனக்குச் சொல்ல வந்தேன்

### நவாபு கூறல்

இப்படி தாண்டவனுஞ் சொல்ல அதற்
கேது சொல்வார் மம்முதலி சாய்பு துரையவரும்
அரே பிள்ளை தாண்டவ ராயா பாதர்
அன்பாக வொரு வயணஞ் சொல்லுகிறேன் கேளு
ஏழரை வருஷங்க ளாச்சு நல்ல
இயல்பான கானனையும் மதுரைக் கனுப்பி
ஒரு காசுங் கொடுத்தனுப்ப வில்லை எனக்கு
ஒரு பணமும் வடக்கு வந்து சேரவு மில்லை
வழிப்பாதை தெரியாமல் தாண்டா நானும்
தெற்கு முகம் போகாம லிக்கிறே னிங்கே
தெற்கு முகம் வழிகாட்டி விட்டால் நானுஞ்
சீக்கிரமாய் பாளையத்தைக் கூட்டி வந்திடுவேன்
நான் வாரேன் திசை மதுரை கோட்டை எனக்கு
நயமான பாக்கு வெற்றிலை செலவுக்கு உனது
சிவகங்கை பேட்டைதனை யெனக்கு விட்டு
தரவேணு மென்று சொல்லி கேட்டார் நவாபு

### தளவாய் கூறல்

சிவகங்கை பேட்டையுட வளப்பம் ராசா
சிங்கம் நபாபே நான் 'சொல்லுகிறேன் கேளு
ஐந்தாறு தேவடியாள் வீடு அதிலே
ஆரேழு பாப்பார வீடுமங்கே யுண்டு
கூவவங்கே கோழி கிடையாது[71] வந்து
குலைக்கவும் நாயதிலே கிடையாது சொன்னேன்

---

71 சிவகங்கைப் பேட்டையில் வருமானம் எதுவுமில்லை என்று தளவாய் சொல்லுகிறான்.

அதை விட்டுக் கொடுத்தென்ன வென்று நல்ல
வன்பரகக் காராளன் சொன்ன மாத்திரத்தில்
அது போனால் போகட்டும் பிள்ளை உனது
ஆருரு நாட்டை விட்டுத் தருவையோ வென்றான்
ஆருர் நாட்டின் வளப்பம் பாதர்
ஆண்டவனே நவாபே நான் சொல்லுகிறேன் கேளும்
காட்டிலே லக்கிரி பிடுங்கி கள்ளர்
ஓட்டிலே யவித்ததனைத் தின்பார்கள் சாய்பு
இந்தச் சேதி கேட்டாரே யானால் நம்மை
இருவரையும் வழிமறித்துக் குத்துவார்கள் கள்ளர்
அதுதான் போகட்டுந் தம்பி உனது
ராமநாதபுரக் கோட்டை தருவையோ என்றான்[72]
ராமநாதபுரக் கோட்டை வளப்பம் நமது
ராஜ பரமேஸ்வரா சொல்லுகிறேன் கேளும்
ஒருபுறம் மண்ணாலே சுவரு அதிலே
யொருபுறம் வனாந்திரக் காடதிலே யுண்டு
பதினைந்து ஊழிக்காரர் வீடு எங்கள்
சேதுபதி குழந்தை வந்திருக்கிறது அங்கே
ராச னிருக்கிற கிராமம் அதனை
நான் விட்டுத் தருவே னென்று சொல்வேனோ துரையே
இப்படிப் பிள்ளைமகன் சொல்ல நல்ல
இயல்பாக நவாபுதுரை யேது சொல்லலுற்றார்

## நவாபு கூறல்

தகப்பனுட வளவிற்குப் பிள்ளை வந்தால்
சாப்பிட வேணுமென்று சொன்னார் நவாபு
சாப்பிட மாட்டே னென்று நானும் சாய்பே
தாண்டவ ராயனுஞ் சொல்வேனோ துரையே
முப்பது நாளைக்கு நோன் பெனக்கு நல்ல
முடிமன்னா தாண்டவராயாவென்று சொல்லி
கல்லிழைத்த பச்சைக் கலாத்து அப்போ
கனமான பிள்ளைமார் கைதனிலே கொடுத்து
நாலுவகை வெகுமதியுஞ் செய்து அப்போ
நவாபுதுரை யோசித்துச் சொல்ல லுற்றா ரப்போ
பிரட்டனொடு பனிரண்டு பட்டாளம் உனக்கும்
பின்கட்டு பாறாவு மனுப்புகிறே னிப்போ

72. தெற்கு வந்து கானனை அடக்குவதற்கு சிவகங்கையிலுள்ள ஏதாவது ஒரு கோட்டையை விட்டுக் கொடுக்க நவாபு கேட்கிறான். தளவாய் மறைமுகமாக மறுக்கிறான்.

### பிள்ளைமார் சிவகங்கைக்குப் பயணம்

முப்பது நோன்பு கழித்தவுடனே நானும்
வருகிறேன் திசை மதுரைக் கோட்டைதனை நோக்கி
இதுசேதி மும்முதலி சொல்லி அப்போ
எழுந்திருந்து கோட்டை போய்ச் சேர்ந்தார் நவாபு
இருபிள்ளை மார்களுஞ் சேர்ந்து மென்ன
இதமாக விடுதி வந்து சேர்ந்தார்க ளப்போ

### கான்சாகிபு சிவகங்கை மீது படையெடுத்தல்

மதுரை வளர்கான் சாயபு நீலன் நல்ல
வரிசைபெறத் வேடியில் வந்து நின்றுகொண்டு
மைத்துனன் வடக்கே போனானே அவன்
சீமைதனி லொருசாரி நடத்தவேணு மென்று
மறக்குதிரை மேற் சீனி வைத்து மதுரைக்
கான்சாய்பு கோட்டை விட்டு வெளியில் வருகையிலே
ரேக்கலா ரெண்டை யிழுத்து அதற்கு
நேரிட்ட மருந்து குண்டு வண்டியின் மேலேத்தி
மூவாயிரஞ் சனங் கானு அப்போ
முன்னூறு ஆருக்குச் சீறாக் குதிரையும் நடத்தி
மறக்குதிரை மேலேறிக் கொண்டு மதுரைக்
கான்சாய்பு சிலையுமான் புளியங் குளந் தாண்டி
மலையுமான் புளியங் குடியுந்தாண்டி அப்போ
திருவாரூர் வீதியுமை தானந் தாண்டி
திருப்புவனக் கோட்டையிலே வந்து கானு
திடீரென்று கூடார மடித்தாலோ துரையும்

### திருப்புவனம் முற்றுகை

மூணு நல்லா மோர்சா வளத்தி அதிலே
முடிமன்னன் பீரங்கி மேலேத்தி வைத்து[73]
மூடியே யொருபளித்தா தீர்த்து அப்போது
மூணுநாள் வரைக்குமே யிறைத்தானே குண்டு
திருப்புவனங் கோட்டை தன்னிலேதான் ஒரு
தேங்கா யளவுமே யிடித்து விழவில்லை
சுப்ரமண்ய தேவரதி விருந்து நல்ல
துடியான வெங்கலப் பீரங்கியை யிழுத்து

---

73. பீரங்கிமேடு - வரிசையாக மேடுகளை உண்டாக்கி அவற்றின் மீது பீரங்கியை ஏற்றினான்.

முக்குறுணி மருந்து குண்டு போட்டு அதற்கு
முதலான கிடாவெட்டி பொங்கலு மிட்டு
குபீலென்று ஒரு பளித்தா தீர்த்தான் அப்போ
கொட்ட மிடுகான்சாய்பு கூடாரத் தெறித்து
கூடாரக் கயிறு மறுந்து அப்போ
குபீலென்று ஏழு குதிரைக் காலுந் தெறிந்து
ஏழெட்டுப் பேர்கள் தலையுடைய அப்போ
இதை கான்சாய்பு கண்ணாலே பார்த்து
நம்மைப் போலே யொரு மனிதன் இதிலே
இருக்கிறான் திருப்புவனம் வாங்க முடியாது
திருப்புவனம் வாங்க முடியாது என்று
சிவகங்கை மேல் சாரி நடந்திட்டான் கானன்
ராத்திரிக் கிராத்தியே நடந்து அப்போ
நலமான சிவகங்கைப் பேட்டை தனைவளைத்து
அரண்மனை அக்கினியாய்க் கொளுத்தி மறவர்
ஆறுகால் சவுக்கையைத் தீயா யெரித்து
மேல்வீட்டுக் கம்பளியை யெரித்து நானு
மீசையின் மேற்கை போட்டு மேற்குமுகந் திருப்பி
பட்டண மெல்லாங் கொள்ளை யடித்து அப்போ
படைமன்னன் கிழக்குமுகந் திருப்பியே கானன்

## வேறூர்கள் கொள்ளை

தஞ்சாவூர் வெள்ளிக் குரிச்சி மறவர்
சமஸ்தான பாத்திவ னூரையுங் கொள்ளை யடித்து
கானூரணிக் கணவாயை வெட்டி அப்போ
கான்சாய்பு நடந்திட்டான் திசை மதுரைக் கோட்டை
சந்திரகுல முத்து வடுகையர் அப்போ
சாமியும் காளையார் கோயி லிருந்து
தாண்டவ ராயப் பிள்ளைக்குத் அவரும்
தயவாக காயுத மெழுத லுற்றாரப்போ

## முத்துவடுகன் தாண்டவராயனுக்கு எழுதுதல்

அண்ணே வா தாண்டவ ராயா மதுரை
ஆளுகிற கான்சாய்பு சிவகங்கை வந்து
அரண்மனையை யக்கினியாய்க் கொளுத்தி நமது
ஆறுகால் சவுக்கையைத் தீயா யெரித்து
சீமை யெல்லாங் கொள்ளை யடித்துத் கானு
திசைமதுரைக் கோட்டையைப் போய்ச் சேர்ந்திட்டா னண்ணே

திரும்பலையோ கோட்டை விட்டுத் தெற்கே என்று
சீக்கிரமாய் நிருபத்தை யனுப்பிவிட்டா ரப்போ
வருகுதே வடுகையார் நிருபம் நல்ல
வளமிகுந்தன திருக்கோட்டிக் குட்டியுங் கடந்து
பொன்மலை மைதான வெளிதனிலே அப்போ
பிள்ளை மார்பகத்தில் வந்துதே நிருபம்
சாமியுட நிருபம் வந்ததென்று நல்ல
தளகர்த்த நிருபத்தை வாசித்துப் பார்த்து
மறுவயண விண்ணப்ப மோலை எழுதி
வரவிட்டான் முல்லைமணித் தாண்டவ ராயன்

## தளவாயின் பதில் கடிதம்

ஆண்டவனே முத்து வடுகையா உனது
அடிமைநான் மறுவயணஞ் சொல்லுகிறேன் கேளு
நவாபை நான்பேட்டி செய்தாச்சே சுவாமி
நாலுவகை வெகுமதியும் வாங்கின னடியேன்
ஐந்தாறு நாளையிலே சுவாமி அடியேன்
அதுவே தொழிலா யிருந்து பாளையத்தைக் கூட்டி
பிரட்டனையுங் கையோடே கூட்டி சுவாமி
பொன்மதுரை மேல் வந்திறங்குவே னடியேன்
எந்தெந்த சீமை யழிந்தாலும் நமது
திருப்புவனக் கோட்டை பத்திரம் சுவாமி
ஆரா ரிறந்து போனாலும் சுவாமி
ஆண்டவர் மாத்திரம் கோயிலிருக்க
கோயில் விட்டு வெளியில்வர வேண்டாம் என்று
குறிப்பாக ஓலைதனை யெழுதியே யனுப்பி
தாமோதரம் பிள்ளையை யழைக்க முல்லைத்
தாண்டவ ராயபிள்ளை யேது சொல்வானாம்

## தளவாய்கள் கோட்டைக்குள் போக எண்ணுதல்

வந்துவெகு நாளாச்சு தம்பி நம்மை
மம்முதலி நவாபுசாய பழைக்கவே யில்லை.
கோட்டைக்குள் போகவேணுந் தம்பி என்று
கோபமாய் சேனைகட்குப் பயணமெனச் சொன்னான்
தாமோதரம் பிள்ளையு மப்போது தனது
தளங்களைக் கண்ணாலே ஏறிட்டுப் பார்த்து
அவ்வாறு விரற்கடை மருந்து துப்பாக்கிக்கு
அசையாத ரட்டைக் குண்டு பாஞ்சுதென்று சொல்லி

பதினே ழாயிரஞ் சனத்தை நிறுத்தி அபபோ
பாங்காய் சனங்களுக்குறுதிகளைச் சொல்லி
பிள்ளைமார் குதிரைமே லேறி நல்ல
பிரியமாய்த் தெற்குக் கோட்டைத் தலைவாசல் வந்து
திடீரென்று கோட்டை வாயிற் குள்ளே அப்போ
சீக்கிரமா யிருபேரும் வரும் வேளை தனிலே
அர்க்கார ராம னோடிவந்து அப்போ
அரே பிள்ளை முத்துமணித் தாண்டவ ராயா
மம்முதலி யுத்தரவு யில்லை நீங்கள்
வரக்கூடா தென்று சொல்லித் தடுத்திட்டான் ராமன்
அப்போ தாண்டவ ராயபிள்ளை பார்த்து
அன்பாக ராமனுக் கேது சொல்வானாம்
தகப்பனது வளவிற்குப் பிள்ளை பார்த்து
தடை சொல்லித் தள்ளுவது நீதியோ ராமா
இப்படி தாண்டவனுஞ் சொல்ல ராமன்
இருமென்று நவாபு தேவடிக்கு வந்து
ஆண்டவனே மும்முதலி சாய்பே உனது
அடிமை நானொரு வயணஞ் சொல்லுகிறேன் கேளு
இருபிள்ளை மார்களும் வந்தால் அடியேன்
எதிர்கொண்டு குதிரைக்காரன் கையிலே பிடித்து
சாயபுடைய வுத்தரவு மில்லை நீங்கள்
சனத்தோடே வரக்கூடா தென்று நான் சொன்னேன்
அதை மிஞ்சிக் குதிரைமே லேறி அவர்கள்
அக்கிரமாய் வருகிறா ரென்று சொன்னான் ராமன்
அப்போது மம்முதலி சாய்பு பாதர்
ஆலோசித் தேது சொல்ல லுற்றார்
நாலு தலை வாசலையுஞ் சுற்றி அப்போ
நலமான பாராவும் வைக்கவே சொல்லி
பட்டாளஞ் சுற்றிலும் வருக[74] அப்போ
பாட்சா நவாபுதுரை புறப்பட்டார் வெளியில்
இருபேருங் குதிரை விட்டிறங்கி அவர்கள்
எழுதரங் குனிந்துப் போகலாம் வாங்கிக் கொண்டு
இருபேருங் கைகட்டி நின்று நல்ல
இஷ்டமாய் துதித்தவர்கள் நிற்கும் வேளையிலே

**நவாபு கூறல்**

அரே பிள்ளை முல்லை மணிமார்பா நானும்
அன்பாக ஒருவசனஞ் சொல்லுகிறேன் கேளு

---

74 வர

வரச்சொல்லி யனுப்பு முன்னே நீங்கள்
வந்தவகை யேதென்று கேட்டார் நபாபு

**தளவாய் கூறல்**

தகப்னுட வளவிற்குப் பிள்ளை வந்தால்
தடையென்ன வென்று சொல்லி வந்திட்டே னடியேன்
கோபுரங் கண்டு நான் துரையே அடியேன்
பாவங்கள் நீங்காமல் போவேனோ சாயபு
தகப்பனது அரண்மனையைப் பார்க்க நானும்
தடையொன்றில் லாமலே வந்திட்டே னடியேன்

**நவாபு கூறல்**

இப்படி தாண்டவனும் சொல்ல அதற்
கேது சொல்வார் மம்முதலி சாய்பு துரையப்போ
நீ யிப்படி வந்தாலே இந்த
நிமிஷத்தில் நாலு தெருவீதியும் பார்த்து
சீக்கிரம் வெளியே போவென்று பாதர்
சிங்கம் நவாபுதுரை சொல்லிவிட்டா னப்போ
இந்த மட்டுஞ் சொன்னதே போதும் என்று
எழும்பினான தளத்தோடே பட்டணத்தை விட்டு
வடக்குத் தெரு வீதியிலே வந்து தாயு
மானமலை தாண்டி வடபாரிசந் திரும்பி
சிந்தாமணித் தலைவாசல் வந்து இருவரும்
திடீரென்று காவேரி ஸ்நானமது பண்ணி
தளங்களைத் திருப்பியே வந்து அப்போ
தயவாகத் தான் கோட்டைக் குள்ளே வந்து சேர்ந்து
தாயு மானவர் கோயிலுக்கு வந்து தளவா்
தயிரியமாய்த் தரிசனஞ் செய்ய வேணுமென்று
ஐம்பது பொன் குருக்கள் கையிலே கொடுத்து அந்த
நாழிகையி லபிஷேகஞ் செய்ய வேணுமென்று
ஐம்பது பொன் பதக்க மெடுத்து அந்த
நாழிகையில் சுவாமியின் கழுத்திலே தரித்து
மாலை சந்தனங் கையிலே வாங்கி அப்போ
மங்கம்மா அரண்மனையைக் கண்ணாலே பார்த்து
நவாபு தேவடியும் பார்த்து பாதர்
திடீரென்று கடைவீதி வருகையிலே

## பண்டங்கள் கொள்ளை

கடலை யவல் பொரி யுண்டை களுமே அங்கே
கடைகளில் தட்டுத் தட்டாக யிருக்கிறதைக் கண்டு
கருங் கச்சை சனங்களைப் பார்த்து அப்போ
கடைக் கண்ணை காட்டியே கைகாட்டி விட்டான்
நெல்லரிசி வாருவார் சிலபேர் அங்கே
நேரிட்ட கடலை பொரி வாருவார் சிலபேர்
இப்படியே கொள்ளை யவரடிக்க அப்போ
எங்கேயும் பொல்லாத கூச்ச லுண்டாச்சு

## நவாபு இதைக்கேட்டு வருதல்

பட்டணங் கொல்லென்று போச்சு அப்போ
பாட்சா நவாபு துரையிது சேதி கேட்டு
நாலு தலை வாசலை யடுத்து அப்போ
லாயத்துக் குதிரைக்குச் சீனிவைக்கச் சொல்லி
புறப்பட்டார் மம்முதலி சாயபு சுற்றி
போர்வீரர் வெள்ளைக் காரர் முன்னே நடக்க
வருகிறார் நவாபு துரையும் அப்போ
வலது கையி லைந்துபிடி கயிற்றை யெடுத்து
தாமோதரம் பிள்ளையு மப்போது முல்லை
தாண்டவ ராயனை ஏறிட்டுப் பார்த்து
என்னதான் சொன்னாலு மண்ணே நீயும்
எவ்வளவு மென்பேச்சைக் கேட்கிறதே யில்லை
மம்முதலி வருகிற கோவத்தை இப்போ
மன்னவனே தாமோதரம் பிள்ளை
போபோ பேய் கொண்ட தம்பி உனக்கு
புத்தி யிவ்வளவோ தாமோதரம் பிள்ளை
நவாபை யொரு வார்த்தையினால் கட்டி அவன்
கையிலே வெகுமதியும் வாங்காமற் போனால்
என்பேரு காராள னல்ல நான்
எடுத்ததும் தளகர்த்த மோதிரமு மல்ல
சொல்லி யரை நாழிகைக் குள்ளாக நல்ல
துரைமகன் நவாபவரும் வந்துவிட்டா ரருகில்
இருபேருங் குதிரைவிட் டிறங்கி அப்போ
ஈஸ்பர நவாபுமுன் கைகட்டி நின்றார்
அரே பிள்ளை முல்லை மணிமார்பா உனக்கு
ஆரடா இந்தத் துடுக்குனக்குத் தந்தார்
ராசாவு மிங்கே நானிருக்க எனது
ராச்சியத்தை நீகொள்ளை யிடலாமோ

ஆண்டவனே மம்முதலி சாய்பே உமது
அடிமை நானொரு வயணஞ் சொல்லுகிறேன் கேளு
கரும்பு என் சீமையி லில்லை சாயபு
கடலை பொரி யவலுண்டை கிடையாத தேசம்
நெல்லரிசி எங்கள் சீமையிலே இப்போ
எள்ளளவுங் கிடையாது மம்முதலி துரையே
அடிமை நான் சாப்பிடுஞ் சோறு இந்த
வரகரிசி சோறென்று சொன்ன மாத்திரத்தில்
ரண்டுபடி வரகரிசி யவிழ்த்து அப்போ
நேரிட்ட மம்முதலி முன்னாலே வைத்து
அரிசியைப் பார்க்க மனிதர் இவர்கள்
ஆசையா லோடி யெடுத்திட்டார் துரையே
இதற்கு நீர் கோபித்தே ரானால் அடிமைக்
கெங்கே குடியிருப்பு மம்முதலி துரையே
அப்போது மம்முதலி பார்த்து ஒரு
ஆலோசனை செய்து சொல்ல லுற்றார் துரையும்
செந்நெல் பெருத்ததுன் தேசம் என்று
முன்னமே புலித்தேவன் சொன்னானே எனக்கு
இப்படிச் சொல்லுகிறாய் நீயும் இதிலே
ஆர் பேச்சை நிசமென்று நம்புவே னானும்
நெல்லரிசி கிடையாதசேதி நீயும்
வந்ததே என்னிடத்தில் சொன்னையே யானால்
உன்சனத்துக் கெல்லாம் படி கொடுப்பேன் முன்னே
உத்தமனே சொல்லாமற் போனாய் என்னிடத்தில்
ரண்டுபை பணமதை யெடுத்து அப்போ
நேசமுடன் தளமந்திரி கையில் கொடுத்து
இனசனத்துக் கெல்லாம் நெல்லரிசி தந்து
உத்தமனே படி கொடுமென் றுத்தரவு சொன்னார்
அப்போ தாண்டவ ராயன் சொல்வான் சுவாமி
ஆண்டவனே நவாபே நான் சொல்லுகிறேன் கேளும்
வந்துவெகு நாளாச்சு துரையே எனக்கு
மன்னவனே மறுவசனஞ் சொல்லுமென்று கேட்க

## நவாபு படையெடுக்க உத்தரவிடல்

அப்போது மம்முதலி துரையும் பாதர்
அசையாத பிரட்டன் முகமேறிட்டுப் பார்த்து
வழிபாதை தெரியாம லிருந்தோம் நமக்கு
வழிகாட்ட வந்தார்க ளிருபிள்ளை மாரும்
பன்னிரண்டு பட்டாளத்தைக் கூட்டி பிரட்டர்
பாளையங் கூட்டி வடதிசை மதுரைக்கு நோக்கி

நல்ல தென்று வெள்ளைக் காரத் துரைகள் அப்போ
நலமான தம்பூ ரடித்துப் புறப்பட்டு
காக்கா தோப்பு வெளி தனிலே வந்து
காசா கம்பளி சனத்தைக் கூடார மிறக்கி
கொடிகளையுங் கொண்டு வந்து போட்டு பிரிட்டன்
கூடார மடித்திட்டான் சொல்லப் போகாது
கானன் பீரங்கி பனிரெண்டு தனது
கறுப்புச் சட்டைக் காரரது பட்டாள மெட்டு
மூவாயிரந் துருப்புகுதிரை சேர்ந்து
முந்நூறு வண்டியில் மருந்து குண்டு மேற்றி
ரேக்லா முப்பதையுங் கூட்டி அப்போ
நேரிட்ட சாராய பீப்பாய்களு மேற்றி
மதுரைக்குப் பயணமென்று பிரட்டன் நல்ல
உறுதியாய்க் கூடார மிறங்கின மாத்திரத்தில்
தாமோதரம் பிள்ளையு மப்போது முல்லை
தாண்டவ ராயன் முகம் நேரிட்டுப் பார்த்து
தொண்டி வழு நடந்தோமே யானால் போக
வெகுதூரம் வெகுநாள் செல்லுமே யண்ணே
துவரங் குரிச்சி வழி சென்றால் மலைப்
பாதையது கல்லுமேல் வண்டி யேறாது
எந்த வழி போகலா மண்ணே என்று
இதமாகத் தாமோதரன் கேழ்க்கு மளவிலே
தாண்டவ ராய தளமந்திரி நல்ல
சாதுரியமாய் வார்த்தை சொல்லுகிறா னப்போ
அப்படியே ஏன் போகவேணுந் தம்பி நமது
நடுச்சீமை வழியாகப் போவோ மென்று சொன்னான்
நடுச்சீமை வழியாகப் போனால் நமது
தேசத்தைக் கண்ணாலே பார்ப்பானே பிரட்டன்
திரும்பி வரும்போது பெரிய பிரட்டன் நமது
தேசத்தில் தோரணங்கள் கட்டுவானே யென்றான்
அப்படியே வழிக்கூட்டிப் போவேன் அந்த
அமைப்பு எனக்குத் தெரியுமோ தாமோதரம் பிள்ளை
ஒருவரை யாகிலுங் காண்பிப் பேனோ அவனுக்
குகந்த வழி தெரியவோ கூட்டுவேன் பாதர்
பகலெல்லாஞ் செடிக்குள்ளே யடிப்பேன் ராவில்
பாளையத்தைக் கூட்டுவே னென்று சொன்னா னப்போது

**ராணுவம் பயணமாதல்**

சொல்லி யரை நாழிகைக்குள் பிரட்டன்
துடியாகப் பாளையத்தை யெழுப்பினான் பாதர்

ரிச்சடு கிரண்டன்✡ தளமும் அப்போ
அன்பான பாளையத்தை யெழுப்பினான் பிரட்டன்
பொய் நிலைமை தான் வெளி தாண்டி தெற்கே
புறப்பட்டு ஆமூர் மைதான வெளி தாண்டி
குடுமி மாமலைக் கிழக்காகக் அப்போ்
குபீரென்று நெறிஞ்சிக்குடிப் பாதையும் கழித்து
கிழக்கு முகம் பாளையத்தை நடத்தி அப்போ
கீர்த்தி பெறு திருமயத்துக் கோட்டைக்குத் தெற்கே
குருவி கொண்டான் பட்டி வந்து சேர்ந்து பிரட்டன்
கூடார மடித்தங்கே பாளையத்தை நிறுத்தி
இறங்கி யரை நாழிகையிற் குள்ளே தளவா
இருபேரும் பிரட்டனிட கூடாரம் வந்து
சிங்கமே துரை பெரிய பிரட்டா ஒரு
சேதி நான் காராளன் சொல்லுகிறேன் கேளும்
மதுரை யின்னும் பத்து நாழி வழிதான் நாமும்
வருஞ்சேதி கேட்டு வந்திடுவானே கானன்
பகலில் வழி நடக்கவே கூடாது நாமும்
ராத்திரிக்கு ராத்திரியே நடக்கவேணு மென்றான்
நல்ல தென்று துரை பெரிய பிரட்டன் சனத்தை
ராத்திரிக்கு ராத்திரியே பயணமென்று சொன்னான்
பகலெல்லாங் கூடாரத்தி லிருந்து சாயுங்
காலம் பயணமென்று சாப்பிட்டுப் போட்டு
தம்பூரு வாத்திய முழங்க சாயபு
தாம் பாளையம் பயணமென்று சொன்னாள்
குருவி கொண்டான் பட்டியுங் கழித்து தளவர்
கோட்டையின் மதுக்கூர்க் காட்டுப் பாதை வழிகூட்டி
ராத்திரிக்கு ராத்திரியே நடந்து அந்த
ராத்திரியில் பல்லென்று கிழக்கு வெளுக்கையிலே
பரகணிக் காட்டில் கொண்டுவந்து குதிரை
பாளையத்துடன் தளத்தை யிறக்கினான் காட்டில்
பகலெல்லா மங்கே கழித்து தளவர்
ராத்திரிக்கு ராத்திரி யெழுப்பினார் தளத்தை
பரகணி பாகுங் கடந்து
பனங்களம் தாலுக்கா தாண்டி
மங்ககுடிக் காட்டையுஞ் சீக்கிரமாய்த் தாண்டி நல்ல
மகாராஜன் பாளையத்தை ராத்திரியே கூட்டி
இராமேஸ் வரப் பாதை யாக தளத்தை
இரவெல்லாந் தானடத்தி நெம்பலம் மைதானத்தில்

---

✡ Richard Grant

அப்போ துரை பெரிய பிரட்டன் தனது
அசையாத பாளையத்தைக் கொண்டுவந் திறங்கி
தள கர்த்தனை வரவழைத்து திருப்பூ
வன மெவ்வளவு தூரமென்று கேட்டான் பிரட்டன்
ஆண்டவனே துரை பெரிய பிரிட்டா நாம்
ஐந்துமணி வேளைக்குப் போகலாமென்று
பிரட்டன் பனிரெண்டு பட்டாளத்தை பாம்பைப்
பட்டியிலே கொண்டுவந்து நலமாக இறக்கி
பகலெல்லா மங்கிருந்து போட்டு அப்போ
படை மன்னன் பாளையத்தை ராத்திரியி லெழுப்பி
திருப்புவனங் கோட்டை வந்து சேர்ந்து அங்கே
சீராக பிரட்டனிட பட்டாளத்தை யிறக்கி
முள்ளிய நெம்மலெனு மூரில் இரு
பிள்ளை மார்கள் பாளையத்தைக் கொண்டுவந்து சேர்த்தார்

## கான்சாகிபு நவாபு சேனை வருவதையறிதல்

மதுரை வளர் கான்சாய்பு நீலன் பாதர்
வயணமா யிதுசேதி காதாலே கேட்டு
தகப்ப னாகிய பெரிய பிரட்டன் குதிரை
தளத்தோடு திருப்புவன மிறங்கினானென் றறிந்து
போதி கான்சாயவையு மழைத்து சீனி
வெள்ளைக் காரன் மெய்குந்தன் அநுமந்தனை யழைத்து
தாதப்பன் ராசப்பனை[74] யழைத்து கானு
சாயபு துரை குதிரைக் கொல்லான் சீனிவைக்கச் சொல்லி

## மூன்னூறு குதிரைப்படையுடன் திருப்புவனம் செல்லுதல்

முந்நூறு துருப்பு குதிரை யுடனே அப்போ
முடிமன்னன் கான்சாயபு புறப்பட்டான் வெளியில்
சிலையுமான் புளியங் குளந்தாண்டி நல்ல
திருவாத்தூர் மைதான வீதியுங் கடந்து
திருவளங் காட்டுக் குள்ளே வந்து தனது
சேனைகளை காட்டுக்கு ளொளித்து வைத்துவிட்டு
தலை யெட்டிப் பார்த்தீரே யாமானால் உங்களைத்
தப்பாமல் பட்டாவால் வீசி விடுவேன் கானு
அவனுக் கவன் பதனமென்று சொல்லி கானு
ஆணிச்சிக்கன வாயி லொளித்து வைத்திருந்தான்
பல்லென்று✡ கிழக்கு வெளுக்கையிலே பிரட்டன்
பட்டாளத்தை நிறுத்தி தாம்பூ ரடித்து

74. போதிகான், மெய்குந்தன், அனுமந்தன், தாதப்பன், ராசப்பன், இவர்கள் ராணுவ அதிகாரிகள், வரலாற்று மனிதர்கள் அல்லர்.

✡பலபலவென்று (பா.வ)

சனத்தை யெல்லா மலை போலே நிறுத்தி அப்போ
தம்பூரு முழங்கியே கோட்டைக்குள் நுழைந்தான்
கோட்டைக்குள் பிரட்டன் போகு முன்னே கானன்
குதிரை விட்டுப் பாளையத்தில் கலக்க வேணுமென்று
நடத்தின னூருக்குச் சீராய் குதிரை அந்த
நாழிகையில் திருப்பூவன குளக்கரை தாண்டி
வயல் வழியாய் குதிரைதனை விட்டு கானு
வருகிறான் திருப்பூவன ஆற்றுவழி நோக்கி

**கான்சாகிபு பிரட்டனது சேனையைத் தாக்குதல்**

முதல் பாராக் காரனையும் வெட்டி ஒரு
நொடிக்குள் பட்டாளத் துள்ளே விழுந்து
கத்தி முனை ரத்தங்க ளொழுக அப்போ
கான்சாகிபு வருகிறதைக் கண்டானே பிரட்டன்
வந்திட்டான் கான்சாயபு வென்று பிரட்டன்
வரிசையாய்ப் பட்டாளத்தை மேற்குமுகந் திருப்பி
டொப்பி கழட்டியே கீழே யடித்து பிரட்டன்
சுருக்காக முன்கைதனை கடித்த மர்த்திரத்தில்
மூன் றணியாகப் பிரிந்து பட்டாளத்தை
முன்னேற்றிப் பிரம்பாலே மூட்டினான் பிரட்டன்
மண்வாரி யிறைத்திட்டாப் போலே குண்டு
வருகிறதைத் திசை மதுரை கான்சாயபு பார்த்து

**திருப்புவனப் போர்**

ஒளித்து வைத்தான் பட்டாளத்தை பிரட்டன்
சேனை மேல் பாய்ந்திட்டான் கானன்
இரண்டு கையி லிரண்டு முதல்பட்டா பிடித்து
நேரான பிரட்டனிட பாளையத்தில் விழுந்து
வீசினான் துரை மதுரை கானன் அப்போ
விழுகிற சிப்பாய் தலைகள் சொல்லப் போகாது
கையற்று விழுகிறது சிலது அங்கே
காலற்று விழுந்த பேர் சொல்லப் போகாது
தலையற்று விழுகிறது சிலது அப்போ
தாறுமாறாய் மூன்று துண்டாய் விழுகிறது சிலது
வெள்ளரிக்காய் வீசினாற் போல பாதர்
வீசினான் சிப்பாய்களை பொல்லாத கானன்
துப்பாக்கி திரும்புவதற் குள்ளே பாய்ந்து
துடியாக வெட்டினான் திசை மதுரை கானன்

சோல்ஜர் தலைக ளொரு கோடி அங்கே
துள்ளி விழுகிறதைச் சொல்லி முடியாது
தீன் தீனென்று[75] சொல்லி பாலர்
திரும்பியே நாலு மூலை வீசினான் பட்டாவை
பாணி பாணி[76]யென்று சொல்லி அப்போ
பதைத்து விழுகிறதே சிப்பாய்மார் தலைகள்
தண்ணீர் தண்ணீ ரென்று சொல்லித் அங்கே
தவித்து முறையோரைச் சொல்ல முடியாது
ஓடுதே முழங்கால் ரத்தம் அதிலே
உருளுதே சிப்பாய் தலைகள் பனங்காய் போலே
மலை மேலே துருப்பு குதிரை அப்போ
மாளுதே பொல்லாத மைதான வெளியில்

**சிப்பாய்கள் போனவழி தெரியவே இல்லை**

குதிக்குதே சோல்ஜர் தலைகள் அங்கே
கூவுதே நாய் நரிகள் பிணங்களைத் தின்ன
சோல்ஜர்கள் போன வழி காணோமில்லை பின்பு
கத்தி கட்டி போன வழி காணோம்
கர்னல் போன வழி தெரியவேயில்லை அப்போ
அவல்தார் போன வழி காணோம்
அஜிட்டன்[77] போன வழி தெரியவேயில்லை
சுபேதார் போன வழி காணோம்
சோல்ஜர்கள் பட்டாளம் போன வழி காணோம் :பாதர்
அப்படி கான் சாயபு நீலன்
அறுத்த தலைக ளென்றால் சொல்ல முடியாது கானு
கத்தி யெல்லாம் ரத்தமாய்ப் போச்சு
கனத்த தலை குட்டை யெல்லாம் ரத்தமாய் போச்சு
ரத்த கவுல் சுற்றியே வீச அப்போ
நராதிபன் கான்சாயபு மூர்ச்சையாய் நின்றான்
தளகர்த்தன் தானப்ப நாய்க்கன் பாதர்
தயிரியமாய்ப் பதினைந்து குதிரையுடன் நின்றான்
கான் சாயபைக் கண்ணாலே கண்டு அப்போ
கட்டழகன் தானப்பன் சலாம் வாங்கிக்கொண்டு
ஆண்டவனே கான்சாய்பு துரையே உனது
அடுமை நானொரு வசனஞ் சொல்லுகிறேன் கேளு

---

75. தீன், தீன், -கான்சாகிபுவின் போர்க் கோஷம், முஸ்லீம்கள் இவ்வாறு கூவிகிகொண்டே போர் செய்வார்கள்.

76. பாணி - தண்ணீர். 77. அஜிட்டன் - **(Adjutant)** அட்ஜுடன்ட் என்ற ராணுவப்பதவி பிரிட்டிஷ் சேனையில்) ராணுவ அலுவலகர்கள்: அவுல்தார் சுபேதார், சோல்ஜர் - இங்கிலீஷ் படைவீரர்.

தும்பூரு கோட்டைகுச் சென்று நமது
சேதுகான் பாபுக்கு பத்திரஞ் சொல்லி
மதுரை போய்ச் சேரவேணு மையா என்று
மடப்புரத்துக் கால்வாயில் கத்தியைக் கழுவி
கத்தியை யுரைதனிலே போட்டு அப்போ
கான்சாய்பு தும்பூரு கோட்டைக்கு வந்து

**கான்சாகிபு பின் வாங்குதல்**

சேதுகான் தன்னை வரவழைத்து கானன்
சேதி யவனுக் கேது சொல்வானாம்
பன் னிரண்டு சிப்பாயும் நல்ல
பண்பான வெள்ளைக்காரத் துரைகள்[78] ரிஜிமிட்டும்
மூவாயிரம் துருப்பு குதிரை தம்பி
முப்பது வெள்ளைக்கார பிரட்டன் துரையோடே
கர்னல் பீரங்கி பனிரண்டு அதிலே
கட்டான் துரைப்பட்டாளம் மூவாயிரம் சனங்கள்
ரேக்லா முப்பது கூட இப்போ
நெருநெருத்துப் போகுதடா திருப்புவனக் கோட்டை
நாளை பனிரெண்டு மணி வேளைக் கெல்லாம்
நமது தும்பூரு கோட்டை மேலே வருவாரு முண்டோ
தும்பூரு கோட்டை தளமென்று கானு
துரை மகனும் திசை மதுரைக் கோட்டை போய்ச் சேர்ந்தான்

**பிரிட்டன் யோசனை**

அப்போது துரை பெரிய பிரட்டன் சனங்கள்
அனைவோரும் வந்தங்கே யொன்றாகச் சேர்ந்தார்
கண்டிட்டான் துரை பெரிய பிரட்டன் அப்போ
கண் சிவந்து பட்டாளத்தை எண்ணிக்கை பார்த்தான்
மூன்று பட்டாளம் வரைக்கும் இப்போ
முதல் சண்டை கானுகையால் விழுந்து போச்சுதென்று

**மதுரைக்கு வழிகாட்டக் கேட்டல்**

சனத்தை யெல்லா மெண்ணிக் கொண்டு அப்போ
தளகர்த்த ரிருவரையு மழைத்துவரச் சொல்லி
அரே பிள்ளை முல்லை மணிமார்பா இப்போது
அழைத்து வந்து பட்டாளத்தைக் காவு கொடுத்தாயே

---

78 ரிஜிமிட் - ரெஜிமென்டு - Regiment ஆங்கிலப் படைப்பகுதி. (அணி)

மதுரைக்கு வழி காட்டும் பிள்ளே கானு
மன்னனுடைய சௌந்தரியத்தை நான்பார்க்க வேணும்
அப்போது தாண்டவ ராயன் பாதர்
ஆளக் கொண்டான் கரைதனுக் கனுப்ப
பண்டிக் கிடா பிடித்துவரச் சொல்லி அப்போ
பாட்சாதி பிரட்டனுக்குத் ✡தீனி கொடுத்தான்
தீனி தின்று கை கழுவிக் கொண்டு பிரட்டன்
சிப்பாய் மார்களுக்குத் தைரியங்கள் சொல்லி
நடத்தினான் பத்துகளந் தன்னை அந்த
நாழிகையில் திருவாதவூர் வந்திட்டான் பிரட்டன்
நாலு புறம் பாராவும் வைத்து தளத்தை
நடுவிட்டு மத்தாப்பு நாலு புறம் போட்டு
ராத்திரியில் சாக்கிரதை யாயிருந்தார் கானு
ராசாதி பதியிந்த சேதிகளைக் கேட்டு
முந்நூறு குதிரை சீனி வைத்து கானு
மோதுகான் சாய்பையுங் கையோடே யழைத்து
சீனிச் சிராவையு மழைத்து தனது
திசை மதுரை கோட்டை விட்டு வடக்கு முகம் நோக்கி
தும்பூரு கோட்டைக்குள் நுழைந்து கானு
துரை பேசாம லொளிந்திருந்தா னப்போது
அப்போ துரை பெரிய பிரட்டன் பாதர்
அழகான பாளையத்தைச் சுற்றுவரும் போது
பல்லென்று பொழுது விடிந்தது அப்போ
பட்டாளம் பயணமென்று உதிதரவு மாச்சு
திருவாதவூர் மைதானம் தாண்டி தளங்கள்

## காட்டில் போர்

தும்பூரு காட்டில் நுழைந்து வருகையிலே
கனமான திசை மதுரைக் கோட்டை கானு
கலந்திட்டான் குதிரையின் பிரட்டன் பாளையத்தில்
வந்திட்டான் சாய்பென்று சொல்லி பிரட்டன்
வலது கையிலந்த மொழிப் பிரம்புதனைத் தாங்கி
பட்டாளம் பளீலென்று சொன்னான் அப்போ
படபடென்று பீரங்கி கொளுத்திவிட்டார் துரைகள்
மண்மாரி பொழியுது துப்பாக்கி ரண்டு
வண்டி மேல் ரேக்லா திருப்பினார் பிரட்டன்
சோளப் பொரி பொரித்தது போலே அப்போ
சொல்ல முடியாது ரேக்லா குண்டு

✡விலங்கின் உணவு. வெள்ளைக்காரன் உணவைத் தீனி என்றார்.

மலையப் பிளக்குது குண்டு அங்கே
மண்வாரிக் கொட்டுதே ரேக்லா குண்டு
கண்டானே திசை மதுரை கானன் அப்போ
கையினிலே இரண்டு முகப் பட்டாவை யெடுத்து
வீசினான் பாளையத்தில் விழுந்து கானன்
வீரியயமாய் துப்பாக்கிக் குண்டுக் கஞ்சாமல்
துப்பாக்கி யெடுப்பதற் குள்ளே பாதர்
சொல்லிச் சொல்லி மாட்டுறான் திசைமதுரைக் கானன்
பீரங்கி திருப்புவதற் குள்ளே அங்கே
புலி போலே வீசுறான் கான்சாய்பு நீலன்
பனங்காட்டு மைதான மெல்லாம் அப்போ
பனங்காய்போ லுருளுதே சிப்பாய்கள் தலைகள்
ஓடுதே பட்டாள மெல்லாம் அப்போ
உத்தமன் கான்சாய்பு துரத்தியே யடித்தான்
ஐந்து கும்பினி சிப்பாய் மார்கள் அங்கே
அதமா விழுந்திட்டார் பனங்காட்டு மன்னன்
மூன்றே முக்கால் நாழிகைக் குள்ளே கானன்
எதிரோடிநீர்த்தூளியா யடித்து
திரும்பியே திசைமதுரை கானன் பாதர்
தீரன் கான்சாய்பு துரை யரண்மனை போய்ச் சேர்ந்தான்

## பிரிட்டன் வருத்தம்

மகாராசன் துரை பெரிய பிரட்டன் அப்போ
மற்றதோர் சிப்பாய்களைக் கண்ணாலே கண்டு
எண்ணிக்கை பார்த்திட்டா னப்போ அதிலே
ஏழு கும்பினி சனம் குறைந்ததைக் கண்டு
வேலிக்கு நான் வைத்த முள்ளு இதிலே
காலுக்குப் பகையாக வந்ததென்று[79] சொல்லி
ஆண் பிள்ளை கான்சாய்பு நீலன் என்று
அரசர் புகழ் பிரட்டனுஞ் சந்தோஷப்பட்டு
மதுரைக்குப் பயண மென்று சொல்லி அப்போ
மன்னவன் பிரட்டன் முகம் ஏறிட்டுப் பார்த்து

## தளவாய் யோசனை

தளமந்திரி தாண்டவ ராயன் பாதர்
தைரியமாய் பிரட்டன் முகம் யேறிட்டுப் பார்த்து

---

79 -பழமொழி

பிசகாலே வினையை வைத்துப் போனான் துரையே
பின்னாலே சேனைகட்கு மோசம்வரும் சாமி
தும்பூரு கோட்டையை வாங்கி நல்ல
துரை மகனே திசை மதுரை சேரவேணு மென்றான்
நல்லதென்று துரை பெரிய பிரட்டன் தளத்தை
நடத்தியே தும்பூரு கோட்டை வந்துசேர்ந்து
நாலு புறம் பாளையத்தை யிறக்கி அந்த
நாழியில் மோர்சாவில் பீரங்கி யேற்றி
திடீரென்று ஒரு பளுத்தா தீர்த்தான் அப்போ
சேருகான பகல் முழுதும் எதிர்த்துப்போராடி
சாயங் காலம் யோசனைகள் செய்து தனது
சமேதா ரவுல்தாரை யழைத்தே சொல்வான்
ராத்திரி இருக்கக் கூடாது இருந்தால்
தப்பாமல் தலை யறுப்பான் பிரட்டனென்று சொல்லி
ராத்திரியே பாளையத்தைக் கூட்டி வெகுசாய்
நடத்திட்டான் திசை மதுரை விடியு முன்னாலே
கோட்டை யிலே யொருத்தரு மில்லை அப்போ
கூடாமல் தும்பூருக் கோட்டைக் குள்ளே
பாளையத்தை நடத்தி வைத்து அப்போ
பாங்கான மதுரைக்குப் பயணமென்று சொல்லி
நடத்தியே பட்டாளந் தன்னை அந்த
நாழிகையில் தெப்பக்குளம் வெளிக்குத் தெற்காக
அடித்தானே கூடாரம் பிரட்டன் அந்த
நாழிகையில் பிள்ளைமார் பாளையத்தை யிறக்கி
ஐந்து நாழிகைக்குள் பிரட்டன் பாதர்
அன்பாக வந்ததைக் கண்டானே கானு
இத்தனை பாளையங் களையும் பாதர்
எட்டு நாளைக்குள்ளே யடிப்பேன் நான்கானு

**கான்சாகிபு சபதம்**

பதினைந்து நாழிகைக் குள்ளாக தளத்தை
பஞ்சு பஞ்சா யடிப்பே னான் தானப்ப நாயக்கா
பிரட்ட னொரு தலையிருக்கு மானால் அவன்
பிடிப்பாண்டா யெப்படியுந் திசைமதுரை கோட்டை
பிரட்டனுட தலைவிழுந்து போனால் அப்போ
பருந்தெடுத்த குஞ்சல்லோ மம்முதலி சாய்பு
ஆர்க்காடு சென்னப்பட்டணம் வரைக்கும் அப்போ
அடித்திடுவேன் ஆற்காட்டை பிடித்திடுவே னானும்
சுபேதார வுல்தாரு மாரே நீங்கள்
சொன்னபடி கேழ்க்கிறேன் சிப்பாய் மாரே

அண்ண னில்லை தம்பி யில்லை யெனக்கு இப்போ
ஆதரவு கோட்டைக்கு ளொருத்தரு மில்லை
உங்களையே நம்பினே னானும் எனக்கு
ஒருவர் துணை யில்லையடா சிப்பாய் மாரே
மாசத்துக் கொன்பது ருபாய்[80] சம்பளம்
வாங்கியே தின்றீரே சிப்பாய் மாரே
ஐந்தாறு நாளைக்கு நீங்கள் நித்திரை
ஆகார மெல்லாம் விட்டிடுங்கள் சொன்னேன்
பெண்டாட்டி ஆசை வைத்த பேர்கள் என்
பின்னால் வரவேண்டாம் சிப்பாய் மாரே
இந்தச் சண்டை கெலித்தேனே யானால் உங்களுக்கு
இருவது பொன்னுத் தியோகங் கொடுக்கிறே நானும்
கைகளுக்குத் தங்கக் காப்புப் போட்டு உங்களை
கனமாக வைக்கிறேன் சிப்பாய் மாரே
என்று சொல்லி கான்சாய்பு துரையும் இப்போ
இதமாக ராமலிங்க கொல்லனை யழைத்து
நாலு வெகுமதியுஞ் செய்து அப்போ
நலமாக பீரங்கி திருப்பிவிடச் சொன்னான்

## கோட்டைக்குள்ளிருந்து போர்

திருப்பியே பாளயத்து மேலே கொல்லன்
தீர்த்திட்டான் குண்டுபோட் டைந்தாறு வேட்டு
பாத்திட்டான் பொல்லாத பிரட்டன் அப்போ
பட்டாளம் பளீரென்று உத்திரவு பண்ணி
ஒன்பது வெங்கல பீரங்கி துப்பாக்கி
ஒன்று மோர்ஜாமேல் திருப்பினான் பிரட்டன்
பிரட்டன் துரை பீரங்கி திருப்பி அப்போ
பிணக்காடா யடிக்கிறான் பொன்மதுரை தன்னை
கானனோ திருப்பிய பீரங்கி அங்கே
கணக்கில்லை தெப்பக்குளங் கொள்ள வில்லை குண்டு
மானங் கவுந்திட்டாப் போல அங்கே
வருகிறதே பிரட்டனிட பீரங்கிக் குண்டு
நெல்லு பொரி பொரித்தது போலே அப்போ
நிலந்தாவிக் கொல்லுதே சஞ்சீவி குண்டு
சோளப் பொரி பொரித்தது போலே பிரட்டன்
சொல்லிச் சொல்லி அடிக்கிறான் பீரங்கிக் குண்டு
கிழக்கு முகம் கொத்தளந் தனிலே ஒரு
குறுக்கு மூலைக் கோட்டைதனை யிடித்தான் பிரட்டன்

80 அக்காலச் சம்பளம் சிப்பாய்க்கு 9ருபாய்; மானம் -வானம்

பகலெல்லாம் பிரட்ட னிடித்தீட்டான் கானன்
ராத்திரி முப்பதுக்குள் கட்டி முடிப்பானாம்
இடிக்கவே யெடுத்தெடுத்துக் கட்டி கானன்
இருந்து சமாளித்தா னொருமாதம் வரைக்கும்
பகலிலே கோட்டையைப் பிடித்து பிரட்டன்
பல்லென்று விடிந்தவுடன் பார்த்திட்டா னப்போ
பழையபடி மதுராபுரிக் கோட்டை இருக்க
பார்த்திட்டான் பொல்லாத துரை பெரிய பிரட்டன்
இப்படியே கானு தைரியந்தான் நல்ல
தென்று சொல்லி ராத்திரியில் கள்ளச் சண்டை செய்தான்
தம்பூரு யடியாத படிக்குத் தனது
புள்ளாங் குழலங் கூதாத படிக்கு
ஏழு பட்டாளத்தைக் கூட்டி வண்டியில்
ஏழு ரேக்லா வேற்றி சீக்கிர மிருந்து
ராத்திரி பனிரண்டு மணிக்கு பிரட்டன்
ராசாதிபதி வந்து மதிலோரஞ் சேர்ந்தான்
முழங்குதே பீரங்கி முனைவேட்டு அப்போ
வீரன் கான்சாய்பு நீலனங் கேட்டு
ராத்திரிக்கு ராத்திரித் தானே தனது
லாயத்துக் குதிரைக்குத் தீனி வைக்கச் சொல்லி
பனிரண்டு மணி வேளைக் கெல்லாம் கானு
பாட்சாதி ராத்திரியில் மதிலோரந் தன்னில்
ஆயுதந் தனையுருவிக் கொண்டு கானன்
அதட்டியே பாளையத்தில் நுழைந்த மாத்திரத்தில்

**வண்டியூர் மைதானத்தில் போர்**

வந்திட்டான் கான்சாய்பு வென்று பிரட்டன்
மகாராசன் பட்டாளத்தைப் பளீரென்று சொன்னான்
ஆற்றுவெளி குதிரைகளை நடத்தி கானு
ஆண்பிள்ளை கைகலந்தான் வண்டியூர் வெளியில்
**வீசினான்** பொல்லாத கானன் அப்போ
விழுகுதே சிப்பாய் தலைகளொரு நூறு
குடல் சரிந்து விழுவாரும் அப்போ
குண்டிக்கால் சரிந்துமே தரையில் விழுவாரும்
இதுகண்டு துரை பெரிய பிரட்டன் தலையில்
இருந்த தொப்பியை யெடுத்து தரையி லடித்து
முன்கையைச் சீக்கிரம் கடித்து பிரட்டன்
முனையாகக் கொல்வோ மென்று சொன்னான்

முழங்குதே பீரங்கி வேட்டு அப்போ
மூவாயிரம் துப்பாக்கி பொழியுதே மலைமேல்
எஃனென்று நெருப்பா யொத்தாலும் கானன்
எண்ணால் மூன்று குதிரையுடன் வந்து
ஐந்துக்கும் பினிசனத்தைக் கொன்று கானன்
அப்போதே சேர்த்திட்டான் திசை மதுரைக் கோட்டை
பட்டாளத்தை யொன்றாகச் சேர்த்து பிரட்டன்
பாட்சா நவாபுக்கு எழுதினா னோலை

## பிரட்டன் நாவபுக்குக் கடிதம் எழுதுதல்

மணிக்கட்டிக் காயுத மெழுதி பிரட்டன்
மகாராசனனுப்பினான் திருச்சினாப் பள்ளிக்கு
தொண்ணூறு நாழிகைக் குள்ளே வந்து
சுருக்கமாகச் சேர்ந்தது திருச்சினாப் பள்ளியில்
சாயங்கால வேளையில் நவாபு தனது
தளத்துக் கெதிராக நிற்கும் வேளையிலே
மணிக் காகிதம் வந்துசேர அப்போ
மம்முதலி நவாப்பு சாயபு வாசித்துப் பார்த்து
இப்படித்தான் துரைதனை யழைத்து மகனைப்
பார்த்துக்கோ வென்று சொல்லிச் சொன்னார் நவாபு

## நவாபு மதுரைக்குப் புறப்படல்

நான் போறேன் திசை மதுரைக்கோட்டை வர
நாலு மாசமோ நாலு வருஷமோ தெரியாது
திருச்சினாப் பள்ளி யரண்மனையும் பாதர்
சிங்கமே பட்டாளஞ்சனமும்
முப்பது பட்டாளஞ் சனமும் நல்ல
மூணு ரிஜிமெண்டு சோல்ஜர்தார் மாரும்
வெகு சனமுங் கொண்டு பீரங்கி அப்போ
வெடிக்குண்டு புகைக்குண்டு பீரங்கி யேத்தி
ரேக்லா முப்பது வரைக்கும் அதிலே
நேய மூவாயிரந் துருப்புக் குதிரை
கானல் பீரங்கியையும் நடத்தி தனது
கனமான துரைமார்கள் பட்டாள மத்தனையும்
ஏறினா ரெயில் வண்டி[81] மேலே சாயபு
ஈஸ்வரன் நவாபுதுரை நடந்த மாத்திரத்தில்

81. - கான்சாகிபு போர்கள் நடந்த காலத்தில் ரயில்வண்டி கிடையாது. பிற்காலப் பாடகர்கள் கதை சொல்லும்பொழுது சேர்த்துக்கொண்டது.

மருந்து பொடிப் பீப்பாய்கள் முதலாய் தனது
வண்டியின் மேல் குண்டுகளுஞ் சாராயமு மேற்றி
கொடி முரசு தம்பூ ரடிக்க அப்போ
✡கோஷ்ட மிட்டே துலுக்கப் பட்டாளஞ் சூழ
வெள்ளை வெண்சமாரந் துலங்க நல்ல
விருது பெற்ற சிங்கக் கொடி முன்னின் றிலங்க
அடி படுதே குச்சி தம்பூரு அப்போ
ஆண்டவன் நவாபுதுரை புறப்பட்டான்
அளுந்தூர் வீதியுந் தாண்டி தனது
ஆஸ்தான விராலிமலைத் தொங்கலிலே வந்து
துவரங் குறிச்சியி லிறங்கி பாதர்
துரை பெரிய பிரட்டனக் காயித மனுப்பி
நத்தத்து லிங்கையனை யழைத்து அப்போ
நம்மன் குரிச்சிப்பூச் சேனையை யழைத்து
கருங்குளத்து நம்மைய நாய்க்கர் நல்ல
கனமான முள்ளிப்பட்டி முத்தப்ப நாய்க்கர்
ராமகிரி சாமைய நாய்க்கர் பாதர்
நலமான தோகைமலை பசவப்பா நாய்க்கர்
மாமுண்டி லெக்கைய நாய்க்கர் இப்போ
வார்த்தை யொன்று சொல்லுகிறேன் கவனமாய்க் கேளும்
நான் போறேன் திசைமதுரைக் கோட்டை நீங்கள்
நாளைக்குச் சேனைகளை யொன்றாகச் சேர்த்து
மதுரை வந்து சேரவேணு மென்று அப்போ
மம்முதலி துரையங்கே வுத்தரவு பண்ணி

**மதுரைக்குப் பயணம்**

துவரங் குறிச்சியுந் தாண்டி நல்ல
துடியாக நத்தத்து வீதியுந் தாண்டி
நத்தத்து மைதானமுந் தாண்டி அந்த
நாழிகையி லழகர் மலைக் கொம்பையுந் தாண்டி
ஆனை மலை முந்தலும் விட்டு
அசையாத தேவனூர் மைதானம் சேர்ந்து
இறங்கினார் மம்முதலி சாய்பு அப்போ
இயலான பட்டாளமெல்லா மிறங்கி

**கூடாரமடித்தல்**

இரண்டு நாழிகை வழி விஸ்தாரம் அங்கே
நலமான கூடார மடித்திட் டாரே

✡கோஷ்டம் - கோஷம்

ஒரு நெட்டு✡ கருப்புக் கூடாரம் அதிலே
ஒரு நெட்டு செங்காவிக் கூடார மடித்து
ஐந்து நாழிகை விஸ்தாரம் சாயபு
ஆள் சுற்றிப் பாராவுஞ் சீக்கிரமாய் வைத்து
✡ரோந்துகளுஞ் சுற்றிவரச் சொல்லி சாயபு
நூறு பேர் சோல்ஜர்கள் கையில் கத்தி கொடுத்து
பாராவுஞ் சீக்கிரமாய் வைத்து தனது
பாளையத்தை சாக்கிரதையாய் வைத்திருக் கையிலே

## கான்சாகிபுவின் பட்டாளத்தைத் தாக்குதல்

மதுரை வளர் கான்சாயபு நீலன் இந்த
வகையாக மம்முதலி வந்தவகை கேட்டு
தாதப்ப னரசப்ப னாய்க்கன் தனக்குச்
சரியான சேகுகான் பாவையு மழைத்து
முரசு வெள்ளைக் காரனையுமழைத்து கானு
முன்னிறுத்தி துரைமார்க்கு ஏது சொல்லலுற்றான்
தேனூரில் மம்முதலி வந்தான் நானும்
சீக்கிரத்தில் ராத்திரிக்கு பேட்டி பண்ணி வாரேன்
நான்போய் திரும்பி வருமட்டும் பிரிட்டன்
ராசாதிபதி துரைக்குப் பத்திரங் கோட்டை
என்று சொல்லி துரைகானு சாயபு குதிரை
எழுநூறு வரைக்குமே சீனி வைக்கச் சொல்லி
பனிரெண்டு மணிவேளைக் கெல்லாம் கானு
பார்த்திட்டான் குதிரைகளை வடக்குமுகம் நோக்கி
ராத்திரியே குதிரையை நடத்தி கானு
ரண்டாம்பே ரறியாமல் பாளையத்தை யடித்து
ஒளிவாக யிருந்திட்டா னப்போ விடிய
ஒண்ணரை நாழிகைக்கு முன்னதாய் துரைகள்
அன்பான கர்னல் துரையும் அதிலே
அக்கினி மயமான முசியார் பரங்கி துரையும்
சின்ன பிரிட்டனுஞ் சேர்ந்து அப்போ
துரைமார்கள் சிப்பாய் மார்களை வரிசையாய் நிறுத்தி
அடிச்சிட்டார் குச்சித் தம்பூரு எங்கும்
அதிருதே மைதான வெளியெல்லா மப்போ
இதுகேட்டு மதுரை துரைகானு சனத்தை
எழுப்பியே குதிரையின் மேல் சீக்கிரமா யேறி

---

✡நெட்டு -வரிசை ✡ரோந்து - round என்பதன் திரிபு

முதல் பாராக் காரனையும் வெட்டி ஒரு
✡மூச்சுக்குள்ளே பாய்ந்து பாளையத்தில் விழுந்து
இன்னம் வேறு நினைப்பு நினையாமல் கானு
எழுநூறு குதிரையிலே பாய்ந்திட்டா னப்போ
நீர்த்துளி யாடிவரும் போது பாளையம்
நெளிப்பதை மம்முதலி கண்ணாலே கண்டு
கால் பதறி மோசம் வந்ததென்று அப்போ
கனமான மம்முதலி மூர்ச்சையாய் விழுந்தார்
கண்டார்கள் துரைமார்க ளப்போ
கனகமுடி மன்னனைப் பல்லக்கில் வைத்து
தும்பூரு கோட்டையி னுள்ளே பாதர்
துரைமகன் நவாபு தன்னைத் தோத்த மாத்திரத்தில்
கலந்திட்டான் சாயபு வென்று மன்னன்
கனம் பெற்ற துரைமார்க ளணியணியாய் நின்று
முசியார் பரங்கி வெள்ளைக் காரன் களத்தை
முன்னெற்றி தொப்பி கழற்றிக் கீழே யடித்து
முன் கையை சீக்கிரங் கடித்து அப்போ
மூன்றணியாய் சனம் வகுத்து முட்டினான் சண்டை
எள்ளு பொரி கொள்ளு பொரி போலே அங்கே
ஏறுதே பொல்லாத ரேக்லா குண்டு
துப்பாக்கி சத்தத்தை பங்கே பார்த்து
சொல்லவே போகாது மைதான வெளியில்
அத்தனை குண்டிலே கானன் பயந்து
அஞ்சாதே வெட்டினான் பொல்லாத கானன்
வெள்ளரிக்காய் போலே கானன் அப்போ
வீசிவீசி யெறிந்திட்டான் சொல்ல முடியாது
கத்தி யெல்லாம் ரத்தமா யொழுக வெட்டி
கலைத்திட்டான் பாளையத்தை நிர்த்தூளியாக
ஐந்து கும்பினி சிப்பாய் மாணி கானு
அறுத்துமே குதிரைகளை நறுக்கி
துண்டு துண்டாக குதிரைகளை நறுக்கி அப்போ
துரைமகன் திருப்பினான் திசைமதுரை நோக்கி
தும்பூரி லிருந்து நவாபு திரும்பிச்
சுருக்கமாகப் பாளையத்தை சீக்கிரம் பார்த்து
அதிவீரன் கான்சாயபு கையால் அங்கே
ஐந்து கும்பினி சனம் விழுந்ததைப் பார்த்து
ஆண்பிள்ளை கெட்டியென்று சொல்லி நல்ல
அதிவீரன் துரைமார்க்கு தைரியஞ் சொல்லி

✡மூச்சுக்குள்ளே - மூச்சுவிடுமுன் - வினாடிக்குள்

மேசை பலகையி லிருந்து பாதர்
முனைவீரன் பிரட்டனுக் கெழுதினார் நவாபு

**நவாபு பிரிட்டனுக்குக் கடிதம் எழுதுதல்**

பசுமலை கானன் வாரானாம் நீயும்
பட்டாளந் துருப்போடே யெதிர்கட்டி மறைத்து
திருப்ப வேணுங் கானனைக் கிழக்கே என்று
சிங்காரப் பிரிட்டனுக் கெழுதினார் நவாபு

**கானன் - பிரிட்டன் போர்**

ஆயிரம் சனம் வரைக்குங் கூட்டி கானன்
அறுபது துருப்பு குதிரையுங் கூட்டி
ஏழு நல்ல பீரங்கி யோடே கானன்
எண்ணாமல் சாமந்தனில் வெளியி லிறங்கி
ராத்திரி யெல்லாம் வழி மறித்து கண்ட
பேருக்குத் தெரியமால் ஒளிவா யிருந்தான்
அப்போது துரை பெரிய பிரிட்டன் பாதர்
ஆண்பிள்ளை பல்லக்கு மேலேறிக் கொண்டு
பட்டாளத்தை முன்னே நடத்தி பிரிட்டன்
பசுமலைக்குப் பாளையத்தை நடத்தின வேளையிலே
எதிர்காட்டி கான்சாயபு துரையும் அப்போ
எழுப்பினான் பீரங்கி சொல்ல முடியாது
அதிலே பனிரெண்டு சிப்பாய்கள் தலைகள்
அதிர் வேட்டினா லறுந்த கூச்சலு முண்டாக
அப்போது துரை பெரிய பிரட்டன் சனங்கள்
அலங்கோல மானதைக் கண்ணாலே கண்டு
பல்லக்கு விட்டு கீழே யிறங்கி அப்போ
படை மன்னன் பஞ்ச கல்யாணியின் மேலேறி
பிரம்பு தனைக் கையிலே வாங்கி பிரிட்டன்
பின்னிட்ட சனங்களை வாங்கிட்டான் பளுத்தா
முன்னேறி தீனதீ னென்று சொல்லி சனங்கள்
முழித்துப் பாராமலே நடக்குதே மேற்கு
ஊரோவெள்ள சோல்தார் துரைகள் அப்போ
ஒழுங்காகத் தொப்பி கழட்டி யடித்து
முன்கையை கடித்தல்லோ துரைகள் அங்கே
முனைந்து பசுமலை நோக்கி நடந்து வந்திறங்கி
நவாபு சமுகத்தை நோக்கி அந்த
நாழிகையில் பல்லக்கு விட்டுக் கீழே யிறங்கி
தொப்பி கழட்டி சலாம் வாங்கிக் கொண்டார் அப்போ
துடியான நவாபு சாய்பேது சொல்ல லுற்றார்

வாங்கலையோ திசைமதுரைக் கோட்டை என்று
மம்முதலி வெகு கோபமாகவே சொல்ல

**நவாபு - பிரிட்டன் சந்திப்பு**

ஆண்டவனே மம்முதலி துரையே பிரிட்டன்
அன்பாக ஒருசேதி சொல்லுகிறேன் கேளும்
ஆட்டுக் கிடாதனிலே சாய்பு எனக்கு
ஐந்தாறு கிடாயாவது கொடுக்க வேணும்
எண்ணைக் கிடாவிலே சாய்பு எனக்கு
எழுபது கிடாக்கறியு மிப்போது கொடுத்து
ஏழு வண்டி சாராயங் கொடுத்தால் மதுரையை
எட்டு நாளைக்குள்ளே பிடிக்கிறேன் சிங்கம்
என்று சொல்லி பொல்லாத பிரிட்டன் அப்போ
எல்லோரையுங் கூட்டியே மதுரை வந்து சேர்ந்து

**மதுரைக் கோட்டை முற்றுகை**

மூலைக்கரை கொத்தளத்து மேலே அப்போ
மோர்சாவை யப்போ சீக்கிரம் வளர்த்தி
ஏழுநல்ல மோர்சா வளர்த்தி அதற்கு
ஏழுமூன் றிருபத்தொரு பீரங்கி யேற்றி
மூட்டினான் பீரங்கி சப்தம் வேட்டு
முழங்குதே கோட்டை மேல் மழைமாரி போலே
மூலைக்கரை கொத்தளத்தை நோக்கிக் குண்டு
மோதினதைக் கண்டல்லோ மதுரை துரைகானன்
படை மன்னர் தங்களை யழைத்து கானு
பயம் பிறக்க வொரு வயணமேது சொல்வானாம்
பகலெல்லாம் பிரிட்ட னிடித்ததுவை நீங்கள்
ராத்திரிக்கு ராத்திரியே கட்டவேணு மென்று
இடிக்க எடுத்தெடுத்துக் கட்டி அதிலே
இருந்து சமாளித்தான் மதுரை துரைகானன்
இது கண்டு துரை பெரிய பிரிட்டன் அப்போ
சமர் செய்த சேதிகளை சீக்கிர மெழுதி
சிங்கமே கான்சாய்பு நீலா ஒரு
சேதி நான் பிரட்டனிப்போ சொல்லுகிறேன் கேளு
இன்னமுன் பேரிலே கானு குண்டு
எண்ணி யொரு நூறிப்போ போட்டேனே யானால்
அதமாகி போவையடா கானு என்று
அப்போதே யெழுதியே யனுப்பிவிட்டான் பிரிட்டன்
மறுவயணம் மதுரை துரைகானு அப்போ
வயணமொரு சேதி யெழுத லுற்றா னப்போ

லட்சங் குண்டு மெவ்வளவு பிரிட்டா இன்னும்
அம்பதி னாயிரங் குண்டு அடித்தாலும் பிரிட்டா
அதற்கெல்லாம் பயப்பட மாட்டேன் உன்கையா
லானமட்டும் பாரென் றெழுதினான் கானன்
பகலெல்லாம் பிரிட்ட னிடித்ததனை கானன்
ராத்திரிக்கு ராத்திரியே கட்டி முடிப்பானாம்
இடிக்கஅவ னெடுத்தெடுத்துக் கட்டி அதிலே
இருந்து சமாளித்தான் வெகுநாள் வரைக்கும்

**நவாபு மதுரை வருதல்**

தேனூரி லிருந்த நவாபு மதுரை
சேர்ந்தவுடன் மைதானத்தில் கூடார மடித்து
பாளைய மிறக்கினார் நவாபு அதை
பாட்சாதி கான்சாய்பு பார்த்தேது சொல்வான்
மேற்கு முகம் பாரா விருந்தோரைப் பார்த்து
மூலைக் கோட்டைக் கொத்தளம் பத்திர மென்று
பாரா யிருக்கும் வேளையிலே பாதர்
ஜன்னல் துரை பிரிட்டனும் நச்சுக் ✗குழாயெடுத்து
ஏறிட்டு கிழக்கு முகம் பார்த்து பிரிட்டன்
எதிரில் நிற்கும் சிப்பாய்கட் கேது சொல்வானாம்
மீனாட்சி சன்னதிக் கெதிரா நமக்கு
செயமில்லை மதுராபுரிக் கோட்டைக் கென்று சொல்லி
பசுமலைக்குப் போக வேணுமென்று தனது
பாளையத்தை நடத்தினான் மேற்குமுகம் நோக்கி
அப்போ கான்சாய்பு நீலன் பாதர்
அனல்குண்டு புகைகுண்டு மூட்டிக்கொள் பிரிட்டா
கலங்காமால் நினைத்து நானிருந்தால் அப்போ
கானென்று மனதிலே நினைத்துக்கொள் ளென்று
மன்னவன் காயிதத்தி லெழுதி கானன்
மகாராஜன் பிரிட்டனுக் கனுப்பினா னப்போ
அப்போது துரை பெரிய பிரட்டன் அதற்கு
அனுப்பிய காயிதத்தை வச்சித்துப் பார்த்து
எழுந்தல்லோ மோர்சா வளர்த்தி அதற்கு
ஏழுமூன் றிருபத்தொரு பீரங்கி யேற்றி
மெழுகுச் சிலை ✡ கூடார மடித்து பிரிட்டன்
மூட்டினான் பீரங்கி சொல்ல முடியாது
வெம்பிச்சன் குண்டு மொருபக்கம் அதிலே
வெடிக்குண்டு புகைக்குண்டு மூட்டினான் பிரிட்டன்

✗ நச்சுக்குழாய் - டெலிஸ்கோப் ✡ மெழுகுச் சீலை - டார்பாலின்

கோட்டைக்குள் சனம் பொறுக்காமல் அப்போ
குபீரென்று மீனாட்சி கோயிலுக்கு வந்து
ஜனங்க ளெல்லாம் நின்று தவிக்கிறதை பாதர்
பெலமான கான்சாய்பு கண்ணாலே கண்டு
ரெண்டு கையில் நிமிசாவை வாங்கி கானு
நேரிட்ட மூலைக்கரை கொத்தளத்தைப் பார்த்து
இன்றைக்குக் கோட்டை பிழைத்தாக்கால் நாள்
எட்டானாலும் பிரிட்டனால் வாங்க முடியாது
பத்திரம் சிப்பாயி மாரே என்று
பாட்சாதி கான்சாய்பு அரண்மனை போய்ச் சேர்ந்தான்

**கோட்டைக்குச் சுரங்கம் வெட்டச் சொல்லுதல்**

மகாராஜன் பெரிய துரை பிரட்டன் அப்போ
வகையான கோட்டைக்குச் சுரங்கம் வெட்டச் சொல்லி
சுரங்கம் வெட்டின மாத்திரத்தில் பிரிட்டன்
துடியாக மம்முதலி சமூகத்தில் வந்து
ஐந்துநாள் கொள்ளை கொடுவென்று பாதர்
அனைவர் புகழ் நவாவைக் கேட்டிட்டான் பிரிட்டன்
அப்போது மம்முதலிசாய்பு பாதர்
ஆலோசனைகள் செய்து யேது சொல்ல லுற்றான்
மதுராபுரி பிடிப்பையே யானால் அப்போ
வைத்துக்கொள் ளைந்துநாள் கொள்ளை[82] யென்று சொன்னார்
மம்முதலி யுத்தரவு பெற்று பாதர்
மதிபதி பிரிட்டனும் சிக்கிரம் நடந்து
கூடாரந் தனில் வந்து சேர்ந்து பிரிட்டன்
கும்பலாய் சிப்பாய் மார்களைக் கூட்டி
ஆளுக்கொரு பிடிவராகன் கொடுத்து அப்போ
அனைவர்க்கும் தைரியம் வெகுவாகச் சொல்லி
சனங்களுக்கு உறுதிதனைச் சொல்லித் பிரிட்டன்
தயாராக ஏழு பட்டாளத்தைக் கூட்டி
எழுநூறு சோல்ஜர் களுடனே அப்போ
ஏணிமரம் பனிரண்டு கொண்டுவரச் சொல்லி

**சுரங்க வழியாய் கோட்டைக்குச் செல்லுதல்**

முன்னூறு வைக்கோல் பிரிவாங்கி பிரிட்டன்
முடிமன்னன் புறப்பட்டான் சொல்லப் போகாது

82. ஒரு கோட்டையைப் பிடித்தவுடன் நாலைந்து நாள் கொள்ளையடிக்க ராணுவத்திற்கு அனுமதி அளிக்கப்படும். அப்பொழுது கொள்ளையடித்ததெல்லாம் கொள்ளையடித்தவருக்குச் சொந்தமாகும்.

✡பிஸ்தோல் துப்பாக்கியை யெடுத்து கானன்
ஃபிலமாக வொன்றைத் தோட்டாவும் போட்டு

## பிரிட்டனுக்குக் காயம் படுதல்

குபீரென்று பிரிட்டன் மாருக்குக் கானன்
கோபமா யொரு பலித்தா தீர்த்திட்டா னப்போ
உருளைதனி லொரு குண்டு தைக்க பிரிட்டன்
உபாயமாய் பல்லக்கு மேலேறிக் கொண்டு
பசுமலைக்கு வந்த மாத்திரத்தில் பிரிட்டன்
பாட்சாவுங் காயம் பட்ட சேதிதனைக் கேட்டு
காயம் பட்ட பிரிட்டன் துரையே அப்போ
மனமான மம்முதலி கண்ணாலே பார்த்து
பிரிட்டனுக்குக் காயம் பட்டு போச்சு இனி
பலனில்லை பாளயத்துக் கென்றார் நவாபு
டாகு[85] துரை தன்னைக் கையிலே கொடுத்து
நானூறு விராகனைக் கையிலே கொடுத்து
எண்ணி யெட்டு நாளையிலே பிரிட்டன் துரையே
எழுந்திருந்து ஒருசாரி சண்டைக்கு நடந்தால்
பதினாயிரம் பொன் பெற்ற கிராமம் உமக்குப்
பாட்சா தருகிறே னென்றார் நவாபு
நல்ல தென்று டாக்டர் துரையும் அந்த
நாழிகை மருந்துகட்டி காயங்க ளாற்ற

## கேமல் என்பவன் பிரிட்டன் காயம் ஆறாமல் செய்தல்

ஆறிப் போன சங்கதி தன்னை கேமல்
ஆண்பிள்ளை யிதுசேதி காதாலே கேட்டு
புலி மயிரைக் கையிலே எடுத்து கேமல்
பிரிட்டனது கூடாரம் நோக்கியே வந்து
காயத்தைக் கண்ணாலே கண்டு பிரிட்டன்
காயமும் பட்டுதோ வென்று சொல்லிக் கேட்டு
காயத்தைக் கையாலே தொட்டு கேமல்
கண்வளரும் புண்வாயில் புலி மயிரை வைத்து
சீக்கிரமாய் கேமலுந் திரும்பி அப்போ
சீரான கூடாரஞ் சேர்ந்திட்டான் கேமல்[86]

---

✡பிஸ்தோல் - கைத்துப்பாக்கி

ஃபிலமாக - பலமாக (மதுரை பா.வ) 85. டாகுதுரை - டாக்டர்

86. கேமல் ஒரு அதிகாரி. இவன் பிரிட்டன் காயம் ஆறாமல் சாகச் சதி செய்தான். கான்சாகிபு கையாளாகச் செயல்பட்டானா அல்லது, பிரிட்டன் பதவி தனக்குக் கிடைக்க வேண்டுமென்பதில் இப்படிச் செய்தானோ என்று விளங்கவில்லை.

பிரிட்டன் துரைக்குப் பட்ட காயம் அப்போ
புண்ணாகி பொல்லாத தொந்தர வுண்டாகி
மன்னவ னிறந்தானே பனிரண்டு மணிக்கு பிரிட்டன்
மாராட்ட மயக்கங்கள் கண்டு
பிரிட்டன் துரை யிறந்த சேதி அப்போ

### மம்முதலி திரும்பிப்போக எண்ணுதல்

புண்ணியன் நவாபு துரை காதிலே கேட்டு
பிரிட்டன் துரை விழுந்து போனானே இனி
பலனில்லை பாளையத்துக் கென்றெண்ணி மனதில்
பாளைய மிங்கே யிருக்கட்டும் நாளை
பயணமென்று மம்முதலி சொன்ன மாத்திரத்தில்

### தளவாய் கூறல்

தாண்டவ ராய பிள்ளை கேட்டு அப்போ
தயவாக மம்முதலி துரையே
ஆண்டவனே மம்முதலி துரையே இப்போ
அன்பாக ஒரு வசனஞ் சொல்லுகிறேன் கேளு
பதினெட்டுப் பாளையக் காரரும் பிரிட்டன்
பட்டாளம் பனிரண்டு பசுமலை யிருக்க
முப்பது பட்டாளத் துடனே இங்கே
முடிமன்னா கோட்டை விட்டு வந்தீர் நவாபே
கானனைப் பிடியாமல் போனால் நம்மை
கண்டபடி ஏய்ப்பார்கள் பாளையக் காரர்கள்
பின்னாலே திருச்சினாப் பள்ளிக்கு கானு
பாளையத்தை கூட்டியே வந்திருவா னென்றான்
இது சேதி மம்முதலி கேட்டு தனது
இருதயங் கலங்கியே நவாபு துரையும்

### சண்டை செய்ய முடிவு

என்ன செய்யலாம் பிள்ளை மாரே என்று
ஈஸ்வர நவாபுதுரை கேட்டுட்டா ரப்போது
தாண்டவ ராயபிள்ளை அப்போ பாதர்
அதிபதி நவாபுதுரை யேறிட்டுப் பார்த்து
பாளையமும் நீருமிங்கே யிருந்து கொஞ்சம்
மாறட்டமாகவே சண்டை செய்தீ ரானால்
எண்ணி யெட்டு நாளைக் குள்ளாக வெளியில்
இழுக்கிறேன் கான்சாயபை பிடிக்கிறே னென்றான்
அது கேட்டு மம்முதலி சாய்பு பாதர்
இஞ்சிநீர் கேமலை[87] வரவழைக்கச் சொல்லி

87. இஞ்சிநீர்க் கேமல் - எஞ்சினீயர் கேமல்

இறங்கினான் சுரங்கத்து வழியே பிரிட்டன்
இதமாக ரண்டு கையில் நிமிசாவை வாங்கி
நாலுமுகஞ் சோதித்துப் பார்த்து அப்போ
நலமான பிரிட்டனும் வரும் வேளை தனிலே
விடியைந்து நாழி கைக்கும் அப்போ
விருது பெற்ற கானனும் அரண்மனைக்கு வந்து
கத்திபடே சாயபு கையில் கொடுத்து மதுரை
கான்சாய்பு நீலனும் நித்திரை போனான்
அப்போது சுரங்கத்தின் வழியாய் பிரிட்டன்
இறங்கினான் சனத்தோடு சொல்ல முடியாது
அகழிக்கு வைக்கோல் பிரியடைந்து பாதர்
அன்பான யேணிதனை கோட்டையின் மேல் சாற்றி
சாராய வெறி கொண்ட பிரிட்டன் சனத்தை
சாற்றினான் பிரம்பாலே யேறினார் மேலே
தீன்தீன் தீனென்று சொல்லி சனங்கள்
சீக்கிரமாய் மூலைக் கோட்டை கொத்தள மேலேறி
மூலக்கரை கொத்தளத்தைப் பிடித்தார் அப்போ
முனைவீரன் பிரிட்டனுஞ் செங்கோலை யன்றி
மூட்டினான் குச்சித் தம்பூரு பிரிட்டன்
மூன்று தரஞ் தம்பூரை முழங்கின மாத்திரத்தில்
அப்போது திசைமதுரை மீனாள் கானுக்
அழிவுவந்து நேர்ந்த தென்று மனதிலே யெண்ணி
பார்ப்பாரப் பெண் போலே வந்து கானு
பாதகன் தலைமாட்டில் பார்வதியும்[83] நின்று
சுற்றும் வினை வந்திருக் கையிலே உனக்கு
சுகமோடா [illegible]கான் சாயபு நீலா
என்று மார்புதனி லடித்திட்டாள் மீனாள்
மன்மதன் கான்சாயபு திடீரென் றெழுந்து
படே சாயபை யெழுப்பாத படிக்கு கானி
மகாராசன் ரண்டு கையில் நிமிசாவை வாங்கி
மின்காட்டுப் பாராவுந் தாண்டி கானு
மூலைக்கரை கொத்தளத்தை நோக்கி வரும்போது
தானுதுரை சிப்பாயி யொருவன் வந்து
கானுதுரை நீலனைச் சலாம் வாங்கிக் கொண்டு
ஆண்டவனே கான்சாயபு துரையே
ஆண்பிள்ளை துரை பிரட்டன் மூலைக்கோட்டை யேறி
தம்பூரு மூன்று ம்டித்து கோட்டை
தலைமூலைக் கரைதனைப் பிடித்திட்டான் பிரிட்டன்

83. இந்து சமயத்தினரான பாடகர் இப் புனை கதையை அமைத்துப் புகுத்தியுள்ளார்.

அத்தெரிப்பான் சோது லவுண்டி✡ கானு
ஆண்பிள்ளைச் சிங்கம் நானிங்கே யிருக்க
மூலக்கரை வாங்கினா னென்று லவுண்டி
முன்னலே யெண்ணாமல் கொல்லலாமோ வென்று
முதல் வெட்டு அவனை யங்கே ஒரு

## மூலக்கரை கொத்தளத்தில் சண்டை

மூச்சுக்குள் கொத்தளத்தின் மூலைக்கு வந்து
சிக்கந்தர் சாயபை நினைத்து அப்போ
திடீரென்று படிக்கட்டி லேறும் வேளையிலே
கொத்தளத்தின் மேலிருந்து பிரிட்டன் அப்போ
குபீரென்று பீரங்கி நேராத் திருப்பி
குட்டுப் போட்டொரு பலித்தா அடித்தான் கானு
கூசாமல் படிக்கட்டின் மீதேறி வந்து
முனைக் கத்தி வீசினான் கானன் அப்போ
முந்நூறு பேருடைய தலையறுந்து வீழ
வீசினான் பொல்லாத கானன் அப்போ
விழுகுதே சிப்பாய்க ளெல்லோரும் பயந்து
கண்டபடி வீசினான் கானன் அப்போ
கருப்புச் சட்டை சிப்பாய்க ளெல்லோரும் பயந்து
டேராவை கையிலே பிடித்து ஜனங்கள்
நேராக யேணி வழியிறங்கி வரும்போது
கானனது சொந்த சிப்பாய்கள் அப்போ
கனமான மூலக்கரை சேர்ந்த மாத்திரத்தில்
கொம்மைக்கு மூன்று பேருமாக அங்கே
கொத்தளத்தின் மதில் வழியாய் போய் நின்றுகொண்டு
அகழியி லிறங்கின சனத்தை கானு
அதமாக வெட்டியே நிர்த்தூளி பண்ணி
தாறுமாறாய் வெட்டி யிழுத்தெறிந்தான் அப்போ
சனங்க ளெல்லாங் கூச்சலிட் டோடினார் சிலபேர்
பிணக்காடாய் போச்சுதே மதுரை பாதர்
பிரிட்டன் துரை யப்போது பல்லைக் கடித்து
கனமான நச்சுக் குழாய்[84] எடுத்து மூலைக்
கரை நோக்கிப் பார்த்தவுடன் குதிரையின் மேலே
பசுமலையை நோக்கி வருகையிலே பாதர்
படைவீரன் கான்சாயபு ஏறிட்டுப் பார்த்து

✡இழிவான வசவுச் சொல்.

84. நச்சுக்குழாய் - டெலஸ்கோப்.

சும்மா யிருந்தோமே யானால் இந்த
திசை மதுரை சமஸ்தானம் பிடித்திடுவ தெப்போ
இந்த சேதி கேட்டவுடன் கேமல் அப்போ
ஏழு பீரங்கி மோர்ஜா மேலேற்றி
மூட்டினான் பீரங்கி வேட்டு ரட்டைக்
கோபுரங்க ளிடிந்தப்போ மட்டமாய்ப் போச்சு
இது கண்டு மதுரை துரைகானு அப்போ
இயலான தன்னுடைய சிப்பாய்களைப் பார்த்து
என்னென்று நெருப்பா யெரித்தாலும் கேம
லேற்றி யல்லோ திசை பிடிக்க வேணுமப்போ
பிரிட்ட னொரு தலையிருக்கு மட்டும் பாதர்
பிடிப்பானென் றெண்ணினேன் திசைமதுரை கோட்டை
பிரிட்டன் துரை விழுந்து போனா னிப்போ என்று

**கான்சாகிபு உறுதி**

பிரம்பு கையி லெடுத்தானே கான்சாயபு நீலன்
கத்திபடே சாயபு கையில் கொடுத்து துரை
கான்சாயபு அந்த மொழி பிரம்பு கையிலெடுத்து
பொக்கிஷ வீட்டைத் திறந்து கானு
புகழ் பெற்ற வெள்ளிப் பாளமெடுத்துக் கொண்டு வந்து
பாக்கு போல் வெள்ளியை யுருக்கி குண்டு
பாட்சாதி கான்துரை சீக்கிர முடித்து
கானனுட சவுரியந் தன்னை குண்டில்
கண்டப்போ எழுதினான் கான்சாயபு நீலன்
பனிரண்டு வருஷத்துக் குண்டு மருந்து
பட்டாக் கத்திகள் முதல் தயாரா யிருக்க
என்னுட னெதிர்த்து சண்டை செய்ய உன்னைப்போல்
எழுபது நவாபுகள் வந்தெதிர்த் தாலும்
✡துளாயிரம் மதுரை நகர்க் கொம்பை அதிலே
ஒரு கொம்பை யாகிலுங் கொடுப்பேனோ பாதர்
வீணிலே ஜனங்க ளுருமால் திரும்பி
மீண்டு போவென்று பளித்தா தீர்த்திட்டான் கானன்
கூடாரத் தருகாகக் குண்டு அப்போ
குபீலென்று விழுந்ததை நவாபுதுரை கண்டு

**கடிதம் வருதல்**

குண்டுகளை யெடுத்துவரச் சொல்லி பாதர்
குபீலென்று விழுந்ததை நவாபுதுரை கண்டு

✡துளாயிரம் -தொள்ளாயிரம்

குண்டுகளை யெடுத்துவரச் சொல்லி பாதர்
குபீலென்று மம்முதலி வாசித்துப் பார்த்து
வேலிக்கி நான் போட்ட முள்ளு இப்போ
காலுக்குப் பகையாக வந்துதே யெனக்கு
பிள்ளை யென்று நினைத் திருந்தேன் கானை இப்போ
புலியா யெதிர்த்தானே கான்சாயபு வென்று
நாலு முகம் பாளையத்தை வளைத்து சண்டை
நடத்தியே நவாபு யிருக்கும் வேளையிலே
கான்சாயபு அடை கோட்டை திறந்து அப்போ
கனமான சேனைகளை வெளியிலே விட்டான்

## தளவாய் தந்திரம்

✡சீனிச்சிரா வெளியில் வந்து ஆற்றில்
ஸ்நானஞ் செய்து தலையாற்றிப் போகும் வேளையிலே
தாண்டவ ராயபிள்ளை பார்த்து அப்போ
தந்திரமாய் ஆள்விட்ட ழைத்துவரச் சொல்லி
தீவாசுக் கம்பளியி லிருந்து அப்போ
திடமான பேச்சுக்களைக் சிலநேரம் பேசி
முன்கைக்குத் தங்கக் காப்பு கொலுசு நல்ல
மோகன மாலையுடன் கெண்டியுந் தரித்து
கருப்பூரத்துக் கொண்டைப் பாகை அப்போ
கனமான சீனிச்சிறாய் தலையில் தரித்து
துத்திப்பூ அங்கி யொன்று தரித்து தளவன்
சொல்லுகிறான் சீனிச்சிறாய் முகத்தை நோக்கி
கான்சாயபை நீபிடித்துக் கொடுத்தால் உனக்கு
கனமான திருநெல்வேலி பேட்டையைத் தாரேன்
திசைமதுரை தெவுலத்து[88] தாரேன் உனக்கு
திருப்புவனம் தாலூக்கை போட்டுத் தாரேன்
எழுநூறு குதிரைகள் தாரேன் நான்
ஏழானை ஏழொட்டை ⁑தருகிறே னுனக்கு
பத்தும் பத்தாத்துக்கு[89] சனி எங்கள்
பள்ளிமடைக் கோட்டைதனைத் தருகிறே னுனக்கு
இப்படித் தாண்டவனுஞ் சொல்ல அப்போ
இன்பமாக சீவிசிறா ஏது சொல்வானாம்

88. தெவுலத் - தெவுலத் என்ற பதவி
89. பத்தும் பத்தாத்துக்கு - இவையெல்லாம் போதாது என்றால்
✡சீனிச்சிரா - சீனிவாசராவ் என்பதன் மருஉ
⁑ஏழொட்டை - ஏழு ஒட்டகை.

அந்த மட்டும் நீகொடுத்தால் போதும் எட்டு
நாளைக்குள் கான்சாயபை பிடித்துக் கொடுத்திடுவேன்
அப்படியே தருகிறே னென்று தளவாய்
ஐயனுக்கு கைபோட்டு[90] கொடுத்த மாத்திரத்தில்

**சீனிவாசராவ் சதித்திட்டம்**

நல்ல தென்று சீனிச்சிறா வெழுந்து வெளியில்
நடந்தப்போ மதுராபுரிக் கோட்டை வந்து சேர்ந்து
அரண்மனையில் சாதமுண்டு சீனி அப்போ
ஆசார மேடையில் வந்தமர்ந்து கொண்டு
சேகு[91] தனை வரவழைக்கச் சொல்லி சீனி
திறன் மிறாசு வெள்ளைக் காரனையு[92] மழைத்து
மூன்று பேரு மாலோசனை செய்து அப்போ
முடிமன்னன் சீனிச்சிறா வேது சொல்ல லுற்றான்
சிங்கமே சேகுந்தா[93] கேளு
சேதி நான் சீனிச்சிராய் சொல்லுகிறேன் தம்பி
இனிமேலே மம்முதலி- சாயபு வடக்கு
எப்போதும் போகிற தில்லை மானே கேளு
பணத்துக் கொரு வெற்றியு மில்லை இப்போ
குடிக்கவுங் கொட்டாச்சி தண்ணீரு மில்லை
எவனாண் டிருந்தாக்கா லென்னடா துரையே
அவனாண்டிருந்தாக்கா லென்னடா துரையே
கானனைப் பிடித்துக் கொடுத்தால்
கனமான திருநெல்வேலிச் சீமை தாரேனென்றார்
திசை மதுரை தவுலத்துக் கொடுப்பார் நமக்குத்
திருப்புவனக் கோட்டையுந் தாரேனென்று சொன்னார்
எழுநூறு குதிரை தாரே னென்றார் நமக்கு
ஏழொட்டை ஏழானை தருகிறோ மென்றார்
பத்தும் பத்தாத்துக்கும் துரையே
பள்ளிமடை திருப்புவனந் தாரேனென்று சொன்னார்
பிடிக்க வேணுங் கான்சாயபு துரையை என்று
புண்ணியன்[95] சீனிச்சிராவ் சொன்ன மாத்திரத்தில்

---

90. கைபோட்டு - கைமேலடித்துச் சத்தியம்.

91. சேகு - சேகுகான். இவன் கான்சாகிபுவின் மெய்க்காவல் படைத் தலைவன். 92. வெள்ளைக்காரன் - மார்கசந்து முன்னர் குறிப்பிடப்பட்டிருக்கிறது. 93 சேகுகானை விளித்தல். 94. ராமன் ஆண்டால் என்ன, ராவணன் ஆண்டால் என்ன என்ற பழமொழியின் கருத்து. 95. புண்ணியன் - (எள்ளல் பொருள்)

நல்ல தென்று மூன்று பேரும் பேசி அப்போ
நாயகி மீனாட்சி யம்மாள் சந்நிதிக்கு வந்து
ஒருவருக்கு சொல்லுகிற தில்லை என்று
உத்தமர்கள்[96] மூவரும் உறுதியாய்ப் பேசி
கத்தி போட்டு சத்தியஞ் செய்த இவர்கள்
கனமாக மூவரும் அரண்மனை போய்ச் சேர்ந்தார்
ராசபர மேஸ்வரி மீனாள் பார்பாரப் பெண்போல மீனாள்
லோக நாயகியும் கானனானுக்கு மோசம் வந்ததென்று
பாதகன் தலைமாட்டில் வந்து நின்றுகொண்டு
உன்னுடைய உப்பு தின்று போட்டு கானு
உந்தனுக்கு ரண்டகம் நினைந்திட்டாரப்பா
இனிமேலே மதுரையி லிருந்தால் நீயும்
இறந்து போவாயடா கான்சாயபு துரையே
மலையாளம் போய்ச் சேரு கானு என்று
மதுராபுரி மீனாளுஞ் சொல்லினா ளப்போ
பார்ப்பாரப் பேய் வந்து லவுண்டி நம்மைக்
கட்டியே மிரட்டுதென்று கான்சாயபு துரையும்
திடீரென்று முழித்தப்போ பார்த்து கானு
சேதிகளை எவரோடுஞ் சொல்லம லிருந்தான்

**கான் சூழ்ச்சியில் அகப்படுதல்**

கானனும் சொந்த பட்டாளத்தை அப்போ
கணமாகக் கோட்டையில் பாராவும் வைத்து
சந்தோஷத் துடனிருக்கும் போது சீனி
தைரிய மாகவே யோசனைகள் செய்து
நூல்கயி றேழுகயி றெடுத்து அப்போ
நொடிக்குள்ளே மூன்று பேரு மொன்றாகக் கூடி
ஆலோசனை யுறுதியாய்ப் பேசி இவர்கள்
அரண்மனை வாசலுக்கு வரும் வேளை தனிலே
அடப்பக்கார படே சாயபு கண்டு அப்போ
அதட்டியே நிறுத்தி விட்டுத் தலைவாசல் தனிலே
ஏதடா சீனிச் சிறாவே இப்போ
இவ்விடத்தில் மூன்று பேரும் வந்தவகை யேது
உத்தர மில்லாமல் நீங்கள் இப்போ
உள்ளே வரவேண்டிய தென்ன வென்று கேட்டு
கான்சாயபு துரை யிடத்தில் வந்து இப்போ
கர்த்தனே சீனிச்சிராவி ரண்டுபேரைக் கூட்டி

96 எள்ளல் பொருள்

எமதூதரைப் போல சாய்பு இவர்கள்
இப்போதே மூன்று பேரும் வந்திருக்கிறா ரென்றார்
பார்ப்பானும் வந்தானே யானால் மூக்குப்
பொடிக்கவன் புகையிலை கேட்டு வருவாண்டா✡
முரசு வெள்ளைக் காரன் வந்தால் என்னை
தீனிக்கு மாடு கேட்க வருவாண்டா இப்போது
சேகுந்தான் வந்தானே யானால் நமக்குச்
சேதி சொல்ல வருவாண்டா அவனுமே தம்பி
வந்தாக்கால் வரட்டு மென்று சொல்லி கானு
வகையாக படே சாயபுக்குச் சொன்னா னப்போது

**சீனிவாசராவ் கான்சாகிபைக் கட்டிப் போடுதல்**

இது கேட்டு சீனிச் சிறாவும் நல்ல
இதமாக மூன்று பேருடன் வந்து சேர்ந்து
துரை மகனைச் சலாம் பண்ணிக் கொண்டு மூன்று
துரை மாரும் தயாராகப் பக்கத்திலிருந்தார்
சேகுந்தானந்த வேளையிலே பாளையத்தின்
செய்திகளைக் கானனுக்குச் சொன்னா னப்போ
பேச்சு மேல் மவுனமா யிருந்து அப்போ
பூபாலன் மதுரைதுரை கேட்கும் வேளையிலே
பிறகாலே யிருந்தப்போ சீனி எட்டிப்
பிடித்திட்டான் சாயபுவை ரண்டுகரங் கோர்த்து
மூன்று பேருஞ் சேர்த்த தென்று தெரிந்த மாத்திரத்தில் கானு
மோசம் வ:ந்து நேர்ந்த தென்று தெரிந்த மாத்திரத்தில்
மூன்று பேருங் கான்சாய்பைப் பிடித்து அப்போ
முடிமன்னனை மேஜைப் பலகையி லிறுக்கி
நூலுக் கயிற்றை யவிழ்த் தெடுத்து அப்போ
நொடிக்குள்ளே கானனைச் சேர்த்திறுக்கி விட்டான்
என்னை யேண்டா கட்டுகிறாய் சீனி உனக்கு
என்னென்ன மோசங்கள் செய்தேனான் சீனி
ஒன்றுக்கும் பிடிக்க வில்லை துரையே உம்மைச்
சம்பளப் பணத்துக்குப் பிடித்து வைத்தேன்
சம்பளத்தைக் கொடுத்த பிறகு உம்மைத்
தைரியமாய் அவிழ்த்து விடுகிறே னென்றான்
அப்போது கான்சாயபு துரையும் பாதர்
ஆண்பிள்ளை யொரு வசனமேது சொல்வானாம்
மதுரை மண்ணுள்ள வரைக்கும் உனக்கு
மாதச் சம்பளந் தாரேன் சீனிச்சிரா வென்று

---

✡சாகப்போவது தெரியாமல் கான்சாகிபு வேடிக்கையாகப் பேசுகிறான்

சொல்லக் சொல்ல இறுக்கிக் கட்டினதைப் பார்த்து
துரைகாடு கோபமாய் ஏது சொல்ல லுற்றான்
கட்டாதே துரோகிப் பயலே சீசீ எனது
கனத் துடம்பு நோவுதே அல்லாவே நபியே
என்னுடைய உப்பைத் தின்று போட்டு நீங்கள்
எனக்கே ரண்டகம் நினைப்பீரே யானால்
எங்கெங்கே போனாலும் பாவி உங்களுக்குக்
கிரணங் கொடுப்பாரோ சிக்கந்தர் சாயபு
சொல்லச் சொல்ல இறுக்கி யிறுக்கிக் கட்டித்
துரைகானை யறைவீட்டிற் போட்டே யடைத்து
பாராவும் பத்திரமாய் வைத்து சீனி
பார்ப்பானுந் தயாரா யிருக்கும் வேளையிலே
மாசாவு மிதுசேதி கேட்டு கானு
மகாராச னரண்மனைக்கு வந்து நின்று பார்த்து
என்னடா சீனிச் சிராவே இந்த
கூக்குர லேதென்று கேட்ட மாத்திரத்தில்
ஒன்றுக்கும் பிடிக்க வில்லை தாயே அவரைச்
சம்பளப் பணத்துக்குப் பிடித்து வைத்தேன்
சம்பளப் பணங் கையில் கொடுத்தால் நமது
சாயபு துரை கானனை விடுகிறே னென்றான்

**கான்சாகிபை நவாபிடம் ஒப்படைத்தல்**

நல்ல தென்று மாசா நடந்து அந்த
நாழிகையி லரண்மனை போய்ச் சேர்ந்த மாத்திரத்தில்
புறப்பட்டு சீனிசிராவ் வெளியில் வந்து
கானனிட பட்டாளம் நிற்பதைக் கண்டு
மாற்றியே மறுபாரா வைத்து உடனே
மன்னவனைப் பிடித்தே னென்று காயித மெழுதி
அனுப்பினான் பிள்ளைமார்க் கப்போ அதை
அன்பான பிள்ளைமா ரிவரும் வாங்கி
பிரித்தவர்கள் வாசித்துப் பார்த்து பாதர்
புண்ணிய நவாபுக்குச் சங்கதியைச் சொல்லி
கானனைப் பிடித்தது பொய்யென்று சொல்லி
காலாள்களை விட்டுப் பார்த்துவரச் சொல்லி
கோட்டைக்குள் நுழைந்து பார்க்கும் போது அங்கே
குறிப்பாக ஏனென்று கேழ்ப்பாரு மில்லை
கான் சாயபை பிடித்தது மெய்யென்று வந்து
காலாள்களும் நவாபுமுன் வந்து சொன்னார்
தாமோதரம் பிள்ளை தனை யழைத்து தனது
பட்டாளத்தைக் கட்டி யனுப்பின மாத்திரத்தில்

மதுராபுரி கோட்டையைப் பிடித்து அப்போ
வளர் சொக்க மீனாட்சித் தரிசனம் பண்ணி
கோட்டையைப் பிடித்த மூன்றா நாள் பாதர்
குபீரென்று மம்முதலி துரை வந்து சேர்ந்தான்
அரண்மனைக்கு முத்திரை போட்டு அந்த
மூலைக்கரை கொத்தளத்தில் பாராவும் வைத்து
கடைத் தெருவில் பாராவும் போட்டு நல்ல
கனமான ராசாவின் அரண்மனைக்குப பாரா
கான்சாயபு அரண்மனைக்குப் பாரா நல்ல
கனமான மம்முதலி கோட்டைக் குள்ளிருந்தான்
கோட்டை பிடித்த மூன்றா நாள் வெளியில்
கொண்டுவரச் சொல்லி கான்சாயபு துரையை
ரயில் வண்டி[97] கொண்டுவரச் சொல்லி கானு
உத்தமன் துரை மகனைக் கொண்டுவரச் சொல்லி
வண்டிக்குங் கானனுட துடைக்கும் கயிறு
வயணமாய்ச் சேர்த்திப்போ சீக்கிர மிறுத்தி
கண் விழிகள் கொண்டுந் தெரியாமல் கட்டிச்
காலுகை ரெண்டையும் பின்னாலே யிறுக்கி
எழுநூறு பேர் சுற்றிப் பாரா வைத்து
எச்சரிக்கை கான்சாயபு பறந்தோடிப் போவான்
கபர்தார்[98] எச்சரிக்கை யென்று சனங்கள்

**கான்சாகிபை நவாபு முன்னர் கொணர்தல்**

கப்பியே கான்சாய்பை வெளியில் கொண்டு வந்து
பாயு தேவடி முன்னே வந்து கானு
ராசாதிபதி கட்டைச் சீக்கிர மவிழ்த்து
கண்ணிரண்டு தெரிய அவிழ்த்து அப்போ
கைகட்டுங் கால் கட்டுஞ் சீக்கிர மவிழ்த்து
நவாபை சலாம் பண்ணு கானு என்று
ராசாதி பதிகளும் வாய் திறந்து சொன்னார்
அப்போது கான்சாயபு துரையும் பாதர்
ஆண்பிள்ளை நவாபு முகமேறிட்டுப் பார்த்து
கச்சக் கருவாடு விற்கும் லப்பை துலக்கப்
பயலேநீ போடா வண்ணாத்தி மகனே[99]
உன்னிடத்தி லகப்பட்டே னானும் என்னை
மூன்று நாளாய் வைத்திருக் கிறாயே பாவி

97. அக்காலத்தில் இல்லையென்று முன்னர் குறிப்பிட்டோம்.
98. கபர்தார் - (உருது) - சாக்கிரதை: எச்சரிக்கை
99. நவாபை வணங்காது கான்சாகிபு திட்டுகிறான்

நானுனக்கு அகப்பட்டாப் போலே இப்போ
நபாபுதுரை மகனேநீ அகப்பட்டையே யானால்
தேங்காயும் உன்சதையு மறுத்துத் தின்னச்
சொல்லி யடிப்பேண்டா கருவாட்டு லப்பே
அப்போது மம்முதலி சிரித்து நல்ல
ஆண்பிள்ளை கானனென்று மனதில் நினைத்து
ஏழரை வருஷங்க ளாச்சே கானு
இதமாகவே நல்ல மதுரை வந்து சேர்ந்து
தேடிய திரவியங்க ளெல்லாம் இப்போ
எங்கே யென்று கேட்டானே மம்முதலி துரையும்
என்னுடைய பணந் தின்ன சாயபு இப்போ
என்னுடைய பிள்ளைக ளில்லையோ நவாபே
என்னிடத்தில் சொல்லுகிற தென்ன என்று
ஒழுங்காகக் கேட்டானே கான்சாயபு துரையும்
மூன்று நாளன்னம் புசியாமல் இப்படி
முனை வீரன் கான்சாய்பு பேசுகிறா னென்று
சாதமுங் கொண்டுவரச் சொல்லி நல்ல
தாம்பாளங் கொண்டுவந்து வைத்து
சொம்பில் சலங் கொண்டுவந்து வைத்து அப்போ
சீரான பதார்த்த வகை கொண்டுவரச் சொல்லி
வெள்ளைத் தாம்பாளத்தில் போட்டு அப்போ
விதமான கான்சாய்பு முன்னெடுத்து வைத்தார்
அப்போது கான்சாயபு நீலன் பாதர்
அன்னம் வைத்த தட்டைக் கண்ணாலே பார்த்து
இடது காலாலே யுதைத் திட்டான் சாதம்
இதமான மல்லிகைப்பூ போலே சிதற
தீவாசு மேல் சாதம் சிதற அப்போ
சிங்கம் நவாபு துரை யேறிட்டுப் பார்த்து
ஆலோசித்து துரை மாரைப் பார்த்து இவனுக்கு
ஆக்கினை யென்ன வென்று கேட்டார் நவாபு
அப்போது துரைமார்க ளெல்லாம் கூடி
ஆலோசனை செய்து சாஸ்திரத்தைப் பார்த்து
சாஸ்திர முறையின் படியே அப்போ
சாயபுதுரை நவாபுக் கேது சொல்லலுற்றார்
ஆக்கினை யொன்று மில்லை துரையே இவனைச்
சும்மாவிடச் சொல்லி யிருக்குதென்று சொன்னார்
அப்போது மம்முதலி சாய்பு மனதில்
ஆயாச மாகியே கோபித்துக் கொண்டு
தூக்காம லிவனை நீங்கள் விட்டால் என்னைத்
தூக்குங்க ளென்று சொல்லி எழுந்திருந்து போனார்

## தூக்கில் போடுதல்

அப்போது கான்சாய்பைப் பிடித்து நல்ல
அழகான ரயில் வண்டி மேலேற்றி வைத்து
ஒற்றைத் தப்பட்டத்தை யடித்து வண்டியை
ஒளிவாகப் பாளையத்தை சுற்றியே யிழுத்து
பட்டமா மருகில் கொண்டு வந்து அப்போ
படை வீரர்கள் கானனுக்குக் கழுத்தில் சுருக்கிட்டு
ஏற்றினார் மாமரந் தனிலே கானு
இளப்புட னாயாச மொன்று மில்லாமல்
கிறுகிறென்று மூன்று தரஞ் சுற்றி அப்போ
கீழே விழுந்தானே கான்சாயபு துரையும்
மறுதரமுஞ் சுருக்கிட்டுத் தூக்க கானு
மன்னவனும் ரண்டு விசை கீழே விழுந்தான்
மூன்று தரங் கட்டித் தூக்க அப்போ
முனை வீரன் கான்சாயபு விழுந்திட்டான் கீழே
அப்போது கான்சாயபு துரையும் பாதர்
ஆண்பிள்ளை சிப்பாயி முகம் யேறிட்டுப் பார்த்து
என்னை யேண்டா வதைக்கிறீர் நீங்கள் என்று
இயல்பாக கானனுஞ் சிப்பாய்களைப் பார்த்து
மலையாளத்துப் பொம்பக்காள் கொடுத்த நல்ல
வச்சிரமணி நரிக்கொம்பு சிமிழினி லடைத்து
உச்சிப் பிடரிதனி லிருக்குதடா[100] அதை
உபாயமா யெடுத்தெறிந்து தூக்குங்க ளென்றான்
அப்போது சூரியினால் குத்தி சிமிழை
அறுத்தெடுத்து கான்சாயபை தூக்கிலே போட்டார்
ஏழு பேரை சுற்றிலும் வைத்து பாதர்
ஈஸ்வர நவாபுதுரை யிருக்கும் வேளையிலே
பிடித்துக் கொடுத்தானே பார்ப்பான் அவனைப்
பின்கட்டாய் கட்டியே கொண்டுவரச் சொல்லி
சீனிச்சிறாவே யொரு சேதி இப்போ
சிங்கம் நவாபுதுரை சொல்லுகிறேன் கேளு
அன்ன மிட்டோனைப் பிடித்துக் கொடுக்க உனக்கு
ஐந்து பஞ்ச பூதமுந் துணிந்ததோ பாவி

100. வீரர்கள், ராட்சசர்களின் உயிருக்கு ஆதாரமான தொன்று, ஒரு மறைவிடத்தில் இருப்பதாகக் கூறுவது நாட்டுக் கதை மரபு. அவர்கள் உடலுக்கு வெளியிலும் அது இருக்கலாம். இங்கு அவன் உச்சித் தலையில் இருந்ததாகச் சொல்லப்பட்டுள்ளது.

அவனுடைய வுப்பை நீதின்று பாவி
அனியாயமாய் பிடித்துக் கொடுக்க லாமோ வென்று

### சீனிவாசராவுக்குத் தண்டனை

என்மேலே தோஷ மில்லை சாய்பு என்னை
ஏமாத்தித் தாண்டவ ராயன் பிடித்துவரச் சொன்னான்
இப்படி சீனிச்சிராவ் சொல்ல அப்போ
இயலான மம்முதலி யவனுடைய கண்ணில்
பச்சைக் கற்பூரம் வைத்துக் கட்டு என்று
பாட்சா நவாபுதுரை சிப்பாய்களுக்குச் சொன்னார்
அவன் கண்ணில் பச்சைக் கற்பூரம் கட்டி
ஆணிபிள்ளை நவாபு துரை யிருக்கும் வேளையிலே

### சிப்பாய்களின் கனவில் . . .

தூக்கிலே போட்ட மூன்றா நாள் கானு
துரைமகன் சிப்பாய்கள் சொர்ப்பனந் தனிலே
என்னுடைய தங்கப் பிரம்பும் எனக்கு
மலையாளி கொடுத்த பொம்மக்கா மாணிக்கச் சொம்பும்
மாசாவிடத்தி லிருக்கிறதை வாங்கி வந்து
மாணிக்கச் செம்பு தண்ணீரைத் தெளித்து
பிரம்பாலே தட்டுவீரே யானால் தூக்கி
விட்டுக் கீழே குதிக்கிறேன் தம்பி
எல்லோரு மொன்றாகச் சேர்ந்து தம்பி
இட்சணமே மலையாளம் போய்ச் சேர்ந்திருந்து
மறு எட்டு நாளைக்குள்ளாக இந்த
மதுராபுரி சமஸ்தானம் வாங்கி நான் தாரேன்
இப்படி சொற்பனத்தில் கானு நல்ல
இயல்பாகச் சேதிகளை சொன்ன மாத்திரத்தில்
பாராக் காரர் கண்டு பயந்து அப்போ
பாட்சா நவாபிடத்தில் வந்து சொன்னார்கள்
இன்ன மிருக்கிறானோ கானு அவனை
இப்போதே யிறுக்கிவிட வேணுமென்று சொன்னார்

### கான்சாகிபு உடலைத் துண்டுதுண்டாக்கிப் புதைத்தல்

சுண்டு விரல்தனை யறுத்துப் பார்த்தார் ரத்தஞ்
சுறுக்காகப் புறப்படவே நவாபே துரை பார்த்து
கழுத்திலே பரங்கச் சூரி வைத்து மதுரைக்
கான்சாயபு சிரசினை சீக்கிர மறுத்து
கால் கையைத் துண்டு துண்டா யறுத்து மதுரைக்
கான்சாய்பை நாலு துண்டாக வெட்டி

நத்தத்தி லொரு கையை வைத்து அப்போ
நலங் கண்ட திண்டிக்கல்லி லொருகாலை வைத்து
இப்படி நாலு முகம் வைத்து அப்போ
ஈஸ்வர நவாபு துரை கூடாரம் வைத்து
சந்தோஷ மாகி நவாபு அப்போ
சலுதியா யிருபிள்ளை மார்களை யழைத்து
அரே பிள்ளை தாண்டவ ராயா நீ
அன்று சொன்ன கீரிடத்தைத் தருவையோ வென்றார்
அப்போது தாண்டவ ராய பிள்ளைநீ
அகமகிழ்ந்து நவாபை ஏறிட்டுப் பார்த்து
சோழவர மென்னு மூரை உனக்குத்
தோரணச் சீட்டெழுதித் தந்திட்டே னென்றான்
முறிசீட்டை கையிலே வாங்கி அப்போ
முனைவீரன் மம்முதலி சந்தோஷப் பட்டு
திருச்சினாப் பள்ளிக்கு நான் போரேன் நீங்கள்
சீக்கிரமா யரண்மனை போய்ச் சேருமென்று

## நவாபு திருச்சிக்குப் போதல்

பிள்ளை மார்க்குப் புத்திமதி சொல்லி அப்போ
புகழ் பெற்ற சேனைகளை யொன்றாய்க் கூட்டி
மதுரைக்குத் தைனாத்து வைத்து பாதர்
மம்முதலி பாளையத்தை வடக்குமுகந் திருப்பி
திருச்சினாப் பள்ளிக்கு நவாபு போய்ச்
சேர்ந்தபின் முல்லைமணித் தாண்டவ ராயன்
மாஷாவின் அரண்மனைக்குச் சென்று அந்த
மங்கையைத் தாண்டவனும் ஏறிட்டுப் பார்த்து
தங்கச்சி மாஷாவே கேளு உனது
தலைவிதி யிப்படி முடிந்ததுவே தாயே
ஒன்றுக்கும் அஞ்சாதே தங்காய் உனக்
கொன்றுங் குறைவில்லை நானிருக்கும் வரைக்கும்
திருப்புவனம் வாருமம்மா வென்று அப்போ
தேருதலை✡யாகவே தாண்டவனும் சொல்ல
அப்போ மாஷாவும் மகிழ்ந்து அண்ணே
அன்பாக ஒரு வசனஞ் சொல்லுகிறேன் கேளு
மலையாளம் போரே னானண்ணே நீ
மனதிலே கவலை வைக்க வேண்டா மென்று சொல்லி
மைந்தனைக் கையோ டழைத்து அப்போ
மதுரை விட்டு மலையாளம் நடந்து விட்டாள் மாஷா

✡தேருதலை - தேறுதல் மொழி

மாஷாவும் நடந்த பிற்பாடு மிக்க
மகிழ்ச்சியாய் பிள்ளைமார் பாளையத்தை கூட்டி
கிழக்கு முகமாகவே நடந்து அப்போ
சிங்கா சனாதிபதி சிவகங்கை சேர்ந்து
முத்து வடுகையரைக் கண்டு நல்ல
முனைவீரர் சந்தோஷச் செய்திகளைச் சொல்லி
கான்சாயபு பயம் போச்சு தென்று ஐயோ
களிப்புடனே பிள்ளைமா ரரண்மனை போய்ச் சேர்ந்தார்

## வாழ்த்து ✡

கான் சாயபு கதை தன்னைப் படிக்க செய்த
கர்ம வினைகள் காதவழி யோட
மாத மும்மாரி மழை பொழிய இந்த
மண்டலத்தின் மன்னவர்கள் செங்கோல் தழைக்க
நேசமுடன் கான் சாயபு கதையை இந்த
நீனிலந் தன்னிலே நித்தம் படிப்போர்
தேசம் திலதிக நாளிருந்து
சீமானெனப் பெருகிச் செல்வந் தழைக்க
பாண்டியன் மகள் மீனாளைப் போல அதிக
பாக்கிய மென்மேலும் பெருகி யுண்டாக
திருப்பதி மலை ரங்கர் வாழி நல்ல
சீதா பிராட்டியுடன் உமையவளும் வாழி
தென் மதுரைச் சொக்கையர் வாழி எங்கள்
தேன்மீனாள் கயற் கண்ணியும் வாழி
மயிலேறு வேல் முருகா வாழி குற
வள்ளிதெய் வானையுடன் மலர்மகளும் வாழி

---

✡வாழ்த்துப் பாடலில் எல்லாத் தெய்வங்களையும் கூறல் நாட்டுப் பாடல் மரபாகும். நாட்டுப் பாடலை கேட்போரில் பல தெய்வங்களையும் வணங்குபவர்கள் இருப்பார்கள். அவர்களுடைய ஆதரவு பெற அவரவர்கள் தெய்வத்தைப் பாடகர் வாழ்த்துவார்